சிவமயம்

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க

திருக்கயிலாய பரம்பரை

திருக்கோவலூராதீனம் - திருப்பாதிரிப்புலியூர்

ஸ்ரீமத் ஞானியார் மடாலயத்தில்

ஐந்தாம் முறை குருமூர்த்திகளாக எழுந்தருளியிருந்த

ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான

சிவாசாரிய சுவாமிகள்

# வாழ்க்கை வரலாறு



இது

திருக்கோவலூராதீனம் - திருப்பாதிரிப்புலியூர்

ஸ்ரீமத் ஞானியார் மடாலயத்தின் ஆறும்முறை தலைவர்

ஆக தற்போது எழுந்தருளியிருக்கும்

ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக சத்தியஞான சிவாசாரிய சுவாமிகளின்

திருவுளக் குறிப்பின்படி

திருக்கோவலூர் போர்டு ஹைஸ்கூலின் முன்னைய தலைமைத் தமிழ்ப்

பண்டிதரும், கோவல் தமிழ்ச் சங்கத் தலைவருமான

வெண்ணெய்நல்லூர்

திரு. வடிவேல் முதலியாரவர்களால்

திரட்டி எழுதப்பெற்றது

சாது அச்சுக்கூடம்

இராயப்பேட்டை, சென்னை

சர்வதாரி – வைகாசி

1948

உ

சிவமயம்

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க

திருக்கோவலூராதீனம் - திருப்பாதிரிப்புலியூர்
ஸ்ரீமத் ஞானியார் மடாலயத்தில் தற்போது
ஆறும் முறைத் தலைவராக எழுந்தருளியிருக்கும்
**ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக சத்தியஞான சிவாசாரிய சுவாமிகள்**
அளித்தருளிய

# முன்னுரை

சைவ சமயமும் தண்தமிழ் மொழியும் வளர அரும்பாடு பட்டவர்கள், நம் மடாலயத்தில் ஐந்தாம்முறை அடிகளாராக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளவர்கள் ஆவார்கள். செந்தமிழ் நாட்டில் அவர்களை அறியாதாரில்லை.

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் திருவருட் கலப்பெய்தியபின் அவர்களின் சரித்திரத்தை நன்முறையில் எழுதி வெளியிட வேண்டுமென விரும்பினம். அவ்விருப்பத்தை விரைவில் பூர்த்தி செய்விக்க வேண்டுமென அன்பர் பலர் வற்புறுத்தியும் வந்தனர்.

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளிடம் நீண்ட காலம் நெருங்கிப் பழகியவரும், அவர்களின் மாணவர்களில் ஒருவருமான திருக்கோவலூர் - தமிழ்ப் பண்டிதர் திரு. வடிவேல் முதலியாரவர்கள், தம் அனுபவத்தைக் கொண்டும், பிற உதவி கொண்டும் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளின் சரிதத்தை எழுதித் தந்தார்கள்.

இதனைச் சிறிது காலத்திற்கு முன்னரே வெளியிடக் கருதியிருந்தோம். காகிதம் வாங்க அரசாங்கத்தினரின் அனுமதி அண்மையில்தான் கிடைத்ததாகலின் தற்போது வெளியிட நேர்ந்தது.

புதுவை, கிரங்தே - சிவ சச்சிதானந்த செட்டியாரவர்களும், சென்னை-பழயகாட் கம்பெனியைச் சேர்ந்தவரான, மஞ்சக்கொல்லை - ரா. சம்பந்தமூர்த்தி முதலியாரவர்களும் வேண்டுமளவு காகிதம் வாங்கித் தந்த உதவி என்றும் மறக்கற்பாலதன்று.

இந்நூல் வெளிவரப் பல்வகையிலும் உதவி புரிந்த அன்பர்கள் அனைவரும் நிறைந்த இன்பந் துய்த்து நீடூழி வாழ எங்கள் ஆண்டவனாகிய முருகப் பெருமான் திருவருள் முன்னின்று துணை புரிவதாக.

திருக்கோவலூர்,
சர்வசித்து௵
பங்குனிமீ ௪௨

**சுவாமிகள்,**
தலைவர் - ஞானியார் மடாலயம்

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# முகவுரை

ஸ்ரீலஸ்ரீ - சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் இத் தலைமுறையில் தமிழகத்திற்குப் பெருஞ்சிறப்பளித்த தலையாய வொரு சான்றோர். இப்பெரியார் கி பி. 1873-ல் அவதரித்தார். கி. பி. 1942-ல்—தமது 69-ம் ஆண்டில்—சிவலிங்க ஐக்கியமாயினர். இவர் நடாத்திய வாழ்க்கை பல அருமைப் பாடுகளையுடையது; பொது நலத்தைப் பரந்த அளவில் வளர்த்த பண்பொடும் திகழ்வது. எனவே, இவர் வாழ்க்கை வரலாற்றை இக்காலத்தினரும் பிற்காலத்தினரும் முறைப்பட அறிதல் மிகவும் அவசியமாகும்.

நம் நாட்டுப் பெருமக்கள் பலரது வரலாறுகளை அவர்கள் காலத்து அறிஞர்கள் ஒழுங்காக எழுதிவைக்காமற் போயினர். இதனால் அப்பெரியார்களைப் பற்றிப் பல கற்பனைக் கதைகள் தோன்றலாயின. இந்தியர்க்குக் கிடைத்த ஆங்கிலக் கல்வியில் குறைகள் சில உள என்று பலர் கூறுப. இது ஓரளவு உண்மையா யிருப்பினும் அதனால் விளைந்த பெரிய நன்மைகளும் பல உள. அவற்றுளொன்று உண்மைச் சரித்திர முறையில் தக்கார் வரலாறுகளை அவர் காலத்திலேயே எழுதும் நோக்கமும் செயலும் தோன்றியமை என்னலாம். தமிழ்ப்பெருங் கிழவர் - மகா மகோபாத்தியாயர் - டாக்டர் - உ. வே. சாமிநாத ஐயரவர்கள் இயற்றிய **ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரமும், திரு. வி. க. அவர்கள்** எழுதிய தம் **வாழ்க்கைக் குறிப்புக்களும்** சிறந்த எடுத்துக் காட்டுக்களாம்.

**ஞானியாரடிகள் வாழ்க்கை வரலாறு** என்னும் இந்நூலும் இச் சரித்திரவுணர்ச்சியுடன் எழுதப் பெற்ற தொன்றே. இதனை இயற்றியவர் திருவெண்ணெய்நல்லூர் - திரு. வடிவேல் முதலியார். இவர் அடிகளாரின் மாணவர்களுள் ஒருவர்; அவர்களோடு பல ஆண்டுகள நெருங்கிப் பழகியவர்; அவர்கள் அருளாசி பெற்றுள்ளவர். இந்நூல், அறுபத்தொரு உட்பிரிவுகளைக் கொண்ட மூன்று பெரும் பகுதிகளை யுடையது. இறுதியில் ஓர் அநுபந்தமுமுள்ளது. அதனில் 19 புலவர்கள் சுவாமிகளின் பிரிவாற்றாது பாடிய இரங்கற் பாக்களும் உரைநடையில்

பல அறிஞர்கள் வரைந்தனுப்பிய இரக்க உரைகள் முதலியவைகளும் தொகுக்கப் பெற்றுள.

இந்நூல், ஞானியார் மடத்தின் வரலாற்றை முதலிற் கூறி, பின்னர் நம் அடிகளாரின் குடிமை, பிறப்பு, கல்வி, புலிசையில் 1889-ல் ஐந்தாவது குருமூர்த்திகளாகப் பட்டமேற்றல் என்பவற்றை விரித்துரைக்கின்றது. பின்பு அடிகள் மடத்திலிருந்தும், யாத்திரைகள் பல செய்தும் தமிழுக்கும் சைவத்துக்கும் அரும் பெரும் தொண்டாற்றியதையும், ஞானியார் மடங்களைச் சீர்ப்படுத்தியதையும் விளக்குகின்றது. திரு. வி. க. அவர்களும், ராவ்சாகிப் - கே. கோதண்டபாணிப் பிள்ளையவர்களும் சுவாமிகளைப் பற்றி எழுதிய குறிப்புக்கள் இந்நூலின் 34, 35-ம் பிரிவுகளாக எடுத்துச் சேர்க்கப்பட்டுள்ளன. இவையும், நூலாசிரியரே 45-ம் பிரிவில் " அடிகளாரிடமுள்ள சில அரிய பண்புகள் " என்னும் தலைப்பின்கீழ் எழுதியுள்ள குறிப்புக்களும் சிறப்பு வகையில் படித்து இன்புறத் தக்கவை. 113, 114-ம் பக்கங்களில் அடிகளின் திருவோலக்கப் பொலிவையும், சொற்பொழிவின் மாண்பையும் பற்றித் திரு. வி. க. தந்துள்ள வருணனை இணையற்ற எழிலுடன் இலகுகின்றது.

இவற்றையெல்லாம் படிப்போர் ஞானியார் அடிகளை நேரிற் காணும் பேறு பெறாதவரா யிருப்பினும் பெற்றவரை யொப்பவே பேருணர்ச்சி கொள்வர். அடிகள் தமிழகத்துப் பண்டைச் சான்றாண்மைக்கோர் மலையிலக்காய்த் தோன்றி அறிவன்புத் திருத்தொண்டாற்றிய சிவநெறித் தலைவர். அழுத்தமான தெய்வ நம்பிக்கையுடையவர் : சிவவேடப் பொலிவுடன் அநுதினமும் முருகவேளை அகத்தும் புறத்தும் அன்புடன் தொழுபவர். " நாயகன் சேவடி தைவரு சிந்தையர் ". ஆறு திக்குகளிலிருந்தும் அறுமுகன் தம்மை எப்பொழுதும் காண்கின்றான் என்னும் உணர்வுடன் தமது வாழ்நாளின் ஒவ்வொரு கணத்தையும் கழித்தவர். அவ்வுணர்ச்சி விளைவாகவே அடிக்கடி ' சண்முகா !' ' சண்முகா !' என்றும் சொல்லினர். ஒழுக்கத்தா லுயர்ந்தவர். மாட்சியும் எழிலும் கருணையும் பொருந்திய காந்தமலையென எவரையும் அன்பாற் றம்பாலீர்க்கும் ஆற்றல் உடையவர். தமிழ்மொழி வடமொழிக் கடல்களின் நிலைகண்டுணர்ந்து, ஆங்கிலத்திலும் போதிய அளவு அறிவு பெற்று, வியக்கத்தக்க தம் இயற்கை அறிவு நுட்பத்தால் எக்கூற்றின்

மெய்ம்மை பொய்ம்மையையும் எளிதிற் காணவல்ல பேரறிஞர். சைவ மடத்தின் தலைவரேயாயினும், பிறநாட்டு நல்லறிஞர், சான்றோர்களின் செவ்விய கருத்துக்களை வரவேற்றுப் போற்றும் உயர்ந்த நோக்கமும் விரிந்த அறிவுமுடையவர். கற்றோரும் கல்லாரும், முதியரும் இளைஞரும், ஆண்களும் பெண்களும், தம் சமயத்தவரும் பிற சமயத்தவரும், எல்லா வகுப்பினரும் பலமணி நேரம் தம்மை மறந்து தூய இன்ப அன்பு வாரிதியில் திளைக்குமாறு செய்யவல்ல இணையற்ற நாவலர்.* மாணவர்க்குப் பல்வகை நூல்களைப் பாடஞ் சொல்லுதலில் இணையற்ற போதகாசிரியர். அருமையில் எளிய அழகுடை நடையினர். அளவிடற்கரிய நினைவாற்றல் படைத்தவர். அறிவில் மலைபோன் றுயர்ந்ததுபோல அன்பில் கடல்போன்று விளங்கியவர். தம்பால் அன்புடையாரை என்றும் மறவாதோம்பும் இயல்பினர். பகைமையாலோ அறியாமையாலோ பிறர் தம்முன்பு கக்கும் நஞ்சினை அமுதமாக்க வல்ல சபாநாயகர், உடற்கோ மனத்திற்கோ வரும் கொடிய துன்பங்களை யெல்லாம் சண்முக நினைவினால் பொறுத்துக்கொண்டு, இடைவிடாத் தொண்டாற்றிவந்த கரும வீரர். இவர்தம் ஆயுளின் கடைசிநாள் வரையில் ஞானத்தொண்டாற்றி, “ நோயிற் கிடவாமல், நொந்து மனம் வாடாமல், பாயிற் கிடவாமல்” பழநிப் பரமன் திருவடி நீழலை அவ்வாண்டவனுக்குகந்த தைப்பூசப் பெருநாளிலேயே அடைந்துவிட்டார்.

சைவ உலகில் தனிஞாயிறென விளங்கிய ஞானியார் சுவாமிகள் செய்துமுடித்த பெருங்காரியங்களுள், பாண்டித்துரைச் சாமித்தேவரவர்களைக் கொண்டு **மதுரைத் தமிழ்ச் சங்கத்தை** 1901-ல் தோற்றுவித்தது முதற்கண் குறிக்கத்தக்கது. 1905-ல் **சைவ சித்தாந்த மகா சமாஜத்**தைத் தமது புலிசை மடாலயத்தில் மறைமலையடிகள், J. M. நல்லசாமிப் பிள்ளையவர்கள் என்னும் அறிஞர்கள் துணைகொண்டு தொடங்கி வைத்தமையும், 1929-ல் தமது ஆதரவில் மறைமலையடிகள் தலைமையில்

*1913ம் ஆண்டு வேலூரிற் கூடிய சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் ஆண்டு விழாவில் யான் கண்ட அடிகளார் திருக்கோலமும், கேட்ட அவர்கள் அற்புதச் சொற்பொழிவும் 35 வருடங்களாகியும் இன்று நிகழ்வன போல என் மனக்கண்முன் நிற்கின்றன.

சைவப் பெரியார் மாநாட்டைக் கூட்டி, அதற்குச் சில மாதங்கட்கு முன்பு திருநெல்வேலியிற் கூடிய **சைவப் பெரியார் தனிக்கூட்டம்** ஆய்ந்து வெளியிட்ட சமய சமுதாய சீர்திருத்த முடிவுகளைச் சைவப் பொதுமக்கள் கூட்டத்தில் வெளியிடச் செய்து தற்காலச் சைவ உலகிற்கு மெய்வழி காட்டுவித்தமையும், அடுத்தாற்போல் கருதத்தக்கன. சுவாமிகள் தமது நேர்ப்பார்வையில் தமிழ்ப்பள்ளியொன்று தொடங்கிப் பெருந் திறமை யொடு நடத்தி வந்ததும், பல மாணவர்களைத் தமிழ்ப் புலவர்களாகவும் திறமைமிக்க பேச்சாளர்களாகவும் செய்ததும், பல ஊர்கட்கு யாத்திரை செய்து தமிழ்ச் சங்கங்கள் தோற்றுவித்ததும் மறக்கக் கூடியவையல்ல. இங்ஙனம் அறிவுத் துறையில் தமிழையும் சைவத்தையும் வளர்த்த தோடு, நம் சுவாமிகள் சிறிதுகாலம் ஸ்ரீ பாடலேசுவரர் திருக்கோயில் தருமகர்த்தராகவும் இருந்து பிற தருமகர்த்தர்கட்கு ஒரு வழிகாட்டியாய்க் கோயிலாட்சியை நடத்திக் காட்டினார்கள். விவரங்களை யெல்லாம் இந் நூல் இனிது விளக்குகின்றது. சுவாமிகள் தம்மறிவாற்றல்களின் மாட்சிக் கேற்ப எழுத்து வடிவில் போதிய பணிபுரியத் திருவுளங் கொள்ள வில்லை. பெரியோர் வாக்குக்கள் முன்னமிருப்பவையே போதும் என எண்ணியிருக்கலாம். அவர்கள் செய்யுளியற்றும் திறனை இந்நூலின் 168—170-ம் பக்கங்களிலுள்ள **திலகவதி அம்மை துதி**யிற் காணலாம்.

சிவத்திரு - ஞானியாரடிகள் போன்ற சான்றோர் ஒரு சிலரை யேனும் ஒருநாடு பெறுவதாற்றான் அது பொன்றுப் பெருமையுறுகின் றது. புலவர்களும், மடாதிபதிகளும், கோவிலாட்சியாளர்களும், செல்வர் களும் நம் அரும் பெறல் அடிகளார் குணஞ் செயல்களை அன்புடன் கூர்ந்து நோக்கினால் நன்மை பெருகுதல் திண்ணம்.

சுவாமிகள் புரிந்த உயரிய தொண்டுகட்கு நன்றிகாட்டும் வகையில் தக்க நினைவுக்குறிகள் நிலை பெறுத்தல் தமிழர் - சைவர் - கடன். இந் நூலின் 200-ம் பக்கத்தில் இது குறித்து அதனுசிரியர் விடுத்துள்ள விஞை நெஞ்சுருக்கும் நீர்மையது. சைவ சித்தாந்த மகாசமாஜம் சுவாமிகள் நினைவு நிதியொன்று சேமித்துள்ளது. அதனை எம்முறையில் பயன் படுத்தல் சிறப்பாகுமென ஆராய்ந்து கொண்டிருக்கிறது. சுவாமிகள் செய்த விரிவுரைகட்குக் குறிப்பெடுத்துள்ள அறிஞர்கள் அவற்றை ஏற்றபெற்றி விரித்தெழுதி வெளியிடுதலும் ஒரு சிறந்த நினைவுக்குறி

யாகும். வித்துவான் - இராஜாக்கண்ணு B.O.L. அவர்கள் சுவாமிகள் உயிருடனிருந்த காலத்திலேயே இம்முறையில் ஓரளவு தொண்டாற்றி யுள்ளார்கள். சித்தாந்தம் பத்திரிகையிலும் சில சொற்பொழிவுகளின் சுருக்கங்கள் வந்தன. இன்னும் பல வெளிவருதல் நலமே. சுவாமிகள் தமது கண்போல் காத்துவந்த தமிழ்ப்பள்ளி என்றும் இடையூறின்றி இனிது நடைபெற்று வருதற்காக ஒரு மூலதனம் வைத்திருப்பதாகத் தெரிகின்றது. அவர்கள்பின் வந்து பட்டத்தமர்ந்திருக்கும் சுவாமிகளும், அப் பள்ளியிடத்திற் பற்றுடையவர்களாய் நன்கு நடத்தி வருகிறார்கள். இவர்கள், இது மேன்மேலோங்கி என்றும் நடைபெறுவதற்கான ஏற் பாடுகளை விரைந்து செய்வார்கள் என்று ஞானியார் சுவாமிகளின் அடி யார்கள் யாவரும் ஆவலுடன் எதிர்பார்க்கின்றனர்.

சைவ வானிற்கோர் தனிஞாயிறும், தமிழுலகிற்கோர் தண்மதியமு மாய் விளங்கிய நம் சுவாமிகளின் வரலாற்றை இந்நூலாசிரியர் தமது மூப்பையும மெலிவையும் கருதாது அன்புடன் அரிதின் முயன்று விரிவாக எழுதி வெளியிட்டமைக்காகத் தமிழ்மக்கள் அவருக்குப் பெருநன்றி செலுத்தும் கடப்பாடுடையர். நூலின் அச்சுத்தாள்களைப் போதியவளவு கூர்ந்து கவனித்துத் திருத்தாமையால், சில்வகைப் பிழைகள் காண்கின்றன. புத்தகம் அடுத்த பதிப்பில் ஒரு பிழையுமின்றி அழகுற வெளிவரும் என்று நம்புகின்றேன். இந்நூலினால் சிவத்திரு - ஞானியாரடிகள் புகழ் என்றும் நிலைக்கவும், அவர்கள் ஆர்வத்துடன் புரிந்துவந்த சைவத் தமிழ்த்தொண்டு இனிது வளரவும் திருவருள் துணை செய்வதாக.

இராயப்பேட்டை, சென்னை:
23—4—48

**ச. சச்சிதானந்தம் பிள்ளை**
ஓய்வு பெற்ற கல்வி அதிகாரி



திருக்கோவலூராதீனம்
ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்
திருப்பாதிரிப்புலியூர்

சு. அ. இராமசாமிப்புலவர்,
உறுப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

உ

வேலு மயிலுந் துணை

சிவ சண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க

# திருக்கோவலூர் ஆதீனம் - திருப்பாதிரிப்புலியூர்
# உயர் சிவத்திரு ஞானியாரடிகள்
# வாழ்க்கை வரலாறு

## முற் பகுதி

பதினன்குசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

அந்தாதி சதகங்க ளானசிறு நூல்பயில
அண்டிவந் தவர்க ளொருசார்
அரியதொல் காப்பியம் சித்தாந்த சாத்திரம்
அறியவந் தவர்க ளொருசார்
மந்த்ரவுப தேசமது பெற்றுசிவ பூசைசெய
மருவிவந் தவர்க ளொருசார்
மறைந்தநுண் பொருள்தமைவிளக்குமொழிகேட்டுமே
மகிழ்ந்திருப் பவர்க ளொருசார்
இந்தமுறை மடாலய மெங்கணுங் கூட்டமா
யிரவுபக லென்ப தின்றி
யிருந்துநின் மொழிகேட்டுப் புலவரா னோர்தமை
யெண்ணிடத் தகுவ தோதான்
பந்தமற ஞானமொழி பகர்கின்ற பானுவே
பான்மைதரு புலிசை வாழ்வே
பரிவுடைய சிவசண்மு கப்பெயர்கொள் தேசிகநின்
பதமலர்கள் போற்றி போற்றி.

## 1. நாடு நகர்

சிவம் பொலிந்து விளங்கும் திருப்பதிகள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டு விளங்குவது செந்தமிழ் நாடு. அதனைப் பண்டைநாள் தொட்டு ஆண்டு வந்தவர்கள் சேர, சோழ, பாண்டியரென்னும் மூவேந்தர்கள் ஆவார்கள். அவர்களிலும் ஆற்றல் உடையோனாகத் திகழ்ந்தவன் ஒரு குறுநில மன்னன். அவனது கெழுதகைய வீரத்தைப் போற்றாத புலவர்கள் இல்லை. மூவேந்தருள் எவர்பாற் சார்ந்து அவன் போர் புரியினும் அவர்கள் தவறாது வெற்றி பெறுவர்.

அவன் போர்க்களஞ் சென்று புரியும் போர்த்திறத்தை வெற்றி பெற்றோரும், தோற்றோருங் கண்டு மகிழ்வர்.

வீயாத் திருவின் விறல்கெழு தானை
மூவரு ளொருவன் துப்பா கியரென
ஏத்தினர் தரூஉம் கூழே நுங்குடி.
—கபிலர் - புறம் - 122

எனவும்,

குன்றத் தன்ன களிறு பெயரக்
கடந்தட்டு வென்றோனும் நிற்கூ றும்மே,
வெலீஇயோன் இவனெனக்
கழலணிப் பொலிந்த சேவடி நிலங்கவர்பு
விரைந்து வந்து சமந்தாங்கிய
வல்வேல் மலையன் அல்ல னாயின்
நல்லமர் கடத்தல் எளிதுமன் நமக்கெனத்
தோற்றோன் தானும் நிற்கூ றும்மே.
—பேரி சாத்தனார் - புறம் - 125

எனவும், அவனது பேராற்றலைக் கண்ட புலவர்கள் வியந்து கூறியுள்ளனர்.

அவன் வன்திறல் வெற்றியில் மிக்கது போன்று வள்ளல் தன்மையிலும் மிக்கவன். அவனது வெற்றிக்கு உறுதுணையாக விளங்கியது கரிய நிறமுடையதொரு பாய்மா. மலைநாட்டு வேந்தன் ஆகையால் அவனை, "மலையமான்" என்றும், தமிழ்நாட்டு மூவேந்தர்கட்குச் சமமான முடிதரிக்கும் பேறு பெற்றிருந்தமையின், "திருமுடி" என்றும், கரிய குதிரையை என்றும் விடாது கொண்டிருப்பவன் என்பது தோன்ற, "காரி" என்றும் அவனை விளிப்பர். அவனது பெயர், "மலையமான் திருமுடிக்காரி" என்பதாகும்.

அவ்விறல் வேல் மன்னனின் ஆற்றலுக்கு மகிழ்ந்து, மூவேந்தரும் தங்கள் தங்கள் நாட்டினின்றும் ஒவ்வொரு பகுதியை அவனுக்குப் பரிசாக அளித்தனர். அப்பகுதி மூவேந்தர் நாட்டின் நடுவுள் இருந்தமையால் அது, "நடுநாடு" எனப் பெயர் பெற்றது. அன்றியும் அவன் நாடு சிறப்புற்றுப் போர்முனைக்குப் பாடி வீடுபோல் விளங்கியது. அதனால் அதனைத் "திருமுனைப்பாடி நாடு" எனவுங் கூறுவர். இது, "மகத நாடு" என்றும் வழங்கப் பெறும்.

அந்நாடு, சிவபெருமான் வில்லின் வழித் தோன்றிய காரணத்தால், "பினாகினி" என விளிக்கப் பெறும். துஞ்சாநீர் வளஞ் சுரக்கும் தென்பெண்ணையாறு பாய்ந்து வளஞ் செழிக்கும் பெருமையுடையது. அன்றியும், சங்கராபரணி, கெடிலம், மணிமுத்தாநதி முதலிய பல நதிகளும் பாய்ந்து மக்கட்கு இன்பமூட்டுகின்றன. மூவர் பாடல் பெற்ற, மாதவர் போற்றும் மதிமுடியண்ணல் வதியும் இருபானிரண்டு சைவத்திருத் தளிகளையும், ஆழ்வார்கள் பாடல் பெற்ற, நெடுநில மளந்த நேமி யண்ணல்வதியும் இரு வைணவத் திருத்தளிகளை

யுந் தன்னகத்தே கொண்டு விளங்குவது. அன்றி, அதனுள் சமணப் பள்ளிகளும், பிறதுறையினர் வழி பாடு புரியுங் கோட்டங்களும் நிரம்ப உள்ளன.

உண்மை தேருது பிறதுறை புகுந்த, "மருணீக்கி யார்" சூலை நோயால் வருந்தியபோது, "திருநாவுக் கரசு" எனுந் திருப்பெயரீந்து சூலை நோய் நீக்கி ஆட் கொண்டது. திருநாவலூரரை, வலிய சென்று வழக் குரைத்து ஆட்கொண்டது. செந்தமிழ் இதிகாசங்கள், தேவாரம், திருவாய்மொழி முதலிய நூல்கள் தோன் றற்கிடமாயுள்ளது. சித்தாந்த ஞானபானுவாய் விளங் கிய மெய்கண்டார், 'சிவஞான போதம்' எனும் நூலைத் தந்தது. அதன் வழி நூல்களாகிய சாத்திரங் களும் தோன்ற இடமாயது. திருப்புகழ், திருவருட்பா முதலிய துதி நூல்கள் தோன்றி அனைவரையும் பக்தி வெள்ளத்தில் ஆழ்த்துவது. சங்ககாலம் முதல் புலவர் கள் பலராலும் வியந்து கூறப்பெற்றதாய் சரித்திர பிரசித்தியும் பெற்று விளங்குவதாகும்.

இன்னணம் பல்வேறு சிறப்புக்களுக்கு இடமாக விளங்கிய திருமுனைப்பாடி நாட்டின் தலை நகராகவுள் ளது, "திருக்கோவலூர்" என்னும் தொன்னகராகும். அது,

நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குந ரல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கு மருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே.

—கபிலர் - புறம் - 124

எனக் கூறுமாறு, புலவர்கட்கு வேண்டுவன அளித்துக் காத்த, "மலையமான் திருமுடிக்காரி" இருந்து வாழ்ந்தது. மாபலிபால் மூன்றடிமண் தான மேற்று உலகளந்த திருவிக்கிரமப் பெருமாள் மேற்பாலும், அந்தகன் என்னும் அசுரனைத் தடிந்து அனைவருக்கும் இன்பம் நல்கிய வீரட்ட நாதப் பெருமான் கீழ்ப்பாலும் எழுந்தருளியிருக்கும் பேறு பெற்றது. மெய்ப்பொருளுயனார் ஆட்சி புரிந்தது. ஒளவை பிராட்டியார், "சீதக்களப" என்னும் அகவலைப் பாடி, விநாயகப் பெருமானால் கயிலையில் எடுத்துவிடப் பெற்ற பெருமையினை யுடையது. அன்றியும் ஒளவை பிராட்டியாரால்,

*"பொன்மாரி பெய்யுமூர் பூம்பருத்தி யாடையாம்*
*அந்நாள் வயலரிசி யாகுமூர்—எந்நாளும்*
*தேங்குபுக ழேபடைத்த சேதிமா நாடதனில்*
*ஓங்குந் திருக்கோவ லூர்"*

*முத்தெறியும் பெண்ணை முதுநீ ரதுதவிர்ந்து*
*தத்திவரு நெய்பால் தலைப்பெய்து—குத்திச்*
*செருமலை தெய்வீகன் திருக்கோவ லூர்க்கு*
*வருமள விற்கொண் டோடிவா.*

—தமிழ் நாவலர் சரிதை

என விதந்து கூறப்பெற்றது.

கபிலர் இரட்டை மணிமாலை பாடி மகிழ்ந்தது. இதுபோன்ற பல சிறப்பியல்புகளுக்கு இடமாகவுள்ளது திருக்கோவலூர் என்னும் தொல்பதியாகும்.

## 2. வழிமுறை

வடுகு, கன்னடம் ஆகிய மொழிகள் பெரிதும் பயிலும் கர்நூல் சில்லாவில், "ஆத்மகூர்" எனும் ஒரு நகர் உளது. ஆங்கு, ரேவண சித்தர், மருள சித்தர்,

ஏகோராமர், பண்டிதாராத்தியர், விசுவாராத்தியர் ஆகிய ஐவரையும் குலகுருவாகக் கொண்டு வழிபட்டு வருபவர்கள் ஆராத்திரியர் என விளிக்கப் பெறுவர். அந்த ஆராத்திரியர் குடியில் சிறப்புற்று வாழ்ந்தவர் சோமநாத ஆராத்திரியர் என்பவர் ஆவார். அவர் வழியில் மல்லைய தேவர், பிரமர குந்தளாம்பா என்னும் தம்பதிகள் மிக்க ஒழுக்க முடையவர்களாக வாழ்ந்து வந்தனர்.

மேம்பாடு மிக்க அத்தம்பதிகளில் தவப் பேறுகப் பிறந்தவர், 'சுப்பிரமணிய ஐயர்' என்பவர் ஆவார். அவர் சுப்பம்மா என்னும் அம்மையாரை மணந்து இல்லறம் நடாத்தி வந்தனர். அவர்கள் அந்திவான் மதிசூடும் ஆலமர்ச் செல்வனை மறவாது, நாளுஞ் சிந்தை செய்யும் கடப்பாடுடையவர்கள். அவர்கள் பன்னெடுநாள் புத்திரப்பேறு வாய்க்கப் பெற்றிலர். இன்னடிசில் புக்கு அளையுந் தாமரை போன்ற கையினையும், பூ நாறுஞ் செய்ய வாயையுமுடைய மக்களின்றி, "பொன்னுடையரேனும், புகழுடையரேனும் என்ன பயனுடைத்து" என ஆன்றோர் கூறியுள்ள அறமொழியைச் சிந்தையுட் கொண்டனர். அறம்பல ஆற்றினர். புண்ணியத் தலங்கள் தோறுஞ் சென்று நீராடி இறைவனை வழிபாடு புரியின் நம் எண்ணம் ஈடேறும் என எண்ணினர். தென் திசை நோக்கித் தலயாத்திரையாகப் புறப்பட்டனர்.

காளத்தி, காஞ்சி, திருவருணை முதலிய தலங்கள் சென்று நீராடி இறைவனை வழிபாடு செய்துகொண்டு அட்ட வீரட்டானங்களுள் ஒன்றுனதும், அந்தகனை அடர்த்த ஐயன் வதிவதுமாகிய திருக்கோவலூர் வந்து அடைந்தனர். இறைவன் திருவருள் முன்னிற்பதால்

அத்தலம் அவர்கட்கு மிக்க மகிழ்ச்சி யளிப்பதாயிற்று. தென்பெண்ணை நதியில் நீராடி, சிவபெருமானை வழி பாடு செய்துகொண்டு சிலநாள் தங்கியிருந்தனர்.

திருக்கோவலூரில் வதிந்து வருகையில் அம்மை யார் வயிறு வாய்ந்தனர். அது கண்டு அத்தம்பதிகள் மடாலயம் ஒன்று வகுத்துக்கொண்டு, அவ்விடமே தங்கிவிட்டனர். வீரட்டநாதன் திருவருளை எண்ணி எண்ணி மகிழ்ந்து போற்றி வந்தனர். தமிழ்நாடு செய்த தவப் பயனாக கலி 4774 ஆனந்த ஆண்டு, (கி. பி. 1672 நவம்பர்) கார்த்திகைத் திங்கள், கார்த் திகை கூடிய நன்னாளில் இறைவன் திருவுருவே என ஒரு ஆண் மகவு உற்பவித்தது.

> **ஆயிரநான் கேழுநூ றத்தோ டெழுபதுநான்**
> **காயகலி ஆநந்த வாண்டருணைத்—தேயுவொளி**
> **ஆனதினம் கோவலில்வா ழாறுமுக தேசிகனுர்**
> **மானிடர்போல் வந்ததின மாம்.**
>
> —இரண்டாம் முறை, சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் இயற்றியது.

உலகம் உய்ய அவதரித்தருளிய அப்பெரியாருக்கு, 'ஆறுமுக சுவாமிகள்' எனப் பெயர் சூட்டினர். வளர் பிறையென வளர்ந்த அடிகளார் கல்வி கேள்விகளில் வல்லுந ராயினர். அடிகளாரின் அதிதீவிர பக்குவ நிலையை யுணர்ந்து, திருவருணைக் குகை நமசிவாய சுவாமிகள் மடாலயத்துள் எழுந்தருளியிருந்த ஆரும் முறை குகை நமசிவாய சுவாமிகள் சிவலிங்க தாரண மும், தூல பஞ்சாக்கர உபதேசமும் செய்வித்தனர். அடிகளார் பக்தி மார்க்கத்தில் பற்றுடையவராகித் துறவறம் பூண்டனர்.

ஒவ்வொரு நாளும் காலையில் பெண்ணை நதியில் நீராடி, கபிலர் குன்றினருகில் அமர்ந்து நிட்டை கூடியிருப்பர். அவ்வாறு நிகழ்கையில், ஆவணித் திங்கள், தசமி, மூலம் கூடிய ஒரு நன்னாளில் வழக்கம்போல் அடிகளார் நிட்டை கூடியிருந்தனர். அதுகாலை, திருவீரட்டநாதப் பெருமான் பெரியநாயகி யம்மையுடன் அவர்பால் எழுந்தருளிவந்து, சூக்கும, காரண பஞ்சாக்கரங்களை உபதேசித்தருளினர். உத்தரவாதுளாகமம் இருபத்தெட்டாம் படலமாகிய, 'நிட்டாநுபூதி' என்னும் வடமொழிநூல் ஒன்றையும் அடிகளார் மடித்தலத்திருத்தி மறைந்தனர். நிட்டை தெளிந்தபின் அடிகளார், வீரட்டநாதன் திருவருளை வியந்து, அப்பெருமானது கருணைத் திறத்தை அன்பர் பலருக்கும் அறிவுறுத்துவாராயினர்.

திருவருணை, ஆரும்முறை குகை நமசிவாய சுவாமிகள் அவ்வற்புதத்தைக் கேள்வியுற்று, மிக்க மகிழ்ச்சியுற்றனர். இறைவன் தந்தருளிய நூலைச் செந்தமிழில் மொழி பெயர்த்தருள்க எனவும் கட்டளையிட்டனர். குருபரனின் ஆணையைச் சிரமேற்றாங்கிய அடிகளார், "நிட்டாநுபூதிசாரம்" எனப் பெயரிட்டு அந்நூலை மொழி பெயர்த் தருளினர்.

மற்றொருநாள் முருகப் பெருமான் ; அடிகளார் நிஷ்டை கூடியுள்ளபோது தோன்றி, பிரணவ உபதேசஞ் செய்து ஆட்கொண்டருளினர். அதுமுதல், அடிகளார் அப்பெருமானையே உபாசனா மூர்த்தியாகக் கொண்டு, மடாலயத்தில் எழுந்தருளச் செய்து வழிபடுவராயினர்.

ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் என்னும் பெயர் அடிகளாருக்கு அமைவதாயிற்று.

உண்மை ஞானம் கைவரப்பெற்று குருமூர்த்திகளாக விளங்கியதால் அவரை அனைவரும், "ஞானியார் சுவாமிகள்" என்றே அழைப்பாராயினர். அடிகளார் எழுந்தருளியிருந்த மடாலயமும், 'ஞானியார் மடாலயம்' என்றே வழங்கத் தொடங்கியது. அன்பர்கள் பலர் அடியாராகி, உபதேசம் பெற்று, புனிதராயினர். வீரட்டநாதர் உபதேசித்தருளிய 'ஆவணிமூலம்' மடாலயத்தில் சிறந்த விழாவாகக் கொண்டாடப் பெற்றது. இன்றும் அதனைக் கொண்டாடி வருகின்றனர்.

ஆவணி மூலத்தன்று ஸ்ரீ வீரட்டநாதப் பெருமான் பெரியநாயகி யம்மையோடு, மடாலயத்தில் அமைந்திருக்கும் ஆவணிமூல மண்டபத்திற்கு இன்றும் எழுந்தருளி காட்சியளித்து உற்சவம் கொண்டாடி யருள்வது அனைவரும் அறிந்த தொன்றாகும்.

அடிகளாரின் அதிதீவிர பக்குவ நிலையும், அன்பர்கட்கு உபதேசித்தருளும் அருளுடைமையையும் கண்டு அனைவரும் கொண்டாடுவாராயினர். அவர் புகழ் எங்கணும் பரவுவதாயிற்று. பலர் மாணவர்களாயினர். அவர்களுள், பூங்கோட்டு அம்பலவாண சுவாமிகள், சம்பூரண பிரகாச சுவாமிகள், அவிநாசிநாத சுவாமிகள், மதுரை சட்ட முனிகள், அண்ணாமலை சுவாமிகள் முதலியோர் சிறந்தவர்கள் ஆவார்கள்.

அன்பர்களின் நன்மையைக்கருதி அடிகளார், 1. நிட்டானுபூதி சாரம், 2. வீரசைவ உண்மை யகவல், 3. சதுர்லிங்க தசகோத்ர சதகம், 4. இஷ்டலிங்கத் திருத்தல மாலை, 5. சிவசோடச மாலை, 6. ஆசைச் சோடச மாலை, 7. உய்யப்பஃது, 8. ஓலப்பத்து, 9. கரதலப் பத்து, 10. கரதலநாயக பஞ்சகம், 11. இஷ்டலிங்கப் பதிகம், 12. கரதலத் திருப்புகழ்,

13. ஆடுதுறைக் குற்றம் பொறுத்தார் தோத்திரம், 14. சண்முகருலா, 15. தென்பாங்கு, 16. மாசிலாமணிப் பதிகம், 17. சிவசிவ பதிகம், 18. சிவசிவ ஹரஹர பதிகம், 19. வீரட்டேசுவர மகாகுரு அனுபவ தோத்திரக் கலித்துறை, 20. லிங்கப் புலம்பல், 21. அருள் வாம வுண்மை விளக்கம், 22. பிரமதர்க்க நிச்சயம், 23. வெற்றருலா, 24. உண்மையுலா, 25. பரம உபதேச ஒடுக்கம், 26. சிவாத்வைத கும்மி, 27. ஞானிகள் நிலைமை, 28. மேன்மைப் பதிகம், 29. வீரட்டேசுவர தோத்திரக் கலிப்பா, 30. சண்முக ரகவல், 31. வீரட்டேசுவர மஹாகுரு தோத்திர மங்களம் ஆகிய நூல்களை இயற்றியுள்ளனர்.

அடிகளார் காலத்தில், திருவருணை ஆறும் முறை குகை நமசிவாய சுவாமிகள், ஒன்பதாம் முறை குரு நமசிவாய சுவாமிகள், விருத்தாசலம் குமார தேவ சுவாமிகள், போரூர் சிதம்பர சுவாமிகள், கும்பகோணம் ஏழாம் முறை சாரங்கதேவ சுவாமிகள், பொம்மைய பாளையம் இரண்டாம்முறை பாலைய சுவாமிகள், செஞ்சி கோட்டூரையர், நரசிங்கபுரம் பொக்கிஷா தேவர், பாதிரி ஞானம்பா முதலியோர் அடிகளாருக்குப் பேராதரவாக விருந்தனர்.

அடிகளாரின் மாணவர்களான பூங்கோட்டு அம்பலவாண அடிகள் என்பார், 'வேதாந்த சாரத் திரட்டு' என்னும் நூலையும், மதுரை சட்ட முனிகள் என்பார், "விண்ணுறு கயிலைப் பதிகம்" என்னும் நூலையும், அவிநாசிநாத சுவாமிகள் என்பார், நெஞ்சு விடுதூது, சிகாமணிப் பதிகம், அபிடேகமாலை, அட்டகம், மங்களம் முதலிய நூல்களையும் இயற்றியருளி யுள்ளனர்.

அடிகளாருக்குச் சிவகுன்றம், செஞ்சி, திருவருணை, திருமுதுகுன்றம், சத்தியவிஜய நகரம், ஆரணி, புலிசை ஆகிய இடங்களிலுள்ள அன்பர்கள் மடாலயங்கள் வகுத்துத் தந்தனர். அடிகளார் ஆங்காங்குச் சென்று உண்மை யநுபவத்தை அன்பர்கட்கு உபதேசித் தருளுவாராயினர்.

பரசிவ மகாலிங்கேசுரர், பரமாசாரிய சுவாமிகள், மகாகுரு சுவாமிகள், சண்முகநாம சத்யஞான சிவாசாரிய சுவாமிகள், ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள், ஆறுமுக மெய்ஞ்ஞான தேசிகர், சண்முக மெய்ஞ்ஞான தேசிகர், ஆறுமுக மெய்ஞ்ஞான சிவகுரு, ஞானியார் சுவாமிகள் எனப் பல பெயர்கள் அடிகளாருக்கு வழங்குவதாயிற்று.

இறைவனது அருட் பிரசாத அனுபவத்தை அடியார்கட் கறிவுறுத்தி வந்த அடிகளார், கலி 4871 (கி. பி. 1769 மார்ச்சு) விகுருதி ஆண்டு, மாசித் திங்கள், 27-ஆம் திகதி, வியாழக்கிழமை அனுஷம் கூடிய நன்னாளில் தமது தொண்ணூற்றேழாவது வயதில் பரிபூரண முற்றனர்.

இரண்டாம் முறையாக அம்மடாலயத்தில், ஞானாசிரியராக எழுந்தருளி யிருந்தவர்கள், சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் என்பவர்கள் ஆவார்கள். அவர்கள் முருகப் பெருமான்மீது பேரன்பு மிக்கவர்கள். அடிகளார் பெரும்பாலும் புலிசை மடாலயத்திலேயே வதிந்து வந்தனர். இவர்களும் பேரறிஞராய் உலகிற்கு உபகாரமாகப் பல நூல்கள் இயற்றியுள்ளனர். அவற்றுள் முருகரந்தாதி, விநாயகர் மாலை, சுப்பிரமணியர் பரம்பர பதிகம் ஆகிய நூல்களே வெளிவந்துள்ளன. ஏனையவற்றைப் பற்றிய விவரங்

கள் அறியக்கூடவில்லை. இவ்வடிகளார் அறுபத்து மூன்று ஆண்டுகள் ஆசாரிய பீடத்தில் எழுந்தருளி யிருந்தனர். (கி. பி. 1832 டிசம்பர்) நந்தன ஆண்டு, கார்த்திகைத் திங்கள், மூன்ரும் மங்கள வாரத்தன்று பரிபூரண முற்றனர்.

மூன்ரும் முறையாக அம்மடாலயத்தில் ஞானுசிரியராக எழுந்தருளி யிருந்தவர்கள் சிவ சண்முக சங்கண வசவ மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் என்பவர்கள் ஆவார்கள். அவ்வடிகளார் பதினாறு ஆண்டுகள் ஆசாரிய பீடத்தில் அமர்ந்தருளியிருந்தனர். (கி. பி. 1848 அக்டோபர்) கீலக ஆண்டு, புரட்டாசித் திங்கள், கடைசிச் சோமவாரத்தன்று பரிபூரண முற்றனர்.

நான்காம் முறையாக அம்மடாலயத்தில் ஞானுசிரியராக எழுந்தருளி யிருந்தவர்கள் சிவசண்முக பரசிவ மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் என்பவர்கள் ஆவார்கள். அவ்வடிகளார் நாற்பத்தொரு ஆண்டுகள் ஆசாரிய பீடத்தில் எழுந்தருளி யிருந்தனர். நாற்பத்திரண்டாம் ஆண்டாகிய (கி.பி. 1889 நவம்பர்) விரோதியாண்டு, ஐப்பசித் திங்கள், உ௬ ஆம் திகதி ஞாயிறன்று பரிபூரண முற்றனர்.

முதன் முறை அடிகளார் திருக்கோவலூரிலேயே இருந்து பரிபூரண முற்றனர். மற்றைய அடிகளார் ஆகிய இரண்டு, மூன்று, நான்காம் முறை அடிகளார் திருப்பாதிரிப்புலியூரையே தங்கள் இருப்பிடமாகக் கொண்டு வதிந்திருந்து பரிபூரண முற்றனர். இதுவே ஞானியார் மடாலயத்தின் வழிமுறை யாகும்.

## 3. ஐந்தாம் முறை அடிகளார்

திசையனைத்தின் பெருமையெலாம் செழிப்புறப் பெற்று விளங்கும் தென் திசையில் விளங்கித் தோன்றுவது சோழ நாடு. அது கங்கை புனைந்த கணிச்சி வானவன் எழுந்தருளியுள்ள மூவர் தேவாரம் பெற்ற நூற்றுத் தொண்ணூறு சிவத் தலங்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குவது. மகனை முறை செய்து மாண் புகழ்பெற்ற மனுநீதி சோழன் இருந்து ஆட்சி செய்தது. புள்ளுறு புன்கண் தீர்த்த ‘சிபி’ என்னும் மன்னவன் முறை செய்தது. அறப் பெருந் துணைவர் பலர் இருந்து அன்னம் வழங்கியது. அடியார் பலர் தோன்றி அருந்தொண்டாற்றியது. வான் மறப்பினும் தான் வறத்தலறியா பொன்னியாறு பாயும் பெருமையினை யுடையது.

இன்னோரன்ன சிறப்புக்களமைந்த சோழ நாட்டில், குடந்தையம் பதிக்கு இரண்டுகல் தொலைவில் உள்ளது, ‘திருநாகேச்சுரம்’ என்னுந் திப்பிய திருப் பதியாகும். அது,

“சொற்றுணைமாலை கொண்டு தொழுதெழு வார்கட்கெல்லாம்
நற்றுணை யாவர் போலும் நாகவீச் சரவனாரே”

“ஆன அஞ்செழுத் தோதவந் தண்ணிக்கும்
தேனர் போல்திரு நாகேச் சரவரே”

“... ... திருநாகேச் சரத்துளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே”

என சொற்குறுதியுடைய அப்பமூர்த்திகளும்,

“... ... நாகேச் சரநகருள்
தலைவாவென வல்வினை தானறுமே”

“ நம்பர் நாளும் அமர்கின்ற நாகேச்சுரம் நண்ணுவார்
உம்பர்வா னோர்தொழ சென்றுடன் ஆவதும் உண்மையே”

என அம்பிகைபால் அருள்ஞானப் பாலுண்ட திரு ஞானசம்பந்தப் பெருமானும்,

“ ... ... மாதவிமேல்
சிறையணிவண் டுகளமர் திருநாகேச் சுரத்தரனே ”

எனத் தம்பிரான் தோழரான சுந்தரமூர்த்தி சுவாமிகளும் தேவாரம் பாடப்பெற்ற சிறப்பினை யுடையது.

அப்பதியின்கண் வீர சைவ மரபில் உற்பவித்தவரும், அம்மரபினருக்குக் குல குருவாக விளங்கித் திருமண முதலிய சடங்குகளைச் செய்விப்பவருமாகிய, “ அண்ணுமலை ஐயர் ” என்பார் ஒருவர் வாழ்ந்து வந்தனர். அவர் நீறணிந்த செம்மேனிச் செல்வனை என்றும் மறவாச் சிந்தை யுடையவர். தண்ணளி மிக்கவர். மூதறிவுடைய ஐயர் அவர்கட்கு வாழ்க்கைத் துணைவியராக விளங்கியவர், “பார்வதி அம்மையார் ” அவர்கள் ஆவார்கள்.

அவர்கள் இருவரும் இல்லறத்தை நல்லறமாக நடாத்தி வந்தனர். அவர்கள் வீடு ‘ ஐயர் வீடு ’ எனப் பெயர் பெறும். [பலதுறைகளிலும் தலைமை பெற்றுயரும் அடிகளார் அங்குத் தோன்றப் போகும் பெருமையினை அறிவுறுத்தவே அவ்வில்லம் ‘ஐயர் வீடு’ எனப் பெயர் பெற்றது போலும்.]

“ மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன் நன்கலம் நன்மக்கட்பேறு ” அன்றோ? அதனைக் கருதி, மனைக்கு அணியாக விருக்கும் மக்கட் பேற்றை அத்தம்பதிகள் விரும்பினர். அரிய விரதங்களாற்றினர். அடியார்கட்குணவளித்தனர். சிவாலயங்களில் நெய்தீபமிட்டனர்.

அறுமுகப் பெருமான் திருவருளையே அனவரதமும் சிந்தைசெய்து வழிபாடியற்றி வந்தனர். அவர்கள் புரியும் வழிபாட்டிற்கிரங்கி இறைவன் திருவருள் சுரந்தனன். அப்பேரருளின் குறியாக அம்மையார் கருக்கொண்டனர். தம்பதிகள் ஆனந்த வெள்ளத்துளாழ்ந்தனர். பத்து மதியுங் கடந்தன.

சைவந் தழைக்கவும், செந்தமிழ் செழித்து வளரவும், உண்மை ஞானம் ஓங்கி விளங்கவும் ஸ்ரீமுக ஆண்டு, வைகாசித் திங்கள், ௪-ஆம் திகதி (17-5-1873) வியாழக்கிழமை, மூலநாள், தனுசு நல்லோரை கூடிய நாளில் இரவு $10\frac{1}{4}$ மணிக்கு,

| | | | |
|---|---|---|---|
| | புதன் சுக்கிரன் | சூரியன் இராகு | |
| | இராசி | | |
| சனி | | | குரு |
| ல / சந்திரன் | கேது | செவ்வாய் | |

கிரகங்கள் இம்முறையில் அமைய, சிவஞானச் செல்வராம் அடிகளாரை அம்மையார் கருவுயிர்த்தனர். அடிகளாரின் தோற்றம் பெற்றோர்கட்குப் பெருமகிழ்வளித்தது. 'பழநீ' எனப் பெயரிட்டனர். அடிகளார் வளர்பிறையென வளர்வாராயினர்.

கோவல் ஞானியார் மடாலயத்து குருமூர்த்திகளே இக்குடும்பத்தினருக்குக் குலகுருவாக விருந்ததுமன்றி, நெருங்கிய சம்பந்த முடையவர்களாகவும் இருந்தனர். அடிகளாரின் தோற்றம் நேர்ந்த காலத்துத் திருப் பாதிரிப்புலியூரில் உள்ள ஞானியார் மடாலயத்தில் குருமூர்த்திகளாக எழுந்தருளி யிருந்தவர்கள் நான்காம் முறை அடிகளாராகிய சிவசண்முக பரசிவ மெய்ஞ் ஞான சிவாசாரிய சுவாமிகள் ஆவார்கள். அவர்கள் தமக்கு உதவியாக வருமாறு அடிகளாரின் தந்தையை அழைத்திருந்தனர். பிறந்து ஆறுமாதம் நிரம்பாத குழந்தையாகிய அடிகளாரை எடுத்துக்கொண்டு அவரது பெற்றோர்கள் திருப்பாதிரிப்புலியூர் வந்தனர். நான்காமுறை அடிகளார் அவர்களை அன்புடன் வர வேற்று இருக்கை யளித்தனர். தம்பதிகள் மிக்க மகிழ்ச்சியுடன் மடாலயத்திலேயே தங்கியிருந்தனர். செயலாளராக விருந்து தொண்டு புரிந்தும் வந்தனர்.

நான்காம் முறை அடிகளார் குழந்தைப் பருவத்தி லிருந்த நம் அடிகளார் மீது பேரன்பு மிக்கவர்களாய் பரிவுடன் பேணி வந்தனர். அடிகளாரும் வளர்பிறை யென வளர்வாராயினர்.

## 4. இளமையும் கல்வியும்

அடிகளார் குழவிப் பருவங் கடந்து பிள்ளைமைப் பருவத்தை எய்தினர். அதுகண்டு, நான்காம் முறை அடிகளார், தெலுங்கு மொழி ஆசிரியராகிய சென்ன கேசவலு நாயுடு என்பாரைக் கொண்டு நம் அடிகளா ருக்குக் கல்வி போதிக்குமாறு ஏற்பாடு செய்தனர். தொடக்கத்தில் தெலுங்கு மொழியைப் பயின்ற நம் அடிகளார், பின்னர் தமிழ் ஆங்கிலம் முதலிய மொழி

களைக் கற்பிக்கும் பாடசாலையில் சேர்ந்து ஆரம்பக் கல்வி பயின்றனர்.

1884-ஆம் ஆண்டு உயர்தரக் கல்வி பெறும் பொருட்டு, செயின்ட் ஜோஸப் பிராஞ்சு ஹை ஸ்கூலில் சேர்ந்தனர். அண்மையில் சிவகங்கை ஹை ஸ்கூல் உபாத்தியாயராக விருந்த பிரம்மஸ்ரீ தெய்வ சிகாமணி ஐயரவர்கள் தமிழ் ஆசிரியராக விருந்து தமிழ் போதித்து வந்தனர். ஸ்ரீமத் உபய வேதாந்த கோவிந்தாசாரியாரவர்கள் வடமொழி ஆசிரியராக விருந்து போதித்து வந்தனர். நான்காம் முறை அடிகளாரும், ஆதீன சம்பந்தமான நூல்களையும், வீர சைவ மரபு சம்பந்தமான நூல்களையும் உபாசனு வகைகளையும் இடைக்காலங்களில் போதித்து வந்த னர்.

நம் அடிகளாரும் அன்புடன் கல்வி பயின்று வந்தனர். சிறிது காலத்திறகு முன், காஞ்சீபுரம் பச்சையப்ப முதலியார் கலாசாலையில் வடமொழி ஆசிரியராக விருந்து, சென்னையில் ஓய்வு பெற்றிருந்த பிரம்மஸ்ரீ இராமநாத சாஸ்திரிகள் வடமொழி ஆசிரியராக விருந்து கல்வி போதித்து வந்தனர். பிரம்மஸ்ரீ சி. மு. சாமிநாத ஐயரவர்கள் தமிழ் ஆசிரிய ராக அமர்நதனர்.

## 5. பட்டமும் படிப்பும்

1889-ஆம் ஆண்டில் அடிகளார் பிரீ மெட்ரி குலேஷன் (Pre-Matriculation) வகுப்பில் வாசித்துக் கொண்டிருந்தனர். நான்காம் முறை அடிகளாரின் உடல்நிலை மாறுபாடு அடைந்தது. தமது பரிபூரண நிலை அண்மையில் நேரக்கூடுமென உணர்ந்தனர்.

'பழநி' என்னும் பிள்ளைத் திருநாமமுடைய அடிக ளாரை அழைத்தனர். அதுகாலை அடிகளாருக்கு பதினேழாம் வயது நடந்து கொண்டிருந்தது. ஆதீன முறைப்படி உயில் எழுதப்பெற்றது. விரோதி ஆண்டு, ஐப்பசித் திங்கள் ௩-ஆம் திகதி (20-11-1889) வியாழக்கிழமையன்று நான்காம் முறை அடிகளார் தமது திருக்கரத்தினாலேயே சந்நியாசம் தந்தனர். ஆசாரிய அபிஷேகமும் செய்வித்தனர். "சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்" என்ற பட்டப் பெயரையுஞ் சூட்டினர். நான்காம் முறை அடிகளார் பரிபூரணமுற்றனர். ஆதீன மரியாதைப்படி அடிக ளாரை, வண்டிப்பாளையத்திற்கு அண்மையிலுள்ள மடாலயத் தோட்டத்திலுள்ள ஆலயத்தில் தென் மேற்கு மூலையில் சமாதி செய்யப்பெற்றது. கிரியைகள் முற்றும் நமது அடிகளாரே தமது திருக்கரத்தால் செய்து முடித்தனர்.

அடுத்த கார்த்திகைத்திங்கள் எ-ஆம் திகதி குருவாரத்தன்று நமது அடிகளாருக்குப் பட்டாபி ஷேகம் சிறப்பு வகையாகக் கொண்டாடப் பெற்றது. திருக்கைலாய பரம்பரை திருக்கோவலூர் ராதீனம் ஐந்தாம் பட்டத்து அருள் ஞானியாராகிய அடிகள் திருப்பாதிரிப்புலியூர் மடாலயத்திலேயே இருந்து, வடமொழியும், தென்மொழியும் பயில்வாராயினர். வடமொழியைத் திரு. இராமநாத சாஸ்திரிகளும் தமிழ் மொழியைத் திரு. சி. மு. சுவாமிநாத ஐயர் அவர்களும் மடாலயத்திற்கு வந்து கல்வி போதித்துச் செல்வாராயினர். இடையிடையே இசைத்தமிழும், இசைக்கருவியும் (பிடில்) பயின்றனர். ஆனல் அவை

தம் நிலைமைக்கு ஏற்றது அன்றெனக் கைவிட்டுத் தென்மொழியும், வடமொழியும் மட்டில் பயின்று வந்தனர்.

வடமொழி ஆசிரியர் வேறு ஊருக்குச் சென்று விட்டனர். அதனை விட்டுத் தமிழ்மொழி ஒன்றினையே மிகவும் திறம்படக் கற்பாராயினர். தமிழ் ஆசிரியர் திரு. சி. மு. சுவாமிநாத ஐயரவர்கள் யாப்பிலக்கணம் முதலியவற்றைக் கற்பித்துச் செய்யுள் பாடும் வல்லமையையும் உண்டாக்கினர். ஐயரவர்கள் தமிழ் போதிப்பதில் மிக்க வல்லுந ரென்றும், சொற்பொழி வாற்றுந் திறன் அவர்பால் செம்மையாக அமைந் திருந்த தென்றும், அவர் போதித்த முறைகளைப் பின் பற்றியதினாலேயே அடிகளார் இத்துணைச் சிறந்த கல் வியைப் பெற்றனர் என்பதும் மறுக்கக்கூடாத உண் மைகளாம்.

ஐயரவர்கள் பாடம் போதிக்கும் நாட்களில் வீடு செல்வதற்குமுன் ஒரு செய்யுள் எழுதி, அதற்குச் சீர் தளை பிரித்து அலகிட்டு, இலக்கணக் குறிப்பும் எழுதிவைக்கும்படி சொல்லிச் செல்வது வழக்கம். ஒரு நாள் ஐயரவர்கள்,

"நற்பா டலிபுரத்து நாதனே நாயினேன்
பொற்பாம் நினதடியைப் போற்றினேன் — தற்போது
வேண்டுஞ் செலவிற்கு வெண்பொற்கா சுப்பத்து
ஈண்டு தருக விசைந்து"

என்னும் பாடலை எழுதி வைத்துவிட்டுச் சென்றனர். அடிகளார் வழக்கம்போல் அந்த நோட்டுப் புத்த கத்தை எடுத்தனர். செய்யுளைப் பதம்பிரித்து அல கிட்டு இலக்கணக் குறிப்பும் எழுதி வைத்தனர். ஆசிரி

யரின் உள்ளக் கருத்தையுணர்ந்தனர். பத்து ரூபாய் நோட்டு ஒன்றையும் அதனுள் சேர்த்து வைத்தனர்.

மறுநாள் பாடம் போதிக்கவந்த ஐயரவர்கள் பாடம் முடிந்தபின் நோட்டுப் புத்தகத்தை எடுத்தனர். அதனுள் பத்துரூபாய் கரன்ஸிநோட் வைத்திருப்பதைக் கண்டனர். மனம் மகிழ்ச்சி கொண்டனர். அடிகளாரை நோக்கினர். "நான் பாட்டுக்கு (என் மனம் போனபடி) எழுதி வைத்ததற்குப் பொருள் தருகிறீர்களே" என்றனர். அதற்கு அடிகளார் "நான் பாட்டுக்குதான் (தங்கள் பாடலுக்காகத்தான்) பொருள் தந்தேன்" என்றனர். ஐயரவர்கள் அடிகளாரது சிலேடை மொழியைக் கேட்டு மகிழ்ந்து அப்பொருளைக் கைக்கொண்டு சென்றனர். இம்முறையில் அடிகளார் பயின்று, திருவிளக்கில் ஏற்றிய தீவர்த்தி யொப்பக் கல்வியில் நுணுகி ஆராய்ந்து மேம்பாடுற்றனர்.

சில ஆண்டுகட்குப் பின்னர் ஆசிரியர் அவர்கள் அரனடி அடைந்தனர். ஐயரவர்கள் பிரிவு அடிகளாருக்குப் பெரிதும் மனவருத்தத்தை உண்டாக்கியது. தமது குருபக்தியைக் காட்ட அடிகளார் மடாலயத்திலுள்ள நூல் நிலையத்திற்கு, "சுவாமிநாத புத்தக சாலை" எனப் பெயரிட்டனர். அன்றியும் அவர் குமாரரான முத்து கிருஷ்ண ஐயரை B. A. வகுப்பு வரையில் படிக்க வைத்தனர். வருடா வருடம் அவரது குடும்பச் செலவிற்கு வேண்டிய நெல் முதலியன கொடுத்து உபகரித்துவந்தனர்.

அடிகளார் தெலுங்கு மொழியை நான்கு ஆண்டுகளும், ஆங்கிலத்தை ஏழு ஆண்டுகளும், வடமொழி

தென்மொழி முதலியவற்றைப் பதினைந்து ஆண்டு களும் கற்றுத் தெளிந்தனர்.

## 6. பயிற்சியும் பழக்கமும்

"செந்தமிழ் மொழி சீர் குலைந்துள்ளது. அம் மொழியைப் பயில்வோர் அதனைப் படித்தபடி உச்சரிப்பதில்லை. தமிழ் மொழியின் முழு உருவத்தைத் தமிழ் நாட்டிற் காண்பது அரிதாக இருக்கின்றது. பிற மொழிகளின் கலப்பால் அது சிதைந்து வழங்கப் பெறுகின்றது. திருத்தமாகப் பேசுவோர் ஏளனஞ் செய்யப் பெறுகின்றனர். தமிழ் மொழி பேசுவது தங்கட்கு இழிவெனச் சிலர் கருதுகின்றனர். சொற்களிலுள்ள பிழைகள் திருத்தப் பெருமல் பலவகையான உருவங்கள் பெற்றுத் தோன்றுகின்றன. இம்முறை நீடித்திருக்குமாயின் "களிறு தேய்ந்து கட்டெறும்பு ஆனது" போன்று தமிழ் மொழியின் உண்மை நிலைமையைக் காண்பது அரிதாகி விடும் போலிருக்கிறது. தங்கள் போன்ற மடாதிபதிகள் தான் இதில் தலையிட்டுத் திருத்த முற்படவேண்டும்" என்று தமிழ் ஆசிரியரவர்கள் பற்பல முறை தம்மிடம் வற்புறுத்திக் கூறியவற்றை நம் அடிகளார் அடிக்கடி சிந்திப்பதுண்டு.

பிறரைத் திருத்த முற்படுவதிலும் தாமே முன்னர் திருந்த வேண்டுமென அடிகளார் எண்ணினர். உரையாடுங்கால் தாமே திருத்தமாகவும், தெளிவாகவும் பேச முற்பட்டனர். அதனால், மொழிகளைத் தவருக உச்சரிக்கும் பணியாளர்களும் அடிகளாரிடம் பழகிப் பழகித் தமிழைத் திருத்தமாகப் பேச முற்பட்டனர். அடிகளார் உரையாடும் அழகைக் கண்டு

பலர் மடாலயத்திற்கு வந்து சொல்லினிமையை மாந்திச் செல்வர். அடிகளாரும் தம்மைக் காண வருபவர்களிடம் அன்பாக உரையாடி பற்பல நீதிகளையும் புகட்டுவா ராயினர். அடிகளாரின் சம்பாஷணையே ஒரு சொற்பொழிவுபோல் விளங்கும். அதனைக் கேட்டு மகிழ்ந்தவர்கள் பிறர்பாற் கூற, அவர்களும் வந்து கேட்டுப் பலருக்கும் கூற, இவ்வாறே அடிகளாரின் உரை நடையைக் கேட்டு இன்புற வருபவர்களின் எண்ணிக்கை மிகுவதாயிற்று.

அடிகளார் தம் ஆதீனத்தின் முதன்மைத் தானமாகிய திருக்கோவலூர் சென்று பற்பல நாள் தங்கியிருப்பர். சொற்பொழி வாற்றுவர். தம் ஆதீனத்திற்கு உட்பட்டதான மடாலயங்கள் உள்ள சிவகிரி, திருவருணை, திருமுதுகுன்றம், ஆரணி, சத்திய விஜயநகரம் முதலிய இடங்களுக்குச் சென்று சிற்சில நாட்கள் தங்கியிருப்பதும் உண்டு. ஆங்காங்குள்ள அன்பர்கள் அடிகளாரை அன்புடன் வரவேற்று உபசரிப்பர். அவ்வக் காலங்களில் செவ்விய தமிழ்மொழி கொண்டு சொற்பொழிவாற்றி அவர்களை மகிழ்விப்பர். வெளியூர்களுக்குச் செல்லும் போதும், சென்று திரும்பும்போதும் இடையிலுள்ள ஊர்களிலுள்ளோரும் அடிகளாரை இருக்கச் செய்து சொற்பொழிவு கேட்டு மகிழ்வாராயினர்.

தமிழ் மொழியின் உண்மை உருவத்தை அடிகளாரின் சொற்பொழிவின் மூலம் கேட்டு மகிழ்ந்த அன்பர்கள் பலர் தாங்களும் அவ்வாறு உரையாடத் தொடங்கினர். இம்முறையில் அடிகளார் தமிழின் உண்மை உருவத்தைத் தெளிவாகக் கூறி அனைவரை

யும் பின்பற்றச் செய்தமை ஒரு செவ்விய சீர் திருத்த முறையாகும். அதுவே போதிய நல்லவென்றும், செந்தமிழும், சைவமும் பரவ அடிகளார் ஒருவழி காண வேண்டுமெனவும் அன்பர்கள் பலர் போந்து அடிக்கடி வற்புறுத்துவாராயினர்.

## 7. தமிழும் சைவமும்

தமிழ் மொழி பலராலும் போற்றப் படாமலிருந்தது. சிதைவு மொழிகளே எங்கணும் பரவலாயின. ஆங்கில அறிவு பெற்ற பலர், தமிழ் மொழியைப் பயில்வதும், செவ்விய நடையில் உரையாடுவதும் இழிவெனக் கருதினர். தங்கட்குத் தமிழ் மொழியில் உரையாடுதல் பழக்கமில்லை என்று கூறுவதை மிகவும் கண்ணியமாகக் கருதினர். இலக்கண வரம்பு கடவாமல் உரையாடுவோர் சிற்சில தமிழ்ப் பண்டிதர்களே யிருந்தனர். அவர்களும் பொதுமக்களால் எள்ளி நகையாடப் பெற்றனர். இந் நிலையில் அடிகளார் தமிழை எவ்வாறு பரப்புவது என எண்ணி யிருந்தனர்.

பாலவநத்தம் ஜமீன்தாரரான பாண்டித்துரை தேவர் அவர்கள் 1900 ஆண்டு சென்னை சென்று திரும்புகையில், திருப்பாதிரிப்புலியூர் வந்து இறங்கி சிவ தெரிசனஞ் செய்தனர். அடிகளாரின் அறிவு ஆற்றல் முதலியவற்றைக் கேள்வியுற்றனர். மடாலயம் போந்தனர். இருவரும் அளவளாவினர். அன்று மாலை ஜமீன்தாரரவர்கள் தலைமையில் அடிகளார், "தமிழின் தற்கால நிலை" என்பது பற்றிக் கடன் மடை திறந்தது போன்று சொற்பொழிவாற்றினர். அதில், ஜமீன்தாரரவர்களும், மற்றைய செல்வர்களும்

சேர்ந்து, முச்சங்கம் இருந்து தமிழை வளர்த்த மதுரையம் பதியில் ஒரு 'தமிழ்ச் சங்கம்' நிறுவ வேண்டுமென்றும், அதன் மூலம் தமிழைப் பரப்ப வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டனர்.

ஜமீன்தாரரவர்கள் தமது முடிவுரையில், தமிழைப் பரப்ப அடிகளார் கூறிய கருத்து, போற்றற்குரிய தென்றும், தாமும் தமது சோதரரான பாஸ்கர சேதுபதியவர்களிடம் உரையாடித் தக்கது செய்வதாகவும் உறுதி கூறினர். அவ்வருடமே பாஸ்கர சேதுபதியவர்கள் திருவருணைப் போந்து தீப தெரிசனஞ் செய்தனர். மீளுங்கால் புலிசையை யடைந்தனர். மடாலயத்திலேயே பரிவாரங்களுடன் வந்து இறங்கினர். அடிகளார் அரசர் அவர்களை அன்புடன் வரவேற்று, உடனிருந்து சுவாமி தெரிசனஞ் செய்வித்தனர். அன்று மடாலயத்தில் ஒரு சொற்பொழிவு நடைபெற்றது. அது கேட்ட சேதுபதியவர்கள் அன்பின் மயமாயினர். முன்னரே பாண்டித் துரை தேவரவர்களால் தமிழ் அன்பு கொண்டிருந்த அரசர் அடிகளாரின் சொற்பொழிவினுல் மயங்கினர். தமிழை வளர்க்க வேண்டும் என்னும் அன்பு மிகுவதாயிற்று. "தமிழை வளர்க்க ஒரு கலாசாலை ஏற்படின், அதற்குத் தக்க பொருள் தந்து உதவுவது என் கடமையாகும்" என வாக்களித்தனர். அக்கலாசாலையை மதுரையில் நிறுவவும் சம்மதித்தனர். நகர் சென்றனர்.

அடிகளாரிடம் வாக்களித்தபடியே பாண்டித் துரை தேவரவர்கள் 24-5-1901ல், "மதுரைத் தமிழ்ச் சங்கம்" என்னும் பெயரால் ஒரு சங்கம் தாபித்தனர். அதன் அங்கமாக, "சேதுபதி கலாசாலை" என ஒரு

கல்விச்சாலை நிறுவப்பெற்றது. அதற்கு அரசர் அவர்கள் பொருளுதவி புரிந்து வந்தனர். பிரவேச பண்டிதர், பால பண்டிதர், பண்டிதர் என மூன்று வகுப்புக்கள் நிறுவினர். பலர் அதில் சேர்ந்து கல்வி பயில்வாராயினர். மாணவர்கட்கு உண்டியும் உறையுளும் அளித்து வந்தனர். 'செந்தமிழ்' என ஒரு திங்கள் தாளும் வெளியிட்டனர். இது விவரம் அடிகளாருக்குத் தெரிவிக்கப்பட்டது. அது கேட்டு மனமகிழ் வெய்தினர். தமது எண்ணம் ஒரு வகையாக நிறைவேறியதை அன்பர் பலரிடமும் கூறி அகமகிழ்ந்தனர்.

மடாலயத் தலைமை ஏற்றபின் அடிகளார் அடிக்கடி வெளியூர் செல்வர். ஆங்காங்குள்ள மடாலயங்களைத் திருத்தஞ் செய்வர். சொற்பொழிவாற்றுவர். பிற அன்பர்களின் சொற்பொழிவுகளையும் கேட்டு மகிழ்வர். இம்முறையில் பணியாற்றி வரும் அடிகளாருக்கு ஒரு கழகம் அமைத்து அதன் சார்பாக சொற்பொழிவாற்றுதல் சாலச் சிறந்ததாகுமென மனத்துட் கொண்டனர். அடுத்த சோபகிருது ஆண்டு (1903) பாண்டித்துரை தேவரவர்கள் புலிசை வந்தனர். அவர் தலைமையிலேயே "வாணி விலாச சபை" எனப் பெயரியதொரு கழகத்தைத் தமது மடாலயத்திலேயே தொடங்கினர். அதற்கு அடிகளார் தலைவராகவும், வழக்கறிஞர் குப்புசாமி செட்டியாரவர்கள் செயலாளராகவும் சோமசுந்தரஞ் செட்டியார், தமிழ்ப் பண்டிதர் - கந்தசாமி முதலியார், ஹெட்மாஸ்டர் - பொன்னுசாமி முதலியார், டாக்டர் - இராமலிங்க செட்டியார், ஹெட்மாஸ்டர் - ஆறுமுகம் பிள்ளை ஆகிய பல

அன்பர்கள் அங்கத்தினர்களாகவும் இருந்தனர். அதன் சார்பாக வாரக்கூட்டங்களும், ஆண்டு விழாக்களும் சிறப்பாக நடைபெற்றன.

தமிழை வளர்க்க அடிகோலிய அடிகளார் சைவத்தை வளர்ப்பது எவ்வாறு எனச்சிந்தை செய்தனர். அதுகாலை, 'சிவஞான போதம்' என்னும் நூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவராகிய திருவாளர் ஜே. எம். நல்லசாமிப் பிள்ளையவர்கள் கடலூர் டிஸ்டிரிக்ட் முன்சீபாக இருந்தனர். அவர் அடிக்கடி அடிகளாரை வந்து காண்பர். சிவஞான போதத்தின் கருத்தைத் தெளிவாக அடிகளார் அவருக்குக் கூறுவர். (அடிகளாரிடம் அறிந்த அனுபவமே அவரை ஆங்கிலத்தில் அந்நூலை மொழிபெயர்க்க ஊக்கியதென்பது மறுக்க முடியாத உண்மையாகும்.) சைவத்தை வளர்க்க என்ன முயற்சி செய்யலாமென சிந்தனை செய்து கொண்டிருந்த அடிகளாருக்கு முன்சீப் அவர்களின் வருகை பேருதவியாக விருந்தது. தம் உள்ளக் கருத்தைப் பிள்ளையவர்களிடம் கூறினர். ஊக்கமுடைய முன்சீப் அவர்களும் சென்னை சென்று பல அன்பர்களிடம் கூறினர். அவர்கள் ஆதரவும் பெற்றனர். (7-7-1905) விசுவாவசு ஆண்டு, ஆனித் திங்களில், "சைவ சித்தாந்த மகா சமாஜம்" எனப் பெயரியதொரு சமாஜத்தை அடிகளார் தலைமையிலேயே மடாலயத்தில் தொடங்கி வைத்தனர். அதற்கு நாவலர் பாடசாலை சதாசிவம் பிள்ளை யவர்கள் தலைவராகவும், பண்டிதர்,நாகை - வேதாசலம் பிள்ளையவர்கள் (மறைமலையடிகள்) செயலாளராகவும், நியமிக்கப் பெற்றனர். அடிகளார் அதுகாலை, "முருகன் திருவரு

ளும், மடாலயத்தின் குருவருளும் சமாஜ வளர்ச்சிக்குத் துணை புரிவதாக" என வாழ்த்தினர். சமாஜம் செய்யவேண்டிய கடமைகளை மிகத் தெளிவாக எடுத்துரைத்தனர். அடிக்கடி நேரிலும், கடிதங்கள் வாயிலாகவும் சமாஜத்தின் வளர்ச்சி மென்மேலும் ஓங்க வேண்டியவாறெல்லாம் உதவிபுரிந்து வந்தனர். செயலாளரின் குன்றா உழைப்பினால் சமாஜக் கூட்டம் வெகு சிறப்பாகக் கூடத் தொடங்கியது. காங்கிரஸ் கூட்டம் போலவே அதற்கெனத் தனிப் போஸ்டாபீசும், பார்வையாளருக்குத் தனித்தனி யிருக்கைகளும் அமைத்து, வாலண்டியர்களை மிகுதியாக அமைத்துச் செய்திருந்த முறை அனைவராலும் கொண்டாடப் பெற்றதாக விருந்தது. இந்நிலையை அன்பர்கள் மூலம் அடிகளார் கேள்வியுற்றுப் பெருமிதங் கொள்வர். இம் முறையில் அடிகளார் தமிழையும், சைவத்தையும் வளர்க்க இருபெருங் கழகங்களை அமைத்த முறை போற்றற்குரிய தாகும்.

## 8. செவ்விய பணிகள் பரவுதல்

செந்தமிழின் செவ்விய வளம், தெலுங்கு மொழியின் தெள்ளிய சிறப்பு, ஆங்கில மொழியில் அளவுக் கேற்ற அறிவு, வடமொழி நூலில் வழங்கும் நுண்ணிய கருத்துக்கள் ஆகியவற்றை நன்குணர்ந்த அடிகளார் தமிழ் நாட்டுக்குச் செய்துள்ள தொண்டுகள் சொல்லினும் எழுத்தினும் அடங்குவனவல்ல. இற்றைக்கு ஐம்பது ஆண்டுகட்கு முன்னர்த் தமிழ் நாடும், தமிழ் மொழியும் அடைந்திருந்த நிலை எத் தகைத்து என்பதை எவரும் அறிவர். ஆங்கிலப் புயலில் தமிழ்ப்பயிர் அலைப்புண்டிருந்தது. கூட்டங்

களில் தமிழில் சொற்பொழிவாற்றுவோர் மிகவும் அரியராயிருந்தனர். அடிகளார் ஊன்றிய விதையின் விளைவுதான் தமிழ்ப் பயிர், இதுகாலை இத்துணை வளம் பெற்று விளங்குகிறதென்பது மறுக்கக் கூடாத உண்மையாகும். அக்காலத்தில் செந்தமிழ் மொழியின் சிறப்பை விளக்குவதற்கும், சைவசமயத்தின் பரந்த நோக்கத்தைப் பரப்புவதற்கும், கழகங்கள் பலப்பல ஆங்காங்கு நிறுவ வேண்டியது இன்றியமையாதது என்பதை அடிகளார் உணர்ந்தனர்.

வாணி விலாச சபையின் ஆண்டு விழாக்கள் சிறப்பு முறையில் கொண்டாடப் பெற்றன. பாண்டித்துரை தேவர், டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர், ஜஸ்டிஸ் சதாசிவ ஐயர், என்ஜினியர் - மாணிக்க நாயக்கர், சதாசிவம் பிள்ளை, கோ. வடிவேலு செட்டியார், பொ. முத்தையா பிள்ளை, சேதுப் பிள்ளை, சிவகுரு நாதம் பிள்ளை முதலிய அன்பர்கள் வந்து தலைமை தாங்கியும் சொற்பொழிவாற்றியும் சிறப்பிப்பர். அனைவர் சொற்பொழிவினும் அடிகளாரின் சொற்பொழிவே தலைசிறந்து விளங்கும். வரும் அன்பர்களிடம் ஆங்காங்குத் தமிழ்க் கழகங்கள் நிறுவிச் செந்தமிழை வளர்க்குமாறு வற்புறுத்துவர்.

தமிழ் நாட்டு மக்களிடை மொழிப் பற்று, மதப் பற்று ஆகிய பலவும் அமைந்திருத்தல் வேண்டுமென்பது அடிகளாரின் உள்ளக்கிடக்கை. அவற்றைப்பரப்ப முற்படும் அறிஞர்களிடம் அடிகளாருக்கு அளவிறந்த மகிழ்ச்சியுண்டு. அவர்தம் முயற்சியைப் பலபடியாகப் புகழ்ந்து பாராட்டி அவர்கட்கு ஊக்கம் ஊட்டுவர். அடிகளாரின் முயற்சியால் தமிழ்நாட்டில் பல இடங்களில் பல கழகங்கள் தோன்றலாயின.

அடிகளாரின் சொற்பொழிவு கேட்டுப் பலர் அடிகளாருக்கு மாணவர்களாயினர். பாடங்கேட்டுக் கொள்ளவும் பலர் முற்பட்டனர். மாணவர்கட்குத் தமிழ் மொழியைக் கற்பிக்கும் முறையே அடிகளாரிடத்தில் காணப்பெறும் உயர்சிறப்புக்களில் ஒன்றாகும். பிண்டம், பொழிப்பு, பதவுரை, மேற்கோள் முதலியவற்றோடு செய்யுளைப் பன்முறையாகக் கூறி, கேட்போர் உளங்கொளச் செய்விக்கும் செவ்விய முறையை அடிகளார் கையாளுந்திறன் போற்றத்தக்கதொன்றாகும். சொற்பொருள், சொல்நயம், பொருள் நயம், அதில் அமைந்துள்ள இலக்கணச் சிறப்புக்கள் ஆகியவற்றைக் கூறக் கேட்ட மாணவர்கள் என்றும் மறவாது தங்கள் உள்ளத்திருத்தி, செந்தமிழ் மொழியில் சிறப்பெய்தி, பெரும் புலவர்களாயினர். அவ்வாறு புலவர்களாயினோர் செந்தமிழ் நாட்டிற் பலராவர்.

அத்தகைய மாணவர்களுள் தலைசிறந்து விளங்கியவர் திருக்கோவலூருக்கு அணித்தாய மணம்பூண்டியிலிருந்த ம. ரா. குமாரசாமிப்பிள்ளையவர்கள் ஆவார்கள். வாக்கு வன்மையில் ம. ரா. குமாரசாமிப்பிள்ளையவர்களைப் போன்றவர்களை நாம் காணுதல் அரிது. கற்றோரும் மற்றோரும் மகிழ்வுற அடுக்குச் சொற்களால் எதுகை மோனை நயங்களுடன் அவர் புரியும் சொற்பொழிவைப் பாராட்டாதவர்கள் இல்லை. தொடக்கத்தில் பிள்ளையவர்கள் தமது கிராமத்திலேயே, பக்த பால சமாஜம் எனப் பெயரியதொரு கழகத்தை நிறுவினர். அதன் அங்கமாக ஒரு பாடசாலை அமைத்துச் சிறுவர்கட்குப் பாடம் போதித்து வந்தனர். வாரந்தோறும் குருவாரங்களில் பஜனையும், ஆதிவாரங்

களில் சொற்பொழிவும் ஆற்றிவந்தனர். "செந்தமிழும் நாப்பழக்கம்" என்பது போல் வரவர அவரது சொற்பொழிவுசிறப்புறத்தொடங்கியது. அடிகளாரின் எண்ணம் ஈடேற, பிள்ளையவர்களின் சொற்பொழிவு பெரிதும் உபகாரஞ்செய்வதாயிற்று. பிள்ளையவர்கள் வலிய ஒவ்வோரிடங்கட்குச் செல்வர். ஆங்கு அடிகளாரின் செவ்விய புலமையையும், சிறந்த தொண்டையும் விதந்து கூறுவர். மாணவராகிய பிள்ளையவர்களின் மூலம் அடிகளாரின் சிறப்பைக் கேள்வி யுற்றோர் பலரும் அடிகளாரை நேரிற் காணவும், அவர்களது அரிய சொற்பொழிவைச் செவி குளிரக் கேட்கவும் ஆவல் கொள்வாராயினர்.

பிள்ளையவர்கள் சென்ற விடங்களிலெல்லாம் கழகங்களைத் தோற்றுவிப்பதும், அதில் அடிகளாரின் புகழை அடிக்கடி எடுத்துக் கூறுவதும், ஆண்டு விழாவிற்கு அடிகளாரையே தலைவராகக் கொண்டு நடத்த ஏற்பாடு செய்வதும், தமது கடமைகளில் ஒன்றாகக் கருதி செய்து வந்தனர். விவேகானந்தர் மூலம் இராமகிருஷ்ண பரம ஹம்சரது புகழ் எங்கும் பரவியது போன்று ம. ரா குமாரசாமி பிள்ளையவர்கள் மூலம் ஞானியாரடிகளது புகழ் எங்கும் பரவலாயிற்று.

தன் தொண்டோடு அமையாது ம. ரா. குமாரசாமிப் பிள்ளையவர்கள் மடாலயத்திலேயே, "ஞானியார் மாணவர் கழகம்" எனப் பெயரியதொரு கழகத்தை நிறுவினர். அடிகளாரிடம் கல்வி பயிலும் மாணவர்கள் அனைவருமே அதில் அங்கத்தினராக விருந்தனர். அக்கழகத்திலும் அடிகளார் தலைமை பூண்டு அறிவுச்சுடர் கொளுத்துவதும் உண்டு. அக்கழ

கத்தில் அங்கத்தினராக விருந்தவர்கள் மணம் பூண்டி திரு. ட. ரா. குமாரசாமி பிள்ளை அவர்கள், புலிசை மடாலயம் - திரு. ப. கந்தசாமி ஐயரவர்கள், திரு. ப ஆறுமுக ஐயரவர்கள், சோழவல்லி- திரு. ப.பாலசுந்தர நாயனூர் அவர்கள், தோட்டப்பட்டு - திரு. முத்து கிருஷ்ண ரெட்டியாரவர்கள், மஞ்சகுப்பம்-திரு. சி.மு. சா. முத்துகிருஷ்ண ஐயரவர்கள், காஞ்சீபுரம்:- திரு. சிவசாமி தேசிகரவர்கள், கூடலூர் திரு. P. S. வடிவேல் செட்டியாரவர்கள், திருச்சி திரு. மு நடேச முதலியாரவர்கள், திருவெண்ணெய் நல்லூர் - திரு. வடிவேல் முதலியாரவர்கள், வண்டிப் பாளையம் - திரு. பாலகிருஷ்ண முதலியாரவர்கள், புலிசை - திரு. ரங்கையப் பத்தரவர்கள், திரு. ஆ. இரத்தினவேல் பிள்ளையவர்கள், திரு. ஆ. ராஜேஸ்வரம் பிள்ளையவர்கள், திரு. மு. நடராஜ தேசிகரவர்கள், டாக்டர் - இராமலிங்க செட்டியாரவர்கள், திரு. பாலசுப்பிரமணிய தேசிகர் அவர்கள், வண்டிப்பாளை யம் - திரு. உருத்திரசாமி ஐயரவர்கள், சிதம்பரம் - திரு. பொ. இரத்தினசபாபதி முதலியாரவர்கள், திருக் கண்டேசுவரம் - திரு. ஐம்புலிங்க முதலியாரவர்கள், திருத்தினைநகர் - திரு. தம்புசாமி நாயுடு அவர்கள், வெள்ளையூர் - திரு. வி. ஐ. சொக்கலிங்க உடையாரவர் கள், திருவருணை - திரு. இரத்தினசபாபதி ஐயரவர் கள், கோவல்வீரட்டானம் - திரு. துரைசாமி ஐயரவர் கள், சென்னை - திரு. துரைசாமி ஐயரவர்கள், புதுவை திரு. வீ. துரைசாமி முதலியாரவர்கள், புதுப்பேட்டை திரு. சிவசிதம்பர செட்டியாரவர்கள், சிதம்பரம் - திரு. முத்தையா முதலியாரவர்கள், பண்ருட்டி - திரு.

இராஜகோபால செட்டியாரவர்கள் ஆகிய பலராவார்கள்.

இவர்களில் பலர் வாக்குவன்மை பெற்றிருந்தமையால் அவரவர்களும் தங்கள் தங்களால் இயன்றவரையில் அடிகளாரின் புகழைப் பரப்பி வந்தனர். இம்முறையிலும் அடிகளாரின் புகழ் தமிழ் நாடெங்கும் பரவலாயிற்று.

## 9. மாணவர்கள் நிறுவிய கழகங்கள்

"தமிழை வளர்க்க இன்றியமையாது வேண்டற்பாலது, ஆங்காங்குந் தமிழ்க் கழகங்களை நிறுவி தமிழ்த் தொண்டாற்றி, அன்னை வளர்க்க வேண்டுவதே" என அடிகளார் கூறிவரும் செவ்விய மொழிகளைச் செவிமடுத்த மாணவர்களும் ஆங்காங்குக் கழகங்கள் நிறுவ முற்பட்டனர்.

கோவல் - ம. ரா. குமாரசாமிபிள்ளை யவர்கள் மணம் பூண்டி கிராமத்தில், வள்ளற்பாக்கம் (காரணப் பட்டு) சமரச பஜனை ச. மு. கந்தசாமிபிள்ளையவர்கள் தலைமையில் (20-9-1908) "அருட்ஜோதிநாத பக்த பால சமாஜம்" என்னும் பெயரியதொரு கழகத்தை நிறுவினர். அதில் தமிழ் முன்ஷி வ. சு. நடேச ஐயர், வக்கில், T. A. தாதாசாரியார், ஹெட் மாஸ்டர் பொன்னுசாமி முதலியார், கர்ணம் - சுப்புராயலு நாயுடு, கர்ணம் - குப்புசாமிபிள்ளை, வக்கீல் குமாஸ்தா - குஞ்சிதபாதம் பிள்ளை, வக்கில் குமாஸ்தா - குமாரசாமி பிள்ளை, கோட்ட மருதூர் - வேங்கடாசலம் பிள்ளை, ராமானுஜ ஐயா, உருத்திரசாமி உடையார், கீழூர் - சின்னசாமி முதலியார், வேலாயுதம் பிள்ளை ஆகிய பலர் அங்கத்தினராக விருந்தனர். ஞாயிறுமாலை

தோறும் சொற்பொழிவும், குருவாரந்தோறும் பஜனை யும் நடைபெற்றன. ஆண்டுவிழாக்களில் அடிகளாரே தலைமை தாங்கி நடத்தினர்.

திருவெண்ணெய் நல்லூர் திரு. வடிவேல் முதலி யார், திருவெண்ணெய் நல்லூர் தமிழ் வித்துவான் சுப்பிரமணிய முதலியார் அவர்களின் தலைமையில் (24-10-1909) "கம்பர் கலாமிர்த சங்கம்" எனப் பெயரியதொரு கழகத்தை நிறுவினர். அதில், தி. நரசிம்ம பாகவதர், ஆ. கந்தசாமி முதலியார், நரசிங்க ராவ், வெங்கட்ரமண முதலியார், சடாக்ஷரவேலு முதலியார், தடுத்தாட்கொண்டூர் சந்திரசேகர முத லியார், சிறுமதுரை - மாசிலாமணி உடையார், மடம் - சுபானந்த ஐயர் ஆகிய பலர் அங்கத்தினர்களாக விருந் தனர். வாரக்கூட்டங்களும் ஆண்டு விழாக்களும் அடிகளார் ஆதரவையில் நன்கு நடைபெற்றன.

சோழவல்லி - பாலசுந்தர நாயனாவர்கள் நெல்லிக் குப்பத்தில் 25-4-1910 ல், 'வாகீச பக்த ஜனசபை' எனப் பெயரிய தொரு கழகத்தை அடிகளாரின் தலை மையிலேயே நிறுவினர். அதில், மாணிக்க நாயனார் சு. நரசிங்க முதலியார், இராஜ ரத்தினம் செட்டியார், இராமசாமி நாயனார் முதலிய பலர் அங்கத்தினர்களாக விருந்தனர். திருநாவுக்கரசு சுவாமிகளின் குருபூஜை ஆண்டு தோறும் சிறப்பு வகையாகக் கொண்டாடப் பெற்றது. அடிகளாரும் மாணவர்களுடன் ஆங்குச் சென்று சொற்பொழிவாற்றி, விழாவைச் சிறப்புற நடாத்தி வந்தனர்.

புதுவை-பங்காருபத்தரவர்கள் புதுவையில்(1911) விரோதிகிருது ஆண்டு,சித்திரைத்திங்கள்,முதல்திகதி,

குருவாரத்தன்று, 'கலைமகள் கழகம்' எனப் பெயரிய தொரு கழகத்தை நிறுவினர். வித்துவான்-பெரியசாமி பிள்ளை, திருப்புளிசாமி ஐயா, ஐவுளி-சு. அண்ணுமலை முதலியார், A.V.முத்தையா முதலியார், வீ. துரைசாமி முதலியார், உருளையாம்பேட்டை - வேங்கடாசல நாயகர், கிரந்தே-சிவசங்கர செட்டியார், சிவ சச்சிதானந்த செட்டியார், தி. வேங்கடராம ஐயங்கார், சுப்பிரமணிய பாரதியார், வ.வே.சுப்பிரமணியஐயர், வக்கீல்-இராஜு வேல்முதலியார், ஜெகந்நாதநாயுடு, அரங்கசாமி செட்டியார், இராகவ-திருவேங்கட ஐயர், சு.அ. சுப்புராய பிள்ளை, கோ. தியாகராஜமுதலியார் ஆகிய பலர்அங்கத்தினராகவும், அபிமானிகளாகவும் இருந்து கழகத்தைச் சிறப்புற நடாத்தி வந்தனர்.

அடிகளாரின் தலைமையிலேயே 'கலைமகள் கழகம்' ஆண்டு விழாக்கள் பல ஆண்டுகள் நடைபெற்றன. சொற்பொழி வாற்றவும், செவி மடுக்கவும் வரும் அன்பர்கட்கு, கிரந்தே-சிவசங்கர செட்டியாரவர்கள் செய்தவிருந்து உபசரிப்புஎன்றும் மறக்கற்பாலதன்று. புதுவை செங்குந்தர்கள், அடிகளாரின் உபாசனு மூர்த்தியாக உடன் போதரும் அறுமுகப்பெருமானுக்கு, வெள்ளியினுல் திருவாசிகை செய்தளித்துத் தங்கள் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொண்டனர் என்பது குறிப்பிடத் தக்கதொன்ருகும்.

புதுவை செந்தமிழ்ப் பிரகாச சபைக்குப் பழநிசாமி முதலியார், முருகசாமிபிள்ளை முதலிய அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி, அடிகளார் சென்று தலைமை தாங்கி, சொற்பொழிவாற்றி அனைவரையும் மகிழ்வித்து வந்தனர்.

காஞ்சீபுரம் சிவசாமி தேசிகரவர்கள் காஞ்சீபுரத்தில் அடிகளாரின் நினைவு என்றும் இருக்கவேண்டுமெனும் உள்ளக்கருத்தோடு, 'ஞானியார் சங்கம்' எனப் பெயரியதொரு கழகத்தை நிறுவியுள்ளனர். இவ்வாறு அடிகளாரிடம் கல்வி பயின்ற மாணவர்கள் பலர் பல்வேறிடங்களில் சங்கங்கள் நிறுவி ஆங்காங்கு அடிகளாரை அழைப்பித்து ஆண்டுவிழாக்களில் தலைமை தாங்கச் செய்து தம்தம் நன்றியறிதலைக் காட்டிக் கொண்டமை அளவிடற்கரியன வாகும். அவற்றுள் கூடலூர் சன்மார்க்கசபை, வண்டிப்பாளையம் சோமாஸ்கந்த பக்தஜனசபை, புலிசை சரஸ்வதி விலாசசபை, உத்தரமேரூர் சைவ சித்தாந்தசபை, செங்கற்பட்டு சமயாபி விருத்தி சங்கம், காவித்தண்டலம் சைவ சித்தாந்தசபை முதலியனவாகும்.

## 10. செல்வர்கள் நட்பு

அடிகளாரின் சொற்பொழிவை மாந்தி இன்பமெய்தப் பெற்றவர்கள் கல்வி வல்லுநர் மட்டுமின்றி செல்வ மெய்தப் பெற்றவர்களும் உளர். அவர்களும் வந்து கேட்டு மகிழ்வர். அவர்களில் பலர் அடிகளாரின் அன்பைப் பெறும் ஆர்வத்துடன் அடிக்கடி மடாலயத்திற்கு வந்து பழகுவர். அடிகளாரும் அவர்கள்பால் அன்புடையவராகி இன்மொழி கூறி வரவேற்று உபசரிப்பர்.

முருகேச நகர் பழநியாண்டி முதலியாரவர்கள் அடிகளார்பால் அளவுகடந்த அன்பு மிக்கவர். காலை மாலை இருவேளையும் மடாலயத்திற்கு வந்து, கழல் வணங்கித் திருநீறு பெற்றுச் செல்வர். அவரைப்

பின்பற்றி முருகேச நகர் மாணிக்க முதலியாரவர்களும் ஒவ்வொரு கால் வரலாயினர்.

சிவாலய திருப்பணி புரிந்து வந்த தீ. சொ. மு. முருகப்ப செட்டியார், தீ. சொ. நாகப்ப செட்டியார், தீ. நா. நாச்சியப்ப செட்டியார், முத்தையா செட்டியார், கிருஷ்ணப்ப செட்டியார், இராமஞ் செட்டியார் ஆகியவர்களும் அடிகளார்பால் அன்பு செலுத்தி வந்தனர்.

புதுக்குப்பம் முத்துசாமி நாயுடு, பூர்ணங்குப்பம் முனிசாமிபிள்ளை முதலிய பல அன்பர்கள் மடாலயத்தி லேயே சிறிதுநாள் தங்கியிருப்பது முண்டு. இவ்வாறு செல்வர்கள் பலர் அடிகளார்பால் அன்பு கொண்டு அடிக்கடி மடாலயத்திற்கு வர நேரவே மற்றைய வூரிலுள்ளவர்களும் மடாலயத்திற்கு வந்து போவதாயி னர். அவ்வாறு வந்து போவதால் பல அரிய செயல் கள் செய்து முடித்தற்கு அடிகளாருக்கு பேருதவியாக விருந்தது. உத்தியோகஸ்தர்கள் பலர் வலிய வந்து அடிகளாரின் சொற்பொழிவு கேட்டு அன்பரா வாராயினர். உத்தியோகஸ்தர்கள் மூலம் வேண்டிய உதவியைப் பெற அடிகளாரின் ஆதரவு பெரிதும் உதவி செய்யுமெனக் கருதிவரும் செல்வர்களும் பலருண்டு.

தங்களின் நினைவுக் குறிப்பு அடிகளாருக்கு என்றும் மறவாம விருக்கும் வண்ணம் முருகேசநகர் திரு. பழநியாண்டி முதலியாரவர்களும், புதுக்குப்பம் திரு. முத்துசாமி நாயுடு அவர்களும் அடிகளாருக்குத் தங்கத்திறைல் செச்சை ஒன்று செய்து அணி

வித்துத் தங்கள் நன்றி யறிதலைத் தெரிவித்துக் கொண்டனர்.

செல்வர்களில் பலர் விசேட தினங்களில் முருகப் பெருமான் அபிடேக ஆராதனைக்கெனப் பால், தயிர், நெய், பழம் முதலியன அனுப்பி வைப்பதும் உண்டு. அடிகளாரைக் காணவரும் அனைவரும் கையுறைகளுட னேயே வந்து, முன்னர் வைத்துக் கழல்வணங்கித் திருநீறு பெற்று அமர்வர்.

ஒருகால் ஒரு ரெட்டியாரவர்கள் தமக்குச் சொந்தமான பலா மரத்தில் காய்த்த வேர்ப்பலாப் பழம் ஒன்றை முருகப்பெருமான் ஆராதனைக்கு அனுப்ப எண்ணினர். அதனை ஏற்றுக் கொள்ளுமாறு அடிகளாருக்கு ஒரு கடிதமும் எழுதி ஓர் ஆள் மூலம் கொடுத்து அனுப்பினர். பழத்தைச் சுமந்து வந்த ஆள் உலக அனுபவம் அறியாதவன்; அடிகளாரிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமெனும் முறை மையும் அறியாதவன். அவன்தான் சுமந்து வந்த பலாப்பழத்தை அடிகள் முன்னர் இறக்கிவைத்தான். கடிதத்தை அளித்தான். அடிகளார் அதனைப் பிரித்துப் பார்த்து மகிழ்ந்தனர். பழத்தின் பருமையைக் கண் ணுற்றனர். அதுசமயம் வந்த ஆள் அடிகளாரை நோக்கி, "என்னுங்க சாமி இந்தப் பெரும் பண் ணியை என்னாலே தூக்கிக்கிட்டு வர முடியலிங்க" என்றான். அடிகளார் பழத்தைச் சுட்டிக் காண்பித்து "இதனையா பன்றி என்று கூறுகின்றனை" என்றனர். அதற்கவன், "இல்லாட்டி இம்முட்டுகனம் இருக்குங் களா" என்றனன். அடிகளார் அவனது அறியாமைக் குப் புன்சிரிப்புக்கொண்டனர். வந்த பழத்தை ஏற்றுக்

கொள்ள ஒருப்படவில்லை. அனுப்பி வைத்தவருக்கு அறிவுறுத்த எண்ணினர். பழம் எடுத்து வந்தவனுக்கு உணவளிக்கச் செய்தனர். சிறிது தொகையும் அவனுக்குப் பரிசாக அளித்தனர். அவனிடமே அப்பழத்தைத் திருப்பிக் கொடுத்தனர். அதனைக் கொடுத்தவரிடமே கொண்டு போய்ச்சேர்ப்பிக்குமாறு கட்டளையிட்டனர். "ஏஞ்சாமி?" என்றான். அதற்கு அடிகளார், "நீ கொண்டு வந்த பன்றியை ஆராதனை செய்வதற்குக் கண்ணப்ப நாயனார் போன்ற பக்குவநிலை எங்கட்கு இன்னும் வரவில்லை" என்று கூறுமாறு சொல்லித் திருப்பி விட்டனர். வந்த ஆள் அதனை மீண்டும் எடுத்துச் சென்றான்.

மறுதினம் ரெட்டியாரவர்கள் வேறு இரண்டு மூன்று பலாப்பழங்களை வண்டியிலேற்றிக்கொண்டு அடிகளாரிடம் வந்தனர். வணங்கினர். தன் ஆளின் அறியாமையைப் பொறுத்தருளுமாறு வேண்டிக் கொண்டனர்.

மடாலயத்திற்கு வருபவர்கள் அனைவரும் மிக ஜாக்கிரதையாக உரையாடுவர். இழிவு மொழிகளையும், இடக்கர் மொழிகளையும் எவரும் கையாளார். அடிகளார் முன்னிலையில் மரியாதைக் குறைவாக நடந்துகொள்ள எவரும் மனந்துணியார். செல்வ மிகுதியால் செறுக்குற்று இருப்பவர்களும் அடிகளார் முன்னிலையில் அடிமைகள்போல் தலை வணங்கியிருப்பர்.

## 11. மடாலயத் திருப்பணி

மாடலயத்தின் முதற் குருமூர்த்திகளான ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளின் உறை

விடமான திருக்கோவலூர் மடாலயத்தைப் பிரித்துச் செவ்விய முறையில் கட்ட ஆரம்பித்தனர். அதுகாலை உடனுதவியாக விருந்து ஊக்க மளித்தவர் நெற்குன்றம் சு. பொன்னுசாமி பிள்ளையவர்கள் ஆவார்கள். அடிகளார் திருப்பணி முடிவுபெறும் வரையில் திருக்கோவலூரிலேயே தங்கியிருந்து தற்போதுள்ள நிலைமையில் கட்டி முடித்தனர்.

1911-ஆம் ஆண்டில் கோவல் மடாலய வேலை தொடங்கப்பெற்றது. வேலை நடந்துகொண்டிருந்தது. அதுகாலை, மணம் பூண்டி, ம. ரா குமாரசாமி பிள்ளையவர்கள் தங்கள் குல முன்னேற்றங் கருதி ஒரு சங்கம் காண எண்ணினர். அச்சங்கத்தை அடிகளாரின் தலைமையில் ஆரம்பிக்க வேண்டுமென அடிகளாரை மணம்பூண்டிக்கு அழைத்துச் சென்றனர். 6-8-1911 ஆதிவாரத்தன்று அடிகளாரின் தலைமையில் ஒரு கூட்டங் கூடியது. குலாபிமானிகள் பலர் அக்கூட்டத்திற்கு வந்திருந்தனர். தெய்வீக மன்னன் சிறப்புப் பற்றி அடிகளார் தேன்மாரியெனப் பொழிந்தனர்.

மலைய மன்னர், நத்த மன்னர், சுருதி மன்னர் என்னும் முப்பிரிவினையுடைய தெய்வீக ராஜன் வமிச பரம்பரை யினருக்குக் கல்வியறிவு, சதாசாரம், நாகரீகம், ஈஸ்வர பக்தி முதலியவற்றை அபிவிருத்தி செய்யக் கருதி "பார்க்கவ குலச் சங்கம்" எனப் பெரியதொரு சங்கத்தை நிறுவினர். முடியனூர் ராவ் சாஹேப் குழந்தைவேல் உடையார், கும்பகோணம் வக்கீல் சிவஞான உடையார் முதலியோர் அதில் அங்கத்தினராயினர்.

பின்னர் அச்சங்கத்தின் ஆண்டு விழா எங்குக் கூடினும் அடிகளார் ஆங்குச் சென்று தலைமை தாங்கி சொற்பொழிவாற்றி அம்மரபினரை மேன்மையுறச் செய்து வந்தனர்.

1912 - ஆம் ஆண்டில் திருக்கோவலூர் சிவாலயம் கட்டி முடிந்தது. அவ்வாண்டில் கும்பாபிஷேகம் நடைபெற்றது. அந்நன்னாளிலேயே மடாலயத்தின் கிரு கப்பிரவேசமும் வைத்துக்கொண்டனர். அன்று அடிக ளாரின் தலைமையில், 'கோவல் சைவ சித்தாந்த சமா ஜம்' எனப் பெயரியதொரு கழகம் காணப் பெற்றது. கோயிலூர் ஸ்ரீமத் சுப்பையா சுவாமிகள், வெங்கநூர் திரு. கணபதி சாஸ்திரிகள், தூத்துக்குடி திரு. முத் தையா பிள்ளையவர்கள், ம. ரா. குமாரசாமி பிள்ளை யவர்கள் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

மறுதினம், 'ஞானியார் மாணவர் கழகம்' ஆண்டுவிழாவும், அடுத்தநாள், 'பார்க்கவ குலச் சங்கம்' ஆண்டு விழாவுமாக மூன்று நாட்கள் சிறப் புற நடைபெற்றன.

அடுத்த ஆண்டு திருப்பாதிரிப்புலியூர் மடாலயத் தின் முன்புறத்தில் போட்டிருந்த தென்னங்கீற்றுக் கொட்டகையைப் பிரித்து விட்டுத் தற்போதுள்ள முறையில் கட்டி முடித்தனர். அதன் கிருகப் பிர வேசத் தன்று, 'வாணி விலாச சபை'யின் ஆண்டு விழாவையும், 'மாணவர் கழகம்' ஆண்டு விழாவை யும் வைத்துச் சிறப்பு வகையாக நடாத்தினர். வாணி விலாச சபைக்கு, டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர் களும், மாணவர் கழகத்திற்குப் ப. வே. மாணிக்கநாயக் கர், B. E. M., C. I. அவர்களும் தலைமை தாங்கினர்.

பொ. முத்தையா பிள்ளை, சிவகுருநாதம் பிள்ளை, சேதுப்பிள்ளை, மு. நடேசமுதலியார், ரங்கையபத்தர், ரெவரெண்ட், இங்ஸ்பரி, அழகுசுந்தரம் பிள்ளை முத்து கிருஷ்ண ரெட்டியார் முதலியவர்கள் சொற் பொழிவாற்றினர். ம. ரா. குமாரசாமி பிள்ளையவர்கள் வந்தனங் கூறினர். அடிகளாரின் வாழ்த்துரை இவற் றுள் மிகச்சிறந்து விளங்கிற்று.

அதற்குச் சிறிது காலஞ் சென்ற பின் ஆரணி, சத்திய விஜய நகரம் ஆகியவற்றிலுள்ள மடாலயங் களையும் பிரித்துச் சிறப்பு வகையாகக் கட்டி முடித் தனர். இதற்குக் குட்டி செட்டியார் போன்ற அன் பர்கள் பேராதரவாக விருந்தனர். ஆங்காங்குள்ள மடாலயபூசை ஒழுங்காக நடைபெறும் வண்ணம் அந்தந்த நகரிலுள்ள தக்கவர்களை நியமித்து அவர்கள் மேற்பார்வையில் நடக்கவும் ஏற்பாடு செய்தனர்.

## 12. வேலூர் சைவ சித்தாந்த மகா சமாஜம்

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் எட்டாம் ஆண்டு நிறை விழாவைவேலூரில் கூட்டுவதென அந்த சமாஜத்தினர்முடிவுசெய்திருந்தனர். அதற்குத்தலைமை தாங்கி நடத்த வேண்டுமென அடிகளாரைக் கேட்டுக் கொண்டனர். அடிகளாரும் அதற்கு இசைந்தனர். அடிகளார் எங்குச் செல்ல நேரினும் சிவிகைமீது இவர்ந்து செல்வதே மரபு. அம்முறைப்படி வேலூர் செல்ல சிலதினங்கள் செல்லும் என்பதை உணர்ந் தனர். வழியிலுள்ள திருவருணைத் தலத்தையும் தெரி சித்துச் செல்ல உன்னினர்.

அடிகளார் கார்த்திகை மாதத்திலேயே புறப்பட்டு, தீபோற்சவ ஆரம்ப சமயத்தில் திருவருணை குறுகினர். அன்பர் அருணகிரி முதலியார் இல்லத்தில் தங்கியிருந்தனர். அடிகளாரின் வருகையைக் கேட்டறிந்த தருமகர்த்தர்களான செட்டிப் பிள்ளைகள் அடிகளாரை வந்து கண்டனர். தீபோற்சவத்தின் அங்கமாக அடிகளார் சொற்பொழிவாற்ற வேண்டுமெனக் கேட்டுக் கொண்டனர். அதற்கு அடிகளார் இசைந்தனர்.

முதல் நாள் சொற்பொழிவு ஆலயத்திலுள்ள கலியாண மண்டபத்தில் நடத்த ஏற்பாடு செய்யப் பெற்றது. அடிகளார் ஆங்குப்போந்து, ' சிவ பக்தி " என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றினர். அடிகளாரின் சொற்பொழிவை ஆவலுடன் கேட்க வந்த அன்பர் பலர் வெளியிலேயே நிற்க வேண்டியதாயிற்று. உள்ளே சென்றவர்களும் அமைதியாக விருந்து செவி மடுத்தற்கில்லை. வாயில் வழியிலும் சன்னல்கள் மீதும் மக்கள் ஒருவர்மீது ஒருவர் ஏறி நின்று கொண்டனர். காற்று உள்ளே செல்வதற்கு இடமின்றி யிருந்ததால் புழுக்கம் அனைவரையும் துன்புறுத்தியது. இந்தக் குழப்பத்தால் எவரும் பொருளை விவரமாக அறிந்து கொள்ளக் கூடவில்லை. அதனால் மறுதினமும் சொற்பொழிவாற்ற வேண்டுமென அடிகளாரை வேண்டிக் கொண்டனர்.

மறுநாள் கூட்டம் கலியாண மண்டபத்திற்கு முன்புற முள்ள பிரகாரத்தில் கூட்டப் பெற்றது. ஏராளமான அன்பர்கள் குழுமி யிருந்தனர். அடிகளார் வழக்கம்போல் இருந்து சொற்பொழி வாற்றத்

தொடங்கினர். அடிகளாரின் முகம் தெரியவில்லை யெனப் பலர் எழுந்து நிற்கத் தொடங்கினர். குழப் பம் உண்டாயிற்று. அவர்கள் அனைவரையும் இருக் கச் செய்து அடிகளார் தாமே எழுந்து நின்று சொற்பொழிவாற்றத் தொடங்கினர். வழக்கத்திற்கு மாறாக அடிகளார் எழுந்து நின்றதும் உடல் நடுங்கத் தொடங்கிற்று. உடனே அங்கிருந்த அன்பர்கள் ஒரு சிறு ஸ்டூலைக் கொண்டு வந்து போட்டனர். அதன்மீது கைப் பெட்டியைத் தூக்கி வைத்தனர். அதன்மீது கையை ஊன்றிக் கொள்ளச்செய்தனர். அதன்பின் அடிகளார் "அருணையும் அடியார்களும்" என்னும் பொருள்பற்றிக் கேட்போர் உள்ளம் உவகை கொள்ள சொற்பொழி வாற்றினர். அன்று முதல் அடிகளார் இருந்து சொற்பொழிவு வாற்றுவதோடின்றி, நின்று சொற்பொழிவாற்றவும் தொடங்கினர்.

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் எட்டாம் ஆண்டு நிறைவுவிழா வேலூரில் ஒரு நாடகக் கொட் டகையில் கூடியது. பேரறிஞர்கள் பலர் ஏராளமாகக் குழுமி யிருந்தனர். வரவேற்பு உரைகட்குப் பின் தலைவர் முன்னுரை ஆரம்பிக்கப் பெற்றது. அடிக ளார் எழுந்து நின்றனர். 'சைவம்' 'சித்தாந்தம்' என இருவகையாகப் பிரித்துக் கொண்டு இரண்டு மணி நேரம் சள சள வென்று தேன்மாரி பொழிவது போல் கேட்போர் மகிழ்வெய்தச் சொன்மாரி பொழிந்தனர் செவிமடுப்போர் அனைவோர் கண்களினின்றும் ஆனந்த பாஷ்பம் பொழிந்தன. 'பிறவியினுலாய பயனை இன்றே பெற்ரேம்' எனக்கூறிக்கொண்டனர். பொ. முத்தைய பிள்ளை, அரங்கசாமி நாயகர், ம. தி. பானுகவி சுவாமி

கள், ஆலாலசுந்தரமுதலியார், ஆ. சிங்காரவேலுமுதலியார், இ. ஆதிமூலமுதலியார், ஆண்டாள் அம்மையார், சோணாசலபாரதியார், ம. ரா. குமாரசாமிபிள்ளை, வி. ஐ. சொக்கலிங்க உடையார் முதலிய பல அன்பர்கள் சொற்பொழிவாற்றினர். மும்மணிகளென நாங்கள் கூறிக்கொள்ளும் திரு. வி. கலியாணசுந்தரமுதலியார், ச. சச்சிதானந்தம்பிள்ளை, மணிமங்கலம் திருநாவுக்கரசுமுதலியார் ஆகிய மூவரும் இளஞ்சிங்கங்கள் போல் கர்ச்சித்தனர். ஆண்டுவிழாவில் அடிகளார் நிகழ்த்திய தலைமையுரையும், முடிபுரைகளும், அறிஞர்களோடு அளவளாவி நிகழ்த்திய அறிவுரைகளும் அனைவர் மனத்தையுங் கொள்ளை கொண்டன.

அடுத்த 1914-ஆம் ஆண்டில் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் ஒன்பதாம் ஆண்டு நிறைவுவிழா கூடலூரில் (cuddalore O. T.) அடிகளாரின் தலைமையிலேயே முத்துக்குமாரசாமி செட்டியார் ஆதரவில் மிகச்சிறப்பாக நடைபெற்றது. பின்னர் அந்த சமாஜம் அத்துணைச் சிறப்பாக நடைபெறுமல் பெயரளவில்மட்டும் இருந்து விளங்கி வந்தது.

புதுவை கலைமகள் கழகத்தினர், "கலைமகள்" என்னும் மாதவெளியீட்டை 1913-ஆம் ஆண்டு தொடங்கினர், அதற்கு அடிகளார் முன்னுரை எழுதித் தந்து அப்பத்திரிகையைச் சிறப்பித்தது போற்றற்குரிய தொன்றாகும்.

1913 - ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில், வேலூரில் நடைபெற்ற சைவ சித்தாந்த மகா சமாஜத்தில், அடிகளார் தலைமை வகித்து நடத்திய சொற்பொழிவு குறித்து, சித்தூர், போர்டு உயர்தர பாடசாலை தலைமை

ஆசிரியர், C. M. பார்த்தசாரதி முதலியார் அவர்கள் ஹிந்து' பத்திரிகைக்கு எழுதியனுப்பியுள்ள கட்டுரையைக் கீழே தருகிறோம்.

OM

Saravana Bhava

Extract from 'The Hindu' Jan. 13, 1914.

The Eighth Saiva Siddhanta Conference.

(From a Correspondent.)

The Eighth Anniversary of the "Saiva Siddhanta Maha samajam" was celebrated at Vellore on the 26th, 27th and 28th December 1913. During the entire session, the enthusiasm that prevailed, judged both by the numbers that attended and the interest displayed by the audience,was remarkably great. Indeed those who had attended the earlier anniversaries declared that the Vellore Conference was the most successful of any in the annals of the Samaj. One or two outstanding features of the Conference deserve, in my opinion the hospitality of your columns.

The most importent circumstance that contributed to this remarkable success was the reputation which the President of the Conference had in the Saiva Community—a reputation, which, if he had his full desers, merits to travel farther abroad. His Holiness Sri-la-Sri Siva Shanmukha Meignana Sivacharya Swamigal, President of the Gnaniyar Mutt at Tiruppapuliyur is truly a man "than whom no higher sat" in the Presidential chair

of any Mutt at least in recent times. He is an erudite scholar in Tamil, and is deeply learned in the Saiva Siddhanta Philosophy as expouded in the most mystic works in Tamil. His knowledge of Sanskrit, which came out so clearly in his Presidential and other utterances, was found quite sound as far as it went, and is, quite adequate for the purpose for which he employs it, which is to set forth, and if possible ratify, the teachings promulgated in our Siddhanta Tamil literature. One remarkable feature that characterised all the Swamigal's lectures was the absolute purity and uniform dignity of their diction, style and spirit, a pleasing contrast to the sickening medley to which we are often treated in the Harikathas and puranic sermons which are but too frequently a jarring combination of stilted diction with very vulgar Tamil but little removed from the obscene. But with the Swami's power of chaste and dignified diction, his piety and relegious fervour readily captured the hearts of his audience, and filled the large hall in which the Conference met with a strong aroma of religious enthusiasm and spiritual uplifting, during everyone of the three days of the session. It was therefore with perfect justice that the assembled Saivites and even others unanimously declared that his Holiness was most worthy of the great deference, rather the great reverence, that was paid to him by the gathering—but a reverence let me not omit to add, which he received with the greatest modesty and laid at the feet of his God

Sri Subramania, as His own due. Would to God Subramania that more of our Mutts were presided over by teachers of his stamp.

Contributed by his friend and admirer:
C, M. Parthasarathi Mudaliyar, Headmaster,
Board High, School, Chittoor.

## 13. திருவருணை சந்திவிலாச சபை

திருவண்ணுமலை சிவாலயத்தில் புரவி மண்டபத்திற்குக் கீழ்ப்புறமுள்ள இடத்தில் ஜவுளி, ந. சி. முனிசாமி முதலியாரவர்கள் ஒரு கட்டிடம் கட்டினர். அதில் நவராத்திரி ஆறும் உற்சவத்தன்று அடியார்கட்கு அன்னமிட்டு வந்தனர். ம. ரா. குமாரசாமிப் பிள்ளையவர்கள் அங்குச் சென்றிருந்தபோது ஒரு சொற்பொழிவாற்றினர். தீபோற்சவ சமயங்களில் சொற்பொழிவாற்றுவதற்கு இது ஒரு சிறந்த இடமென்றும், இங்கு ஒரு சபை நிறுவுதல் இன்றியமையாத தெனவுங் கூறினர். அவ்வாறே ஒரு சபை நிறுவப்பெற்றது. அதன் அங்கமாக ஒரு நூல் நிலையமும் அமைத்தனர். அதன் முதல் ஆண்டு நிறைவு விழாவிற்குத் தலைமை வகித்தருள வேண்டுமென அடிகளாரை வேண்டிக் கொண்டனர். அடிகளார் இசைந்தனர். அதுகாலை அடிகளார் பூரணுங்குப்பம் முனிசாமிப் பிள்ளையவர்களின் அழைப்பிற்கிணங்கி ஒரு திருமணத்திற்குச் சென்றிருந்தனர்.

மீண்டு வருகையில் அடிகளார் மயிலத்தில் தங்க நேர்ந்தது. அது சமயம் அங்கு மடாலய அதிபர்களாக விருந்த சிவஞானபாலய சுவாமிகள் அவர்கள் அடிகளாரை அன்புடன் வரவேற்று வேண்டிய உபசாரங்

கள் புரிந்தனர். அடிகளார் சில தினங்கள் அவ்விடம் தங்கியிருந்து சொற்பொழிவாற்றினர். அதன்பின் அடிகளார் திருவருணையடைந்தனர். 19-5-1916 முதல் மூன்று தினங்கள் அடிகளார் தலைமையில், 'சத்தி விலாச சபை'யின் முதல் ஆண்டு நிறைவு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. கயப்பாக்கம்-சதாசிவ செட்டியார், மோசூர்-கந்தசாமி முதலியார், பொன் மார்-நடேச முதலியார், திரு. வி. கலியாணசுந்தர முதலியார், ச. சச்சிதானந்தம் பிள்ளை, மணிமங்கலம்-திருநாவுக்கரசு முதலியார், ம.ரா. குமாரசாமி பிள்ளை, ஆண்டாள் அம்மையார், திரிசிரபுரம்-இ. எஸ். இராம சாமி சாஸ்திரிகள், ஜி. வேங்கட்ராம ஐயர், கபாலி சாஸ்திரிகள், வேலூர் பெ. ச. ரெத்தினவேல் முதலி யார், எஸ். வி. விஜயராகவாச்சாரியார் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். அக் கழகத்தில் அடிகளார் கூறிய முன்னுரை முடிபுரைகள் அனைவர் உள்ளத்தை யுங் கவர்ந்தன. அதுகாலை அடிகளார் பொழிந்த சொற் பொழிவின் திறம் நோக்கி,

"முத்தியெங்கே ஞான முறையெங்கே முன்னோர்பால்
பக்தியெங்கே யோதும் பனுவலெங்கே—இத்தரையில்
சான்றோர் பரவுகின்ற சண்முகமெய்ஞ் ஞானிநீ
தோன்ற திருப்பாயேற் சொல்"

எனச் செந்தமிழ்க்கவி, கே. வி. இராமச்சந்திர ஐயரவர்கள் கூறிய செய்யுள் அன்பர்களை மேலும் பக்தி வெள்ளத்தில் அழுத்துவதாயிற்று. ஆண்டுவிழா முடிந்த பின்னரும் ந. சி. முனிசாமி முதலியாரவர்கள் தமது இல்லத்தில் சில தினங்கள் இருக்கச் செய்து உபசரித்த அன்புடைமை என்றும் மறக்கற்பாலதன்று.

அங்குத் தங்கியிருந்த நாட்களில் ஒருநாள் அடிகளார், இரமணானந்த சுவாமிகளைப் பார்க்க விரும்பினர். அது சமயம், மகரிஷி அவர்கள் கந்தாசிரமத்தில் தங்கியிருந்தனர். அது மலையின்மீது அதிக உயரத்தில் இருந்தமையால் அத்துணை உயரம் ஏறிச் செல்வது மிக்க சிரமம் என எண்ணினர். உடனிருந்த மாணவர்கள் மகரிஷியவர்களை 'விருப்பாக்ஷி' குகைக்கு அழைத்து வருவதாகவும், அடிகளார் விரும்பினால் அங்குவந்து காணுதல் கூடும் எனவும் விண்ணபித்துக் கொண்டனர். அவ்வாறே ஒரு மாணவர் சென்று விருப்பாக்ஷி குகைக்கு மகரிஷியவர்களை யழைத்து வந்தனர். அடிகளார் கையுறையுடன் மகரிஷியவர்களைச் சென்று கண்டனர். உடனிருந்த மாணவர்கள் தேவாரம் ஓதினர். அடிகளார் கொண்டு சென்றிருந்த பழங்கள் அனைவருக்கும் வழங்கப் பெற்றன. பின் அனைவரும் திரும்பி இருப்பிடம் வந்தனர்.

## 14. ஸ்ரீ பாடலேசுவரர் தரும பாடசாலை

ஆண்டில் முதியோரும், இளைஞர்களும் அடிகளார்பால் போந்து பாடங் கேட்பர். அடிகளார் பாடம் போதிக்கும் முறையே ஒரு தனிச் சிறப்பு வாய்ந்தது. செய்யுளின் முதலடியை முன்னர் கூறுவது அடிகளாருக்கு வழக்கமின்று. செய்யுளில் பயனிலை எங்குளதென முன்னர் துருவிப்பார்த்துப் பின்னர் எழுவாயுஞ் செயப்படுபொருளுங் கூறி, அதன்பின் செய்யுளிற் பொதிந்துள்ள முழுக்கருத்துங் கூறுவர். அம்முறையில் அடிகளார் விளக்குவதால் இலக்கணக் கருத்தோடு, மாணவன் பொருளமைதியைப் பெறும்

வன்மையுமுறுகிறான். இதுவே அடிகளார் கையாளும் செவ்விய முறையாகும்.

பாடங்கேட்கும் மாணவர்கட்கு ஐயமுண்டாயின் அதனை அவர்களின் முகக் குறிப்பினாலேயே யுணர்ந்து அவ்வையங்களைப் போக்குவர். இதனை உடனிருந்து கேட்கும் செல்வர்கள் பலர், "இளைஞர்கள் கல்வி கற்கத் தக்கதாக ஒரு பாடசாலை அடிகளாரின் மேற்பார்வையிலிருக்கின், சிறுவர்களில் பலர் சிறந்த கல்வியைப் பெறுதற்கு ஏதுவாகும்" என அடிக்கடி கூறுவர். அடிகளாரும் அதற்கேற்ற காலத்தை எதிர் நோக்கி யிருந்தனர்.

சிவாலயத் திருப்பணி புரிந்த. கடியாப்பட்டி யென்னும் இராமச்சந்திரபுரம், சொ. தீ. சொக்கலிங்க செட்டியார் என்னும் நாகப்ப செட்டியாரவர்கள் ஒரு பாடசாலை நிறுவ முன்வந்தனர். அடிகளார் தமது மேற்பார்வையில் வைத்து நடத்துவதாயின் அப்பாடசாலை சம்பந்தமாக ஏற்படும் செலவு முழுவதையும் தாமே கொடுப்பதாக ஏற்றுக் கொண்டனர்.

அடிகளார் தம் மடாலயத்திற்கு முன்புற மிருந்த மடாலயத்திற்குச் சொந்தமான மனையை அதற்கென விட்டனர். செட்டியாரவர்கள் பக்கத்திலுள்ள மனையையும் வாங்கினர். அதில் பெரியதாகக் கீற்றுக் கொட்டகை யொன்று அமைத்துத் தந்தனர்.

"ஸ்ரீபாடலேசுவரர் தரும பாடசாலை" எனப் பெயரியதொரு பாடசாலையை 2-2-1917-ஆம் ஆண்டில் தொடங்கினர். அடிகளார் தம் மாணவரில் ஒருவரான உருத்திரசாமி ஐயரவர்களைத் தலைமை ஆசிரியராக அமைத்தனர். வேறு சிலர் உதவி ஆசிரியர்களாக

அமர்த்தப் பெற்றனர். முதலில் நான்கு வகுப்புக்கள் நிறுவப் பெற்றன. திருப்பாதிரிப்புலியூர், வண்டிப் பாளையம், முருகேச நகர் ஆகிய இடங்களிலிருந்து வந்து மாணவர்கள் கல்வி பயிலத் தொடங்கினர். அதனை, 'ஞானியார் பாடசாலை' என அனைவரும் கூறுவாராயினர்.

பாடசாலைக்கு அங்கீகாரம் (Recognize) அளிக்குமாறு விண்ணப்பித்துக் கொள்ளப் பெற்றது. செயிண்ட் ஜோசப் ஹைஸ்கூல் பிராஞ்சு பாடசாலைக்கு இப் பாடசாலையால் இடையூறு நேருமெனை அவர்களால் ஆக்ஷேபிக்கப் பெற்றது. அப்பொழுது இருந்த கல்வியதிகாரி மேற்கூறிய காரணத்தால் அங்கீகாரம் அளிக்க மறுத்துவிட்டனர். பின்னர், ஜஸ்டிஸ் சதாசிவ ஐயர் குமாரரான கிருஷ்ணமூர்த்தி ஐயர் கல்வியதிகாரியாக மாற்றப் பெற்று வந்தனர். அவர் வந்ததும் முதன் முதலாக செய்த செயல் இப் பாடசாலைக்கு அங்கீகாரமளித்ததுதான். எதிர்ப்பாராத இந்த உபகாரத்தை அடிகளார் பல சமயங்களில் பாராட்டிக் கூறியதுண்டு.

பின்னர் எட்டாவது வகுப்பு வரையில் வைத்து நடத்தி வந்தனர். மாணவர்கள் மிகுதியாகச் சேரலாயினர். தமிழ்ப் பாடம் சிறப்பு வகையாகவும், மற்றைய பாடங்கள் பொது வகையாகவும் போதிக்கப் பெற்று வந்தன. எல். டி. ஆசிரியர் ஒருவர் தலைமை ஆசிரியராக இருக்க வேண்டுமெனக் கல்வியதிகாரிகள் வற்புறுத்தினர். எம். ஏ., எல். டி., பயின்ற ஆசிரியர் ஒருவர் தலைமை ஆசிரியராக அமர்த்தப் பெற்றனர். அவர் அடிகளாரிடம் வந்து மாதச் சம்பளம் பெறு

வதைத் தாம் விரும்பவில்லை. அதனை வெளிக்குக் காட்டிக் கொள்ளவுமில்லை. இவ்வாறு சில வருடங்கள் சென்றன.

அடிகளார், தென்னாட்டுச் சிவாலயங்களைத் தெரிசிக்கும் வண்ணம் தலயாத்திரை சென்றிருந்தனர். அது காலை தலைமையாசிரியரவர்கள் பாடசாலையை நடத்தும் செட்டியாரவர்கட்குப் பின்வரும் ஆலோசனையைக் கூறினர். 'ஏராளமான பொருள் செலவழித்தும், செட்டியார் பெயர் பாடசாலைக்கு வழங்கவில்லை. 'ஞானியார் பாடசாலை' என்றே ஊரினர் கூறுகின்றனர். எனவே ஞானியாரடிகட்கு இப்பாடசாலையிலுள்ள சம்பந்தத்தை அறவே நீக்கிவிடுவது நலமாகும்' என்பதாம்.

'தமிழ்க் கல்வி சிறப்புற வேண்டுமென்றே ஞானியார் சுவாமிகளது மேற்பார்வையில் பாடசாலையை நடத்த முன்வந்தோம். அவர் சம்பந்தமின்றி பாடசாலையை நடத்த நமக்கு சம்மதமில்லை'யெனச் செட்டியார் கூறியதுமன்றி பொருள் அனுப்புவதையும் நிறுத்திக் கொண்டனர். அடிகளார் திரும்பி வருவதற்குள் பாடசாலை மூடப்பெற்றது.

அடிகளார் வந்து கேள்வியுற்று வருந்தினர். ஆனால் அதனை மீண்டும் மடாலயச் செலவிலேயே தொடங்கி நடத்த வேண்டுமென உறுதிகொண்டனர். அதற்கு ஏற்ற சமயம் எதிர்ப்பார்த்திருந்தனர்.

## 15. சிவாலய தெரிசன யாத்திரை

தென்னாட்டிலுள்ள சிவாலயங்களைத் தெரிசிக்க வேண்டுமென அடிகளார் மனத்தில் எண்ணினர்.

காளயுக்தி யாண்டு, கார்த்திகைத் திங்களில் அடிகளார் தலயாத்திரையாகப் புறப்பட்டனர். அடிகளார் பல்லக்கில் இவர்ந்து செல்லுங்கால் ஒருபுறம் ம. ரா. குமாரசாமிப் பிள்ளையவர்களும், மற்றொருபுறம் P. S. வடிவேலு செட்டியாரவர்களும் பல்லக்கைப் பற்றிக் கொண்டு செல்வது கண்ணுக்கினிய காட்சியாகவிருக்கும். அடிகளார் திருமுது குன்றம், சிதம்பரம், திருநாரையூர், காட்டு மன்னார் கோயில், ஓமாம்புலியூர், காணாட்டு முள்ளூர், சீர்காழி, வைத்தீசுவரன் கோயில், மாயூரம் முதலிய தலங்களைத் தெரிசனஞ் செய்து கொண்டும், சொற்பொழிவுகள் நிகழ்த்திக் கொண்டும் ஆடுதுறைக்கு அணித்தாய வடமட்டம் எனும் வேத மடம் அடைந்தனர்.

வடமட்டம் ஜமீன்தாரரான திருவேங்கடம் பிள்ளையவர்கள் அடிகளாரை அன்புடன் வரவேற்றனர். வேதமடம் ஸ்ரீ வாகீச பக்த பதசேகர சபையின் முதல் ஆண்டு நிறைவு விழா 3 - 1 - 1919 முதல் மூன்று தினங்கள் அடிகளார் தலைமையில் சிறப்பு வகையாகக் கொண்டாடப் பெற்றது. கடைசி தினத்தில் "பிறமதம் புகுவோர் விரும்பினால் அவரை மீட்டும் சைவ சமயத்தில் சேர்த்துக் கொள்ள வேண்டும்" என்று ஒருதீர்மானத்தை சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் கொண்டு வந்தனர். கும்பகோணம் தமிழ்ப் பண்டிதர், வெங்கட்ராம ஐயரவர்கள் மீண்டும், அவர்கள் செல்லின் என் செய்வது? இன்று, இவ்வளவு நிர்ப்பந்த முள்ளபோதே அவர்கள் செல்வதால் அவர்களைச் சேர்ப்பதால் நமது சமயத்தின் பெருமையே கெட்டுவிடு மென்றனர். அதனைப் பல அன்பர்கள்

ஆதரித்துப் பேசினர். அதன்பின், 'பிற சமயம் புகுவோர் மனம் மாறி நம் மதத்திற்கு மீண்டும் வரவிரும்பின் அவர்களை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும், அவர்கள் இரண்டாவதாகவும் மதம் மாறுவார்களாயின் அவர்களை என்றுமே சேர்க்கக் கூடாது' என்றும் ஒரு திருத்தப் பிரேரேபணையை திரு. வி. கலியாண சுந்தர முதலியார் கொண்டு வந்தனர். அது அனைவராலும் ஏற்றுக்கொள்ளப் பெற்று முடிவு செய்யப் பெற்றது.

அதற்கு முடிவுரை கூறிய அடிகளார், 'திருவதிகையில் திலகவதியார் என்னும் மாது சிரோமணி பஞ்சாக்ஷரத்தைக் கூறி திருநீறு அளித்து, பிறமதம் புகுந்த தன் தம்பியாரை சைவராக்கினர். ஆண் பிள்ளைகள் என்று சொல்லிக்கொள்ளும் நாமோ இன்று துணிவும் நம்பிக்கையு மின்றி ஆராய்ச்சித் துறையில் இறங்கியுள்ளோம்' என்று சொல்லும் போது அனைவர் கண்களிலும் ஆனந்த பாஷ்பம் பொழிந்தன.

சாமிநாதம் பிள்ளை யவர்களுடைய தூண்டுதலின் பேரில் வடமட்டம் ஜமீன்தாரரான திருவேங்கடம் பிள்ளை யவர்கள் தமது நினைவுக் குறியாக அடிகளாருக்கு அழகியதும், பெரியதுமாகிய ஒரு சிவிகையைச் செய்தளித்தனர். அச்சிவிகை இன்றும் மடாலயத்தில் அழகாக விளங்கிக் கொண்டிருக்கிறது.

அதன்பின், திருநல்லம், திருவீழிமிழலை, திருமருகல், திருமலைராயன் பட்டினம், காரைக்கால், திருநள்ளாறு, மஞ்சக்கொல்லை, வேதாரணியம், குடவாசல், ஸ்ரீவாஞ்சியம், குற்றாலம், திருவிடைமருதூர், திருநா

கேசுவரம், கும்பகோணம், கொட்டையூர், தாதம் பேட்டைபழூர், இன்னம்பர் முதலிய க்ஷேத்திரங்கள் சென்று ஆங்காங்கு சொற்பொழிவாற்றி அன்பர்களை இன்புறச்செய்து தஞ்சையையடைந்தனர்.

சித்தார்த்தி௵ வைகாசி௴ 11௳ கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் ஏழு, எட்டு ஆண்டு விழாவிற்குத் தலைமை தாங்கிச் சிறப்புற நடாத்தினர். அடிகளாரின் சொற்பொழிவு, அங்குள்ளாரையும் மகிழ்வித்தது.

பின்னர், திருக்கண்டியூர், வேதிக்குடி, திருப்பூந் துருத்தி, திருவையாறு, திருக்காட்டுப்பள்ளி, அடைஞ் சூர், இளங்காடு முதலிய க்ஷேத்திரங்களைத் தெரிசித் துக் கொண்டு திரிசிரபுரம் அடைந்தனர்.

ஆனி௴ 21௳ திருச்சி சைவசித்தாந்த சபையை தலைமை தாங்கி நடாத்தினர். அவ்விடத்தினின்று நீங்கி, திருக்கற்குடி, பூவாளூர், லால்குடி, உறையூர், பாச்சிலாச்சிரமம், திருவானைக்கா, அரசங்குடி, தென் னூர், புதுக்கோட்டை முதலியவற்றில் தங்கி, சொற் பொழிவாற்றிக் கொண்டு, பலவான்குடியை அடைந் தனர். ஆவணித் திங்கள் ௨௰-ஆம் தேதியன்று நடை பெற்ற பலவான்குடி 'மணிவாசகமன்றம்' ஆண்டு விழாவிற்குத் தலைமை தாங்கினர். அங்கும் அடிகளா ரின் முன்னுரை முடிவுரைகளைக் கேட்டு மகிழாதா ரில்லை. அதன்பின், வைரவன் கோயில், மேலைச் சிவ புரி, கீழச்சிவபுரி, கோனாப்பட்டு, சொக்கலிங்கபுரம், இராமச்சந்திரபுரம், அரிமழம், அறந்தாங்கி, பெருந் துறை ஆகிய நகர்களில் தங்கி சொற்பொழி வாற்றிக் கொண்டு கார்த்திகை௴ 10௳ காரைக்குடியை யடைந்தனர்.

நாட்டுக்கோட்டை நகரத்துச் செட்டிப் பிள்ளைகள் அடிகளாரை அன்பு பெருக வரவேற்றனர். அளவு கடந்த உபசரணை புரிந்தனர். "மணிவாசகர்" என்னும் பொருள்பற்றி மூன்று தினங்கள் அடிகளார் அன்பு மழை பொழிந்தனர். அவரவரும் ஆனந்தக் கண்ணீர் பெருக அடிகளாரின் சொல்லமுதை மாந்தினர். செட்டிப் பிள்ளைகளின் ஆதரணையில் இறுமாந்திருந்த பராசக்தி—அம்பலவாண நாவலர் என்பார் அடிகளாருக்கு நடக்கும் அளவு கடந்த உபசரணையைக் கண்டு காழ்ப்புக் கொண்டனர். "மற்ற சைவர்களைக் காட்டிலும் வீரசைவர்கள் மணிவாசகரை மிகுதியாகப் போற்றுகின்றனர். வீரசைவர் இல்லங்களில் நன்மை தீமைகளில் திருவாசகம் ஓதல் என்னும் பழக்கம் இன்றும் உண்டு" என்று அடிகளார் கூறிய உரையைத் திரிபாக உணர்ந்தனர். அடிகளார், மாணிக்கவாசகரை வீரசைவர் என்று கூறியதாக ஒரு வதந்தியை எங்கும் பரப்பினர். தம் மாணவர் சிலரைக் கொண்டு, துண்டுப்பிரசுரங்கள் அச்சிட்டு அனைவருக்கும் வழங்கினர். அதில், அடிகளார் மாணிக்கவாசகரை வீரசைவ மரபினர் எனச் சில அன்பர்களுடன் தனித்து உரையாடுங்கால் கூறியதாகவும், அது கொண்டு அவர் அனைவரையும் வீரசைவராக்க முயற்சிப்பதாகவும், அவர் சொற்பொழிவைக் கேட்பின் நமது சித்தாந்த சைவத்திலுள்ள பற்றுக் குறையுமென்றும் எனவே அவர் சொற்பொழிவை எவரும் கேளாதிருத்தலே நலம் என்றும் கூறப்பெற்றிருந்தது. அதனைக்கண்டு அனைவரும் மனம் வருந்தினர்.

ஆற்றார் - சுப்புராம ஐயர் என்பார் அடிகளார்பால் அன்பு மிக்கவர். அந்தத் துண்டுபிரசுரம் அவரது

மனவமைதியைக் கெடுத்ததுபோலும். "துண்டு பிரசுரத்திற் கண்ட கண்டன முற்றும் உண்மைக்குப் புறம்பானவை. அப்பிரசுரம் கையெழுத்தின்றி யிருப்பதே அதற்குப் போதிய சான்றாகும். யாம் கூறியவற்றுள் ஐயமுளதேல் என்பால் நேரில் வரின் விளக்குமாற்றால் விளக்குதும்" என எழுதி ஒரு துண்டுப் பிரசுரம் வெளியிட்டு விட்டனர். மறுநாள் கூட்டத்தில் இது வழங்கப் பெற்றிருந்தது. அடிகளார் கண்டு மனங் கலங்கினர். எக்களிப்புக் கொண்டவர்களும் பலராவர்.

அடிகளார் ஐயரவர்களைத் தனித்து அழைத்தனர். "இன்னா செய்தாரை யொறுத்தல் அவர்நாண நன்னயஞ் செய்துவிடல்" என்பதை யுணர்ந்த தாங்களுமா இவ்வாறு எழுதத் துணிந்தீர். இந்தப்பழி என்பாலன்றோ சாரும். என அறவுரை கூறி அவரது சினத்தைத் தணித்தனர். அவ்வுரைகள் அடிகளார் பால் அனைவருக்கும் மிகுந்த அன்பை வளர்ப்பதாயிற்று.

அதன் பின் அடிகளார் அவ்விடம் விட்டு நீங்கி, தேவகோட்டை, கானப்பேர், தொண்டி, இராமநாதபுரம், இராமேச்சுரம், உத்தரகோசமங்கை, சாயர்குடி, தூத்துக்குடி, திருச்செந்தூர், குலசேகரப்பட்டினம், உடன்குடி, ஆற்றூர், ஆறுமுகமங்கலம், திருவெள்ளூர், திருநெல்வேலி, திருப்புடை மருதூர், அம்பாசமுத்திரம், கல்லிடைக் குறிச்சி, விக்ரமசிங்கபுரம் முதலிய தலங்களைத் தெரிசித்துக்கொண்டு கோட்டாறு அணுகினர்.

கோட்டாறு வேலாயுத முதலியார் என்னும் அன்பர் அடிகளார்பால் அளவு கடந்த பக்தி செலுத்தினர். அடிகளாரின் சொற்பொழிவைக் கேட்டுக் கேட்டு மகிழ்ந்தனர். தக்க ஓவியர்களைச் கொண்டு அடிகளாரின் திருவுருவத்தைப் பலபடியாக எழுதச் செய்து அடிகளாரிடம் அளித்தனர். அவைகள் புலிசை மடாலயத்திலும், கோவல் மடாலயத்திலும் இன்னும் காட்சி யளித்துக் கொண்டிருக்கின்றன.

பின்னர் அடிகளார், பெருவளம், வடசேரி, வடுவீச்சுரம், களக்காடு, கடையம், தென்காசி, திருக்குற்றாலம், தென் இலஞ்சி, புளியங்குடி, சங்கரநாராயணர் கோயில், கழுகுமலை, சாத்தூர், விருதுப்பட்டி முதலியவற்றைத் தெரிசித்துக்கொண்டு மதுரையை அணுகினர். அங்குச் சில பகல் தங்கியிருந்து பழநி சென்றனர். அங்கு முருகப்பெருமானுக்குக் கண்குளிர அபிஷேகம் ஆராதனை முதலியன செய்வித்தனர். பல சொற்பொழிவுகள் நடைபெற்றன. பின் விராலிமலை முதலியவற்றைத் தெரிசித்துக்கொண்டு ரௌத்திரி யாண்டு, ஐப்பசி திங்கள் இறுதியில் அடிகளார் புலிசை மடாலயம் வந்து சேர்ந்தனர்.

அடிகளார் யாத்திரையாகத் தென்னாடு சென்றிருந்த காலங்களில் ; சிதம்பரம் C. S. பொன்னுசாமி முதலியார், குமாரசாமி முதலியார், தில்லைவன முதலியார், திருநாரையூர் காளிங்கமுத்து குமார பிள்ளை, காஞட்டு முள்ளூர் சிவசிதம்பரம் பிள்ளை, துரைசாமி பிள்ளை, சின்மயானந்த பிள்ளை, திருநல்லூர் பெருமணம் பஞ்சாக்ஷர முதலியார், பொன்னுசாமி முதலியார், சீகாழி சிதம்பரநாத முதலியார், வைகல்மாடக்

கோயில் ம. சீனிவாச பிள்ளை, திலதைப்பதி கோவிந்த சாமி பிள்ளை, திருமருகல் இராமசாமி பிள்ளை, திருத் தெளிச்சேரி காரைக்கால் - M. இராமசாமி பிள்ளை, திருவேட்டக்குடி அ. மு. ப. நடேச பிள்ளை, திருநள்ளாறு க. சிங்காரவேற் பிள்ளை, நடேச தேசிகர், திருவாரூர் அப்பாதுரை முதலியார், சபாபதி முதலியார், தியாகராஜ ஞானியார், திருவிளமர் மடப்புரம் - சபாபதி முதலியார், திருமறைக்காடு நடேச பிள்ளை கோடிக்கரை கனகசுந்தரம் பிள்ளை, கோட்டூர் ராஜாமணி பிள்ளை, திருக்காறுயில் முத்து. கரு. அரு. கருப்பண்ண செட்டியார், குடவாயில் சந்தான கோபால் உடையார், திருவாஞ்சியம் அச்சுதமங்கலம் - துரைசாமி உடையார், கஞ்சனூர் இராமு பிள்ளை, தென்குரங்காடுதுறை சிதம்பர செட்டியார், திருவிடைமருதூர் ஞானதேசிக பிள்ளை, குடந்தைக் காரோணம் சிவலிங்க பிள்ளை, தென்குடித்திட்டை T. V. உமாமகேசுரம் பிள்ளை, திருவாலம்பொழில் ஆறுமுக முதலியார், திருவையாறு சே. பொன்னுசாமி பிள்ளை, திருநெய்த்தானம் பஞ்சநத செட்டியார், திருக்காட்டுப்பள்ளி ரத்தினசாமிநாயுடு, திருச்சிராப்பள்ளி மு.நடேச முதலியார், வேங்கிடசாமி நாட்டார், பூவாளூர் அமிர்தஞ் செட்டியார், திருமூக்கீச்சுரம் உலகநாத செட்டியார், சுப்பிரமணிய முதலியார், திருநெடுங்களம் வாலீயம்பட்டி - ரங்கசாமி உடையார், திருப்பாச்சிலாச்சிரமம் கோத்தகுடி தா. அரியநாத பிள்ளை, திருவானைக்கா இராமசாமி செட்டியார், குன்றக்குடி ராம. கு. ராமசாமி செட்டியார், கொடுங்குன்றம் அண்ணாமலை செட்டியார், வெள்ளைசாமி செட்டியார் திருப்பெருந்துறை மு. பெ. காசி செட்டியார், திருக்

கானப்பேர் அள. அரு. அருணாசல செட்டியார், திரு வாடானை ராம. அரு. அரு. ராம. அருணாசல செட்டியார், திருப்புனவாயில் அள. சு. பள. சுப்பிரமணிய செட்டியார், இராமேச்சுரம் அள. அரு. திருநெல்வேலி S. பால்வண்ண முதலியார், பாபநாசம் சிவஞானம் பிள்ளை, சுசீந்திரம் பிச்சையாண்டி முதலியார், சங்கர நாராயணர் கோயில் சங்கர நமச்சிவாய முதலியார், மதுரை இராமநாதஞ் செட்டியார், விராலிமலை மே. மு. பழநியப்ப செட்டியார், திருக்கருகாவூர் ரத்தினப் பிள்ளை, அப்பு நாயக்கர் முதலிய அன்பர்கள் பலர் ஆங்காங்கிருந்து அடிகளாரை அன்புடன் வரவேற்று அவர்களுக்குச் செய்த உபசரணை என்றும் மறக்கற் பாலதன்று.

## 16. அன்றாட வாழ்க்கை

செல்வமும் செல்வாக்கும் உடைய பலர் உண்பதும், உடுப்பதுமே தமது கடமையென எண்ணி வீண் காலம் போக்குவதைக் கண்கூடாகக் காண்கிறோம். நம் அடிகளாரோ அவ்வாறின்றி சுறுசுறுப்பாக எப்பொழுதுமே செயல் புரிந்து கொண்டிருப்பர். அடிகளார் காலை 5 மணிக்கே எழுந்து நீராடி சிவபூசை முடித்துக்கொண்டு, செய்தித் தாள்களை படித்துக் கொண்டிருப்பர். மாணவர்கள் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு ஏழுமணிக்கெல்லாம் வந்து கூடி விடுவர். கடவுள் வணக்கத்துடன் ஆரம்பிக்கப் பெறும் பாடம் பத்து அல்லது பதினொரு மணிவரை நடைபெறும்.

பகலுணவுண்டு சிறிது நேரம் இளைப்பாறுவர். பகல் ஒருமணிக்கு கிறிஸ்தவ தேவாலயத்திலுள்ள

(Nun) கன்னிகா ஸ்திரீகள் பலர் வந்து இலக்கண பாடம் கேட்பர். அது இரண்டுமணி வரை நடை பெறும். பின் வயது சென்ற சிலர் தனித்தனியாக வந்து பாடங்கேட்டுச் செல்வர். மாலை சொற்பொழி வில்லாத நாட்களில் சித்தாந்த பாடங்கேட்கப் பலர் வந்து கூடிவிடுவர். இரவு ஒன்பதுமணி வரையில் சித்தாந்தப் பாடம் நடைபெறும்.

அடிகளாரைக் கண்டு உரையாட எண்ணிவரும் அன்பர் பலர் பாடம் நடைபெறுகையில் வந்து உடனி ருந்து கவனிப்பதும் உண்டு. அவர்களும் நன்கு உணர முன் நடந்த பாடத்தை நன்கு விளக்கிவிட்டுப் பின் அனைவருக்கும் பாடம் போதிப்பர். பாடம் போதிக் குங்கால் இடையிடையே சில உரையாடல்கள் நடை பெறும். அவையும் கற்போருக்கு உறுதுணையாக விருந்து பயனளிப்பதாகும்.

‘திருவையாறு பரமசிவம்’ எனப் பெயரிய வெள்ளையாடை யணிந்த அடிகளா ரொருவர் அடிக் கடி மடாலயத்திற்கு வருவர். சில தினங்கள் தங்கி யிருப்பர். அடிகளார் முன்னிலையில், ‘திருமுருகாற் றுப்படை’ ‘அருணகிரிநாதர் வகுப்பு’ முதலியவற்றை மிகவும் கம்பீரமான குரலில் கூறுவர். கேட்போருக்கு மகிழ்ச்சி தரும். அடிகளாரும் அவர்பால் மிக அன்பா யிருப்பர். மற்றவர்களிடம் அவர் அதிக அதிகார தோரணையிலேயே உரையாடுவர்.

ஒருநாள் காலை, “திருச்சிற்றம்பலக் கோவை யார்” பாடம் நடந்துகொண்டிருந்தது. அன்று சனிக் கிழமை. பரமசிவம் அவர்கள் எண்ணெய் இட்டுக் கொள்ள விரும்பினர். மடாலயத்திலுள்ள ஒரு பணி

யாள் கிண்ணத்தில் எண்ணெய் எடுத்துக்கொண்டு வந்தனன். பரமசிவம் அவர்களை எண்ணெய் இட்டுக் கொள்ள அழைத்தனன். அடிகளாரும் அவரைப் போமாறு பணித்தனர். "அவன் இருகையோடு வந் திருக்கிறானே எப்படி சுவாமி எண்ணெய்இட்டுக் கொள்வது" எனக் கூறினர். மாணவர்கள் அவர் கூறிய மொழிக்குப் பொருள் விளங்காது ஒருவரை யொருவர் பார்த்து விழித்துக் கொண்டிருந்தனர். அதனையுணர்ந்த அடிகளார் மாணவர்களை நோக்கி, "அவர் எண்ணெய் இட்டுக்கொள்ள இருகை போதிய தல்லவாம் பல கை வேண்டுமாம்" எனக் கூறிவிட்டுப் பணியாளை நோக்கி, இருந்து எண்ணெய் இட்டுக்கொள்ள பலகை கொண்டுவந்து இடுமாறு ஆணை தந்தனர். அவனும் அவ்வாறே செய்ய அவரும் எண்ணெய் யிட்டுக்கொண்டு நீராடினர். மாணவர்கள் இச்சிலேடை மொழிக்கேட்டு மகிழ்வுற்றனர்.

மற்றொருநாள் பாடம் நடந்துகொண் டிருந்தது. அடிகளாருக்குப் பல கடிதங்கள் வந்தன. அவற்றில் கரும்புள்ளி யிடப்பெற்ற கடிதம் ஒன்றிருந்தது. அதனை அடிகளார் முன்னர் எடுத்துக் கவனித்தனர். அனைவரும் அடிகளாரின் முகத்தையே நோக்கிய வண்ணமாக விருந்தனர். அடிகளார் அனைவரையும் நோக்கி, "சோழவந்தான் அரசஞ் - சண்முகனார் இருந் தாரானார்" எனக் கூறினர். ஒருவருக்கும் விளங்க வில்லை. இறந்தாரானார் எனக் கூற வேண்டியதை இருந்தாரானார் என வாய்தவறிக் கூறிவிட்டனர் போலும் என ஒருவருக் கொருவர் மெதுவாக உரை யாடிக் கொண்டனர். இவர்களது திரிபுணர்ச்சியை

யுணர்ந்த அடிகளார் அவர்களை மீண்டும் நோக்கி, முன்னொருகால் இருந்தார் என்று சொல்லத்தக்க நிலையை அடைந்தனர்' எனக் கூறினர். அதன் பின்னர் தான் அடிகளார் கூறியது தவறு அன்றெனவுணர்ந்து மகிழ்ச்சி கொண்டனர்.

புறநானூறு பாடம் நடந்துகொண் டிருந்தது. அதுகாலை சங்க காலத்திலிருந்த பெண்மணிகளின் அறிவுத் திறத்தையும், அவர்கள் இயற்றியுள்ள செய்யுளின் அமைப்பையும் விளக்கிப் பலபடியாகப் பாராட்டிக் கூறினர். அங்குக் குழுமி யிருந்தவர்களில் சிலர், இக்காலத்து அத்தகைய கல்வியறி வுடையோரைக் காண்டல் அரிது என்றனர். 'பெண் மக்கட்குக் கல்வி போதித்தலே தவறு' என்னும் குறுகிய நோக்கம் பலரிடம் இருப்பதால் தான் இக்காலத்தில் பெண்கல்வி பெருகவில்லை யென அடிகளார் கூறினர். அருகிலிருந்த டாக்டர் இராமலிங்க செட்டியா ரவர்கள், நம் நகரில் உள்ள பண்டிதை - அசலாம்பிகை அம்மையாரைப் போல் செய்யுள் இயற்றும் வன்மையுடைய பெண் மணிகள் பலர் தற்போதும் உள்ளனர் எனக் கூறினர். அடிகளாரும் அம்மையாரின் கல்வித் திறத்தைப்பாராட்டிக்கூறினர். அதனால், சிலமாணவர்கட்கு அம்மையாரைக் காணவேண்டுமெனும் அவா உண்டாயிற்று. டாக்டர் அவர்களிடமே மாணவர்கள் தங்கள்விருப்பத்தை வெளியிட்டனர்.

டாக்டர் செட்டியாரவர்கள் மறுதினம் சில மாணவர்களை அழைத்துக்கொண்டு அம்மையாரிடம் சென்றனர். மாணவர்களை அம்மையாருக்கு அறிமுகம் செய்வித்தனர். அம்மையா ரவர்களும் அவர்

களை அன்புடன் வரவேற்று முகமன் கூறினர். பின் ஒரு சிறு மாணவரை நோக்கித் தாங்கள் என்ன படிக்கிறீர்கள் எனக் கேட்டனர். அதற்கு அம் மாணவர் 'மதுரைக் கலம்பகம்' எங்களில் சிலர் படிக்கிறோம் என்றனர். நேற்று எந்தச் செய்யுள் நடந்தது என அம்மையார் கேட்டனர். அதற்கு அந்த மாணவர், 'நம்பா நினக்கோலம்' எனத் தொடங்கும் உகூ-வது செய்யுள் எனக் கூறினர். அதனைக் கூறுமாறு அம்மையார் கேட்டனர். அம் மாணவர் அச் செய்யுளைக் கூறி விரிபொருளையும் விளக்கிக் கூறினர். அது கேட்டு அம்மையார் மனமகிழ்ந்தனர். அடிகளார் பாடம் போதிக்கும் முறையையும் பாராட்டிக் கூறினர். மாணவர்கட்குத் தாம் பாடிய சேலூர் என வழங்கும் 'திருக்காளையூர் புராணம்' ஒவ்வொன்று பரிசளித்தனர். பின், முன் கூறிய செய்யுளின் கருத்து தற்போதுள்ள உலக நடைக்கு மாறுபட்டது என்றும், கணவனை இழந்தோர் பலர் காதோலை நீக்குவதில்லை யென்றும் கூறினர். இவ்வுரையை மாணவர்கள் கூறக் கேட்ட அடிகளார், "தாம் உள்ள நிலைக்கு ஆக்கந் தேடுகின்றனர் போலும்" எனக்கூறி விடுத்தனர்.

இவ்வாறு, கல்வி பயிலும் மாணவர்கட்குத் தலைமையாக விருந்து அடிகளாரின் புகழை விரித்துக் கூறி அனைவருக்கும் மகிழ்ச்சி யூட்டுபவர் மணம்பூண்டி ம. ரா. குமாரசுவாமி பிள்ளையவர்கள் ஆவார்கள். அவரை அனைவரும், 'கோவலடிகள்' என விளிப்பர். சில மாணவர்கள் சிறப்புப் பெயரால் அழைக்கப் பெறுவர். மடாலயத்திலுள்ள சுப்பிரமணிய ஐயர்- விவகார திருவருள், கந்தசாமி ஐயர் - பெரிய திருவ

ருள், ஆறுமுக ஐயர்-சிறிய திருவருள், மற்றும் P. S. வடிவேலு செட்டியார்-அணுக்கத்துத் தொண்டர், வே. பாலகிருஷ்ண முதலியார்-மாறன் வள்ளலடிமை, திரு. வடிவேல் முதலியார் - கலாமிர்தகவி, ப. பாலசுந்தர நாயனார் - வாகீசர் அடிமை என்பன போன்றன வாகும் ஒருவரைக் கண்டு ஒருவர் விளிக்குங்கால், 'மகாதேவா' என்றே விளித்து உரையாடுவர். மாணவர் குழாங்களுள் வெள்ளையுடை யணிந்தோரும், காவியுடை யணிந்தோருமாகிய இளஞ் சந்நியாசிகள் பலர் உண்டு. அவர்களும் உரையாடுங்கால், 'மகாதேவா' என்றே ஒருவரை யொருவர் விளித்து உரையாடுவர். இவ்வாறு உரையாடுதல் மடாலய சம்பிரதாயமாகவே வழங்கத் தலைப்பட்டுவிட்டது.

## 17. சைவ சித்தாந்த மாகாசமாஜ எழுச்சி

சென்னை, சைவ சித்தாந்த மகா சமாஜம் முன் போல் கடனாற்ற வில்லை. பெயரளவில் இருந்தது. அதற்கு நல்லசிவன் பிள்ளையவர்கள் தலைவராகவும், கி. குப்புச்சாமி முதலியாரவர்கள் செயலாளராகவும் இருந்தனர். சித்தாந்தம் பத்திரிகை வெளிவரவில்லை. ஆண்டு தோறும் சென்னை நகரிலேயே அங்குள்ள சொற்பொழிவாளர்களைக் கொண்டு, பொருட் செலவின்றிப் பெயரளவில் மகாநாடு கூடிவந்தது.

சைவ சமயத்தை வளர்க்கத் தோன்றிய சமாஜம் இந்நிலையிலா வுள்ளது? என்று சமாஜ நிலையைக் கேட்ட அடிகளார் வருத்த மெய்தினர். சென்னை சமாஜத்தின் செயல், மாணவர் பலருக்கு இரக்க மளித்தது. நாமாவது ஒரு சபையைத் தோற்றுவிக்க வேண்டுமென அவர்கள் கருதினர். அடிகளாருக்கு

அறிவிக்காமலே பல மாணவர்கள் ஒன்று கூடினர். திருவெண்ணெய் நல்லூர் சென்றனர். அங்கு மெய் கண்ட சிவாசாரிய சுவாமிகள் மடாலயத்தின் அதிப ராக விருந்த நமசிவாய தம்பிரான் அவர்களின் ஆதரவு பெற்றனர். அவர் தலைமையிலேயே, 'அகில இந்திய சைவசித்தாந்த மகா சமாஜம்' என்னும் பெயருடன் ஒரு சமாஜத்தை ஸ்தாபித்தனர். அதில் பல தீர்மானங் களும் செய்யப் பெற்றன. இச் செயலைக் கேள்வியுறின் அடிகளார் மகிழ்ச்சி கொள்வார்கள் என்பது மாணவர் களின் உள்ளக் கிடக்கை.

அங்கு நடந்த விவரங்களும் தீர்மானங்களும் பத்திரிகைகளில் வெளியாயின. அடிகளாருக்கும் அறிவிக்கப் பெற்றன. அடிகளார் மாணவர்கள் செயலுக்கு ஆதரவளிக்க வில்லை. மாணவர்களை அழைத்தனர். முன்னரே ஒரு சமாஜ மிருக்கும் போது, வேறொன்று காணுதல் நேரியதன்றெனக் கூறினர். 'நாமே தோற்றுவித்த சமாஜத்தை நாமே கை விட்டு அதனைப் புறக்கணிப்பது நன்றன்று. இதனை வளர்க்க எடுத்துக்கொள்ளும் முயற்சியை விடுத்து அதனை வளர்க்க முயற்சியுங்கள். சென்னை சென்று அவர்கட்கு வேண்டிய உதவி செய்து அந்த சமாஜத்தை வெளியூர்களில் நடத்த ஏற்பாடு செய்யுங் கள். நமது நகரில் வேண்டுமானாலும், அதனை நடத்தி மற்றவர்கட்கு வழிகாட்டுவோம்' என அறிவுறுத்தினர்.

மாணவர்களின் முயற்சியினால் சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் பத்தொன்பதாவது கூட்டத்தைத் திருப்பாதிரிப்புலியூரில் அடிகளாரின் தலைமையிலேயே நடத்துவதுஎன ஏற்பாடு செய்தனர்.

கி. குப்புச்சாமி முதலியார் வகித்து வந்த செயலாளர் பதவியை வக்கீல், ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள் வகித்து வருகிறார்களென்றும், அவர் இளம் வயதுடையவ ராகையால் சுறுசுறுப்பாக தம் கடமையைச் செய்வார் என்றும் கேட்டு மகிழ்ந்தனர்.

சமாஜத்தை நடத்துவதற்கென, தி. நா. முத்தைய செட்டியாரவர்கள் சமாஜத்திற்கு வருபவர் அனைவருக்கும் உணவளிப்பதாக ஏற்றுக்கொண்டனர். சொ. தி. நாகப்ப செட்டியாரவர்கள் சமாஜத்தை நடத்த பாடசாலை இடத்தைக் கொடுத்து உதவியதுமன்றி, இருநூறு வெண் பொற்காசுகளு மளித்தனர். முனிசிபல் சேர்மேன் வேணுகோபால் நாயுடு அவர்களும், மானேஜர் ஐயாசாமி பிள்ளையவர்களும், வீதிகளில் வளைவு, பந்தல் சோடித்தல் முதலிய அலங்காரங்கள் செய்வித்தனர். மற்றும் பல அன்பர்கள் பொருளாலும், மனம், வாக்கு, காயங்களினாலும் தொண்டு புரிந்தனர். அடிகளார் இதனை முன் வந்து நடத்துகின்றனர் என்ற ஒன்றே அவ்வவரையும் ஊக்கிப் பாடுபடச் செய்தது என்பது மிகையாகாது.

1924 - ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் அடிகளாரின் தலைமையிலேயே சமாஜ கூட்டம் கூடி, மூன்று தினங்கள் மிகச் சிறப்பாக நடைபெற்றன. சித்தாந்தப் பத்திரிகையை மீண்டுந் தொடங்கி நடத்துவதென தீர்மானிக்கப் பெற்றது. அதற்குப் பல அன்பர்கள் முன் வந்து கையொப்ப மிட்டனர். அதற்கென முந்நூறு வெண் பொற்காசுகள் அளிப்பதாக வரவேற்புக் கழகத்தினர் உறுதி கூறினர். பொற்கவச மிட்ட

பவுண்டன் பேனு ஒன்று வரவேற்புக் கழகத்தினரின் நினைவுக்குறியாக அடிகளாருக்கு வழங்கினர்.

இவ்வாறு பலவகையிலும் உதவி புரிந்த வரவேற்புக் கழகத்தினருக்கு சமாஜத்தின் சார்பாக ஒரு நன்றியறிதலுரை அச்சிட்டு வழங்க வேண்டுமென அடிகளார் திருவுள்ளத்தில் எண்ணினர். தம் மாணவர் ஒருவரிடம் கூறினர். அவர் செய்யுள் வடிவமாக அந்நன்றி யறிதலுரையை யாத்தனர். சமாஜ முடிவு தினத்தன்று இறுதியில் அது அச்சிட்டு வழங்கப் பெற்றது.

'சில ஆண்டுகளாகப் போதிய ஆதரவின்மையால் சமாஜத்தை செவ்விய முறையில் நடத்த வியலாமல் இருந்தோம் இது காலை நீங்கள் அனைவரும் ஒன்று பட்டு செய்த உதவிக்காக சமாஜத்தின் சார்பாக நாங்கள் நன்றி பாராட்டுகிறோம்' என்பதே அந்த நன்றி யறிதலுரையிலுள்ள கருத்தாகும்.

அந்த நன்றி யறிதலுரையை கி. குப்புச்சாமி முதலியாரவர்கள் கண்டனர். "நம்மைக் கேட்காமல் சமாஜத்தின் பெயரால் நன்றியறிதல் கூற இவர்கட்கு என்ன உரிமை யிருக்கிறது?" எனப் பலரிடமும் கூறினர். காழ்ப்பும் சீற்றமும் மிக்கெழுந்தன அன்றிரவு உணவு உட்கொள்ள மறுத்து விட்டனர்.

மறுதினம் காலை புகைப்படம் எடுக்கும் பொருட்டு அனைவரும் ஒன்று கூடினர். டாக்டர் பாலவேலாயுதம் பிள்ளை யவர்கள் அடிகளாரை நோக்கி, "எம்மைக் கேட்காமல் நன்றியறிதலுரை அச்சிட்டு வழங்கியது எம்மை அவமானப் படுத்தியதாகும். இனி ஒருக்கணமும் சமாஜத்தில் இருக்கப் போவ

இல்லை. நான் விலகிக் கொள்ளப் போகிறேன்" என்று கி. குப்புச்சாமி முதலியாரவர்கள் கூறுகின்றனர் என விண்ணப்பித்துக் கொண்டனர். போதிய காலமின்மையால் அறிவிக்கப் படவில்லை யென்றும், சமாஜத்தின் முன்னேற்றம் கருதியே இது செய்யப் பெற்றதென்றும் அடிகளார் சில நல்லுரைகள் கூறினார். அவ்வுரைகள் அண்மையிலிருந்த முதலியாரின் சிற்றத்தை அதிகப் படுத்துவனவாயின.

அடிகளார் உடனே உள்ளே சென்றனர். பதினொரு ஆண்டுகட்கு முன் முதலியார் அடிகளாருக்கு எழுதிய கடித மொன்றைக் கொண்டு வந்தனர். அதனை அனைவருக்கும் காண்பித்தனர். அதில், "கைதவ மறியாச் செய்தவ முடையோய்! நினது கடிதங்கண்டாம்" எனத்தொடங்கி, அடிகளாரைத் தாழ்த்தியும், தம்மை யுயர்த்தியும் எழுதி யிருந்தனர். அது அனைவர் மனத்தையும் புண்படுத்தியது. இக் குறும்புக் கடிதத்தை அடிகளார் எவருக்கும் அறிவிக்காமலே காப்பாற்றி வைத்திருந்தது அனைவருக்கும் அருமையாகத் தோன்றியது. சமாஜத்தினர் மீது அனைவருக்கும் வெறுப்புத் தோன்றியது. கி. குப்புச்சாமி முதலியார் புரிந்து வந்த மறத் தொண்டு அனைவருக்கும் புலனாயது. பத்திரிகை நடத்த வாக்களித்த பொருளும் அளித்திலர். சமாஜம் முன்போலவே பெயரளவில் விளங்கி வருவதாயிற்று. பின்னர் இரண்டரை யாண்டுகள் கழிந்தன.

1927-ஆம் ஆண்டு, ஜூன் மாதத்தில் அடிகளார் முதன் முறையாகச் சென்னைக்குச் சென்றனர். தற்போது Broadway Talkies என்று வழங்குமிடம்

அது காலை Palace Theatre என்ற பெயரோடு வழங்கி வந்தது. சைவசித்தாந்த மகா சமாஜத்தின் விசேஷ-கூட்ட மொன்று அடிகளாரின் - தலைமையில் ஜூலைமாதத்தில் அதில் கூடிற்று. அம்மகா நாட்டில் ஜஸ்டிஸ் ஸர். வே. பா. - ராமேசம், பா. வே. மாணிக்க நாயக்கர், திரு. வி. கலியாணசுந்தர முதலியார் முதலிய பேரறிஞர்கள் சொற்பொழிவாற்றினர்.

நீதிபதி ராமேசமவர்கள் அடிகளாரின் சிறந்த புலமை, சாந்தம் முதலியவற்றைப் பாராட்டிக் கூறிய நல்லுரைகள் அன்பர்கள் நினைவில் இன்று முள்ளது. ‘ சித்தாந்தம் ’ பத்திரிகையைத் தொடங்கி நடத்த வேண்டுமென அடிகளார் கூறியதோடமையாது, முதல் பிரதி வெளியிட நேரும் செலவு அனைத்தையும் தாமே தருவதாகக் கூறிப் பொருளும் அளித்தனர். அடிகளார் அளித்த நன் கொடையின் ஆதரவால் 1928 - ஆண்டு ஜனவரியில் முதல் இதழ் வெளிவந்தது. அடிகளார் சென்னையினின்று திரும்பும் போது கோகலே மண்டபத்தில் ஒரு பொதுக்கூட்டம் கூட்டினர். Sir A. இராமசாமி முதலியாரவர்கள் அடிகளாரின் அரியதொண்டைப் பற்றி ஆங்கிலத்தில் ஒரு சொற்பொழிவாற்றினர். ஒரு பிரிவு உபசாரப் பத்திரம் வாசித்து அளிக்கப் பெற்றது.

மடாலயம் வந்தபின் அவ்வருடமே சமாஜத்தை நடத்த அடிகளார் முயற்சித்தனர். புதுவையில் கூட்டுவதெனை முடிவுசெய்யப் பெற்றது. கிரந்தே - சிவ சங்கர செட்டியார், பூர்ணாங்குப்பம் முனிசாமிப் பிள்ளை முதலிய அன்பர்களின் உதவியால் 1927 - ஆம் ஆண்டு, டிசம்பர் மாதத்தில் சமாஜத்தின் இருபத்தி

ரண்டாவது ஆண்டு விழா அடிகளாரின் தலைமை யிலேயே மூன்று தினங்கள் சிறப்பாக நடைபெற்றன. ‘ சித்தாந்தம் ’ பத்திரிகைக்கும் பல அன்பர்கள் பேராதரவு புரிந்தனர்.

அடிகளார் அம்பலத்தாடுவார் மடாலயம் சென்று, அங்குத் தலைமை தாங்கி யிருந்த சுவாமிகளு டன் அளவளாவி வீர சைவ சம்பந்தமாக சில சீர் திருத்தங்கள் செய்ய வேண்டுமெனவும் கூறினமை குறிப்பிடத்தக்க தொன்றாகும்.

## 18. கொங்கு நாட்டுச் செலவு

1925 - ஆம் ஆண்டில் அடிகளார் கொங்கு நாட்டுத்தலங்களைக் கண்டு தெரிசிக்கப் புறப்பட்டனர். கல்லக் குறிச்சி, சின்னசேலம், ஆற்றூர் வழியாக இடையிலுள்ள தலங்களைத் தரிசித்துக் கொண்டு சேலம் ஜில்லா, நாமக்கல் தாலூக்கா சேந்தமங்கலம் சென்றடைந்தனர். ஆங்குள்ள பிரபல மிட்டாதார்க ளான S. R. இராவத உடையார், சுப்புராய உடையார், முத்துசாமி உடையார் ஆகியவர்கள் அடிகளாரை அன்புடன் வரவேற்று உபசரித்தனர்.

பார்க்கவ குலச் சங்கத்தின் பத்தாம் ஆண்டு நிறை விழாவை அடிகளாரின் தலைமையிலேயே ஆங்கு நடத்த ஏற்பாடு செய்தனர். சேந்த மங்கலத்தில் 1925 - ஆண்டு, ஏப்ரல் மாதத்தில் பார்க்கவகுலச் சங்கத்தின் பத்தாம் ஆண்டு நிறைவிழா, அடிகளாரின் தலைமையில் அதற்கென அமைக்கப் பெற்றிருந்த பந்தலில் கூடி நடைபெற்றது. திரு. வி. கலியாண சுந்தர முதலியார், ராம - சடகோப ஐயங்கார்.

மே. வே. துரைசாமி உடையார், ம. ரா. குமாரசாமி பிள்ளை, பேரூர் ஞானப் பூங்கோதை யம்மையார், பெருந்துறை கணேச முதலியார் ஆகிய பலர் சொற்பொழிவாற்றினர். இராம சடகோப ஐயங்கார் 'சத்யாக்ரகி' என்ற பொருள் பற்றிப் பேசினார். அதில் பிரஹலாதன் முதலியோரைக் குறிப்பிட்டு திருநாவுக்கரசு சுவாமிகள் எதிரியை வணங்க வைத்தமையால் அவரே உண்மையான சத்யாக்கிரகி என்று முடித்தார். கூட்டத்தில் ஒருவர் எழுந்து, 'மெய்ப்பொருள் நாயனார்' சத்தியாக்கிரகி யல்லவா? என்று கேட்டார். ஐயங்கார் அதனை ஏற்க மறுத்தார். கூட்டத்தில் குழப்பம் நேர்ந்தது. அது கண்டு அடிகளார் மெய்ப்பொருள் நாயனாரின் தொண்டின் திறத்தையும் பாராட்டிக் கூறி அனைவரையும் மகிழ்வுறச் செய்தனர். பேரூர் ஞானப்பூங்கோதை யம்மையார் அவிநாசி புராணம் கூறினர். அதுகாலை,

நரியைக் குதிரைப் பரியாக்கி
ஞால மெல்லாம் நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரையெல்லாம்
பிச்ச தேற்றும் பெருத்துறையான்
அரிய பொருளே அவிநாசி
அப்பா பாண்டி வெள்ளமே
தெரிய அரிய பரஞ்சோதீ
செய்வ தொன்றும் அறியேனே.

என அம்மையார் கூறியபோது அனைவரும் பக்தி பரவசமாயினர். ம. ரா. குமாரசாமி பிள்ளையவர்கள், 'கடவுள் ஆலயங்களில் பலியிடுதல் என்னும் தீய பழக்கத்தை நம் மரபினர் அறவே விடவேண்டும்

என ஒரு தீர்மானம் கொண்டு வந்தனர். அதனைப் பலர் ஆதரித்துப் பேசி ஏகமனதாகத் தீர்மானித்தனர். அடிகளார் முடிவுரையில் இது எழுத்தளவில் நில்லாமல் செயலளவில் நடைபெற வேண்டுமெனக் கூறினர். சேந்தமங்கலம் செல்லாண்டியம்மன் என்னும் பிடாரி கோயில் உற்சவத்தில் உயிர்ப்பலி கொடுப்பது வழக்கம். S. R. ஐராவத உடையாரவர்கள் முன்னின்று ஆயிரக்கணக்கான உயிர்களைப் பலியிடா வண்ணம் காப்பாற்றினர். அது கேட்டு அடிகளாரும் அகமகிழ்வு கொண்டனர்.

மகா நாட்டிற்குக் கும்பகோணத்தைச் சார்ந்த வில்வராய நல்லூர் மிராசுதார் சா. முத்துகுமரப்ப உடையார், சாத்தனூர் மிராசுதார், சுப்புராய முதலியார், மாரண்ட ஹள்ளி மிட்டாதார்களான இரத்தின உடையார், ஆறுமுக உடையார், பார்க்கவபந்து M.R. வேங்கடாசல உடையார் ஆகியவர்களும் வந்திருந்து மகாநாட்டைச் சிறப்புற நடத்தினர். அடிகளார் வாக்கு கேட்கக் கேட்க இனிப்பதாகவும், அவர்களை எப்படிப் பிரிந்திருப்போமென்றும் கூறினர். அம்மகா நாட்டினர் தங்களின் நினைவுக்குறியாக முழுவதும் பொற்கவசமிட்ட உருத்திராக்கத் தாழ்வடமொன்று அடிகளாருக்கு அணிவித்து மகிழ்வெய்தினர்.

அதன்பின் அடிகளார் அவிநாசி முதலிய தலங்களைத் தெரிசித்துக்கொண்டு பேரூர் சென்றனர். சாந்தலிங்க சுவாமிகள் சன்மார்க்க சபையின் ஆண்டு விழாவிற்குத் தலைமை தாங்கினர். கோயம்புத்தூர் இரத்தின சபாபதி முதலியார், சி. கு. நாராயணசாமி முதலியார், N. இலட்சுமண முதலியார் ஆகிய பல

அன்பர்கள் சபைக்கு வந்திருந்து அடிகளாரின் அறவுரை கேட்டு மகிழ்ந்தனர். அக்காலம் மந்திரி பதவி வகித்திருந்த டாக்டர் சுப்புராயன் அவர்களும் அடிகளாரின் வாக்கு வல்லமையைப் பாராட்டிக் கூறினர்.

## 19. பருவும் பருவரலும்

ஆரணியில் புதிதாகக் கட்டப்பெற்ற மடாலயத்திற்குச் சென்று அடிகளார் பல பகல்கள் தங்கி யிருந்தனர். பின்னர் அதற்கு அணித்தாய சத்திய விஜயநகரத்தில் உள்ள மடாலயத்திற்கும் சென்று தங்கியிருந்தனர். அடிகளாரின் சொற்பொழிவு பல அன்பர்கட்கு இன்ப மூட்டியது. அன்பர்களின் வேண்டுகோளுக் கிணங்கி அடிகளார் வாழைப்பந்தல், ஆம்பூர் முதலிய இடங்கட்கும் சென்று சொற்பொழிவாற்றினர். தேவலாபுரம் கணக்கு முனியப்பிள்ளை புதல்வர் M. அய்யாவுப்பிள்ளை யவர்களின் வேண்டுகோளுக் கிணங்கி ஆம்பூரில் இருபத்திரண்டு நாட்கள் தங்கி யிருந்து ஸ்ரீ நாகநாத சுவாமி ஆலயத்தில் ஆற்றிய சொற்பொழிவின் ஒலி இன்னும் அன்பர்களின் செவிகளில் ஒலித்துக் கொண்டிருக்கின்றது.

தமிழ்ப் புலவர் ஆ. கமலநாத முதலியார், மு. க. கந்தசாமி செட்டியார், க. மு. க. அண்ணாமலை செட்டியார், மணியம் ஜெயராம உடையார், குட்டி செட்டியார், நடுகுப்பம் மாரி உடையார், ஆ. மா. சிவஞான உடையார் ஆகிய நல்லன்பர்கள் அடிகளாரிடம் போந்து உபசரித்துப் பாராட்டிய செயல் என்றும் மறக்கற் பாலதன்று.

அடிகளாரின் மாணவர்களில் முதன்மை பெற்றவரும், வாக்கு வன்மையில் ஈடும் எடுப்பும் இல்லாத

வரும், தமிழ் நாடு முழுவதும் சென்று ஆங்காங்குச் சங்கங்கள் நிறுவி, சைவத் தொண்டும் தமிழ்த் தொண்டும் ஒருங்கே ஆற்றி வருபவரும், அடிகளாருக்கு வலக்கரம் போலிருந்து தொண்டாற்றி வருபவருமாகிய மணம்பூண்டி ம. ரா. குமாரசுவாமி பிள்ளையவர்கள் புறமுதுகில் கட்டிகண்டு திருக்கோவலூர் டேனிஷ் மிஷன் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வந்தனர். நீர் வியாதி (Diabetes) உள்ளவர்கட்கு இத்தகைய நோய் மிக்க தீமை தருமென டாக்டர்கள் கூறினர். அடிகளாருக்கும், அன்பர் பலருக்கும் இச் செய்தி அறிவிக்கப் பெற்றது.

அடிகளார் பிள்ளையவர்களைக் காண ஆரணியினின்றும் புறப்பட்டு வந்து கொண்டிருந்தனர். திரு. வி. கலியாணசுந்தர முதலியார், ச. சச்சிதானந்தம் பிள்ளை, மே. வே. துரைசாமி உடையார் முதலிய அன்பர்கள் பலர் வந்து பிள்ளையவர்களைக் கண்டனர்.

1929 - ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் ம. ரா. குமாரசாமி பிள்ளையவர்கள் இறைவன் திருவடி நீழலடைந்தனர். அருணையம் பதிக்கு வந்து சேர்ந்த அடிகளார்க்கு இச் செய்தி அறிவிக்கப் பெற்றது. அன்று அடிகளாருக்கு ஏற்பட்ட மனக்கலக்கம் செப்பத் தரமன்று.

அன்னையின் கருணை போன்ற அடிகளாரின் கண்களினின்று நீர் நிறைந்து துளிர்த்தது என்று அருகிருந்தவர் கூறுவது உண்மையாகலா மென்பது பின் வரும் சம்பவங்களால் தெளிவாகின்றது.

அடிகளார் கோவல்வந்தனர். துக்கம் விசாரித்தனர். அங்குத் தங்க மனமிசையாமல் புலிசையையடைந்-

தனர். சென்ற சில தினங்களுக்கெல்லாம் அடிக ளாரின், புறமுதுகிலும் கட்டி தோன்றிற்று. அன்பர் பலருங் கலக்க மெய்தினர். குமாரசாமி பிள்ளையைப் போன்று அடிகளாருக்கும் தீங்கு நேருமோ வென அனைவரும் ஐயுற்றனர். அடிகளாரை விட்டுப் பிரியா மல் தாய்போல் அருகிலிருந்து உபசரணை புரிந்து வரும் மாமா சுவாமி அவர்களின் திருக்குமாரரும், திருச்சி, நாஷனல் காலேஜ், தமிழ்ப் பண்டிதருமாகிய ப. கந்தசாமி ஐயரவர்கள் அழைப்பிக்கப் பெற்றனர். உயில் அடிகளாரின் திருக்கரத்தினாலேயே எழுதி முடிக்கப் பெற்றது. அடுத்த பட்டத்து அடிகளாரின் திருப்பெயர் ' சிவ சண்முக சத்திய ஞான சிவாசாரிய சுவாமிகள் ' என அடிகளாரே குறிப்பிட்டு வைத் தனர்.

சஸ்த்ர சிகிச்சை (Operation) இருமுறை நடை பெற்றன. டாக்டர் பால வேலாயுதம் பிள்ளை யவர்கள் அடிகளாரிடம் காட்டிய ஊக்கம் அளவிடற் பாலது. ஆ. இரத்தினவேற் பிள்ளை, இராஜேஸ்வரம் பிள்ளை, வடிவேல் செட்டியார் ஆகிய அன்பர் பலர் உடனிருந்து உபசரித்து வந்தனர். அடிகளார், பல தொண்டுகள் இன்னும் செய்ய வேண்டியிருந்ததால், முருகப் பெருமான் திருவருள் முன்னின்று குணமுறச் செய் தது. சிறிது சிறிதாக அடிகளார் பூரண குணமடைந் தனர்.

## 20. சைவப் பெரியார் மகாநாடு

சைவ சமயம் பிற மதங்களைப் போல் வளர்ப் பாரின்றி யிருப்பதால் அதனை வளர்க்க வழி கோலு வது எவ்வாறு என அடிகளார் மீண்டும் சிந்திக்கலா

யினர். செந்தமிழ் நாட்டிலுள்ள சைவர்கள் பலரையும் ஒன்று கூட்டி அவரவர்களின் உள்ளக் கிடக்கை எவ்வாறு உள்ளதெனை அறிந்து அதன்படி நடப்பதே செவ்விய முறையெனக் கண்டனர்.

1929 - ஆம் ஆண்டு மே மாதத்தில் ஞானியார் மடாலயத்தில் ‘ சைவப் பெரியார் மகாநாடு ’ கூட்டப் பெற்றது. உயர்திரு - மறை மலையடிகள் அதற்குத் தலைமை வகித்தனர். அம் மகாநாட்டிற்குச் செந்தமிழ் நாட்டிலுள்ள சைவ சபைகள் அனைத்தும் தம் தம் பிரதி நிதிகளை அனுப்பி வைத்தன. சைவப் பேரறிஞர்கள் பலர் ஒன்று கூடினர். அம் மகாநாட்டைப் போன்றதொரு மகாநாடு இனி என்று கூடுமோ அறியோம். அம் மகா நாட்டில் சைவத்தின் அடிப்படையான கொள்கைகள், செய்ய வேண்டிய சீர்திருத்தங்கள், அதன் வளர்ச்சிக் கேற்ற வழிகள் இன்னின்னவை யென ஆராய்ந்து முடிவு செய்யப் பெற்றன. இன்று சைவம் தமிழ்நாட்டில் வீறு கொண்டு தம் கடமைகளைச் செய்கின்றனவென்றால், அதற்கு அம் மகாநாட்டின் பணியே சிறந்த காரணமாகுமெனக் கூறுதல் மிகையாகாது.

அம்மகா நாட்டின் பயனாகவே சைவசித்தாந்த மகா சமாஜம் பன்னிரு திருமுறைகளையும், பதினான்கு சாத்திரங்களையும், பிற, பற்பல நூல்களையும் ஆராய்ந்து சுத்தப் பதிப்பாக அச்சிட்டு, ஆயிரக்கணக்கில் குறைந்த விலைக்குக் கொடுத்து, சைவப் பெருமக்கள் இல்லங்களை இன்றும் அலங்கரிக்கச் செய்து வருகின்றது. சைவப் பெரியார் மகாநாடு இடையீடின்றி காலைமாலை ஆகிய இருவேளைகளிலும் ஐந்து நாட்கள் கூடி நடைபெற்றன. அதுகாலை அடிகளார் சைவப் பெரு

மக்கள் அனைவரையும் தனித் தனியாக அழைத்து, அளவளாவி உபசரித்த தன்மை இன்றும் மறக்கற்பாலதன்று. அம்மகா நாட்டில் சைவப் பெருமக்கள் உபயோகத்திற்கு நன்கு பயன் பெறுமாறு நாள்கோள்களை செவ்வனே விளக்கி, 'சைவப் பஞ்சாங்கம்' எனும் பெயரால் கணித்து வெளியிடும் டாக்டர், இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கட்கு மேலும் மேலும் ஊக்கமளிக்கும் நோக்கத்துடன் நூறு ரூபாய் பரிசளிக்கப் பெற்றதும் குறிப்பிடத்தக்க தொன்றாகும்.

அதற்கு முன் பிப்ரவரி மாதத்தில் ஞானியார் மாணவர் கழகம் கூடி நடைபெற்றது. அதற்கு மந்திரியார் ஸர் டி. என். சிவஞானம் பிள்ளையவர்கள் தலைமை வகித்தனர். அன்று ம. ரா. குமாரசாமிப் பிள்ளையவர்கள் ஆற்றிய சொற்பொழிவு மந்திரியாரவர்கட்கு அளவுகடந்த மகிழ்ச்சியை அளித்தது. மந்திரியாரவர்களின் உள்ளக் குறிப்பை யறிந்த தி. நா. முத்தையா செட்டியாரவர்கள் முழுவதும் பொன் கவசமிடப் பெற்ற உருத்திராக்க மணிகள் நிறைந்த கண்டிகை யொன்றை மந்திரியார் கையிலளித்தனர். அதனை மந்திரியாரவர்கள் வாங்கி, ம. ரா. குமாரசாமிப் பிள்ளையவர்களின் கழுத்தில் இட்டனர். அவரது சொல்வன்மையை வாயாரப் புகழ்ந்தனர். மாணவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் கழுத்தில் அம்மாலை விழுந்ததாகவே எண்ணி களிகூர்ந்தனர். அன்று புகழப்படாத மாணவர்களேயில்லை. அவர்களுடன் அடிகளாரும் கலந்துகொண்டு மாணவர்களைப் பாராட்டி வாழ்த்துக் கூறியது போற்றத்தக்க தொன்றாகும் மாணவர் பலரும் இறும்பூதெய்தினர்.

# இடைப்பகுதி

*கட்டளைக் கலித்துறை*

அடங்குஞ் சிலவினை நாமிருந்
தாலிடர் அண்டுமென
ஒடுங்குஞ் சிலவினை யெங்குச்
செல்வோ மென்று ஓடிவிடத்
தொடங்குஞ் சிலவினை மீட்டும்
வரேனெனச் சூளுரைத்தே
நடுங்குஞ் சிலவினை ஞானியார்
சொற்கேட்ட நாள்முதலே.

## 21. திருவெண்ணெய் நல்லூர் சமாஜ கூட்டம்

சைவசித்தாந்த மகாசமாஜம் பல்வேறு இடங்களில் கூடியதுண்டு. எனினும் சைவசித்தாந்த ஞான பானுவாகிய ஸ்ரீ மெய்கண்ட சிவாசாரிய சுவாமிகள் அவதரித்தருளியதும், "சிவஞானபோதம்" என்னும் செந்தமிழ் நூலை உலகினர்க்கு உதவ இடமாக இருந்ததுமான திருவெண்ணெய் நல்லூரில் சமாஜ கூட்டத்தை இதுகாறும் நடத்த முடியவில்லையே எனப் பலர் எண்ணினர். அதனை அடிகளாரிடம் விண்ணப்பித்துக்கொண்டனர். அடிகளார் சின்னசாமி ரெட்டியாரவர்களிடம்கலந்தனர். ரெட்டியாரவர்கள் தாமே முன்னின்று நடத்துவதாக ஏற்றுக்கொண்டனர்.

அடிகளார் புறமுதுகில் தோன்றிய கட்டியால் துன்புற்று, குணமடைந்தபின் வெளிவராமல் இருந்த

னர். திருவெண்ணெய்நல்லூரில் சமாஜம் நடைபெறுவ தாயின், அடிகளாரே தலைமை வகிக்கவேண்டுமென அடிகளாரைக் கேட்டுக்கொண்டனர். அதற்கு அடிக ளாரும் இசைந்தனர். 1929-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில், திருவெண்ணெய்நல்லூரில், அடிகளாரின் தலைமையில் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் இருபத்துநான்காவது ஆண்டு நிறைவு விழா, "திரு வருட்டுறை" என்னும் சிவாலயத்தில் கூடி நடை பெற்றது. அங்கு நடைபெறப்போவதை அறிந்த திரு வாவடுதுறை பண்டார சந்நிதியவர்கள் தம் பிரதி நிதியை அனுப்பி, சில மரியாதைகளும் செய்வித்தனர். அவை அம்மகாநாட்டுக்கு மிக்க பெருமையளிப்ப தாயிற்று.

'திருவருட்டுறை' ஆலயத்தில் மூன்று தினங்கள் சமாஜக் கூட்டம் கூடி மிகச் சிறப்பாக நடைபெற்றது. அடிகளார் முன்னுரை முடிவுரைகளை வழக்கம்போல் திறம்பட வழங்கினர். நோய் நீங்கப்பெற்று, அடிக ளார் எழுந்தருளி வந்து தலைமை தாங்கியது அனைவருக் கும் பெருமகிழ் வளித்தது; அடிகளாரை வாயார வாழ்த்தினர்.

## 22. சைவப் பற்றும் சமரச நோக்கமும்

கடவுள் ஒருவரே. அவர் எங்கும் நிறைந்தவர். அவரைப் பல மதங்கள் பல்வாறாக அழைக்கின்றன. மதவாதிகள் இதனை ஏற்கின்றார்களில்லை. தாங்கள் தாங்கள் குறிப்பிடும் பெயரே கடவுளுக்குரிய நாமம் என்றும், மற்றவை அல்லவென்றும் கூறுவர். எடுத் துக்காட்டாக: வைணவர்கள்,

"நிற்கின்ற தெல்லாம் நெடுமாலென் றோராதார்
கற்கின்ற தெல்லாம் கடை."

என்பர்.

சைவர்கள்,

"சிந்திப்ப தெல்லாம் சிவனென்றே யோராதார்
வந்திப்ப தெல்லாம் வழு"

என்பர். அதனோடு அமையாது, சைவர்கள் வைணவர்களையும், வைணவர்கள் சைவர்களையும் எள்ளி நகையாடுதலும் உண்டு.

அடிகளார் அத்தகைய குறுகிய நோக்கமின்றி, எல்லா மதங்களும் இறைவனுக்கு உகந்ததெனுங் கொள்கை யுடையவர். பிற மதங்களில் அன்பும், தன் மதத்தில் அழுத்தமான பக்தியும் உடையவர். அடிகளாரிடம் வைணவர் கிறிஸ்தவர், மகம்மதியர், சமணர் ஆகிய பல்வேறு மதத்தினரும் கல்வி பயில்வர். அவரவர்கள் மதத்திலுள்ள காவியங்களை அவர்கட்கு அன்புடன் போதிப்பர். அதனால் எல்லா மதத்தினரும் அடிகளாரிடம் அன்பு பூண்டு ஒழுகுவாராயினர்.

புதுவை கலைமகள் கழகத்திற்கு அடிகளார் சென்றிருந்த காலையில், அந்நகரிற் சிறந்த செல்வரும், பொது நோக்குடையவரும், ரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவ குடும்பத்தைச் சார்ந்தவருமாகிய சின்னையா-ஞானப்பிரகாச முதலியாரவர்கள், அடிகளாரைத் தமது இல்லத்திற்கு எழுந்தருள வேண்டுமெனக் கேட்டுக்கொண்டனர். அவர் மதத்துவேஷம் அற்றவரென அறிந்து, அடிகளார், "மங்கள வாசம்" என்னும் அவர் மாளிகைக்கு எழுந்தருளினர். முதலியா

ரவர்களின் வேண்டுகோட்கிணங்கி அடிகளார், இராமாயணத்தில் "சீதா கலியாணம்" என்பது பற்றிச் சொற்பொழிவாற்றினர், அன்று அங்குக் குழுமியிருந்த அன்பர்களனைவரும் இன்பசாகரத்தில் திளைத்தனர். பின் குப்புசாமி ஐயரவர்கள் சத்திரத்திலும் தங்கி சொற்பொழிவாற்றி அவர்களையும் களிப்பித்தனர். பின் ஒரு சமயம் அடிகளார் திருப்பாதிரிப் புலியூருக்கு அணித்தாய திருவேந்திபுரம் சென்றிருந்தனர். அங்குள்ள வைஷ்ணவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி, "மார்கழித் திங்கள்" என்னும் ஆண்டாள் பாசுரத்தை வைஷ்ணவ பரிபாஷையுடன் தெளிவாக வியாக்கியானம் கூறினர். அது கேட்டு மகிழ்ந்த அவர்கள் மகிழ்ச்சிகொண்டு நீண்ட மாலையொன்றை அடிகளார் கழுத்திலிட்டனர். அதற்கு அடிகளார் சிலேடையாக, "நான் இன்று நெடுமாலையடைந்தேன்" என்றனர். அதுகேட்டு அனைவரும் அடிகளாரின் கல்வித் திறத்தைப் புகழ்ந்தனர். இச் செய்திகள் பத்திரிகைகள் மூலம் எங்கும் பரவிற்று.

அது காலை சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜத்திற்குத் தலைமை வகித்திருந்தவர், சித்தாந்த சரபம் அஷ்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியாரவர்கள் ஆவார்கள். அவர், சைவத்தில் அழுத்தமான பற்றுதலுடையவர். அடிகளார் புதுவை சென்ற காலை கிறிஸ்தவர் இல்லம் சென்றதும், அங்கு வைணவ சம்பந்தமான சொற்பொழி வாற்றியதும் பத்திரிகைகள் மூலம் கண்டு மனம் புழுங்கினர். சைவ சந்நியாசியா ? இத்தகைய செயல்புரிவது ! என்று அடிகளாரின் மாணவர்களிடம் கூறி வருந்தினர்.

மாணவர்கள் மூலம் அச்செய்தி அடிகளாருக்கு அறிவிக்கப்பெற்றது. அதற்கு அடிகளார்,

" எந்நிலையில் நின்றாலும் எவ்வேடங் கொண்டாலும்
மன்னியசீர் சங்கரன்றாள் மறவாமை பொருளன்றே "

என்பதை அவர் உணர்ந்திலர் போலும் என சாக்கிய நாயனார் புராணத்தை நினைவூட்டினர். பின், " பிற மதத்தை இகழாமலும், தம் மதத்தில் திண்மையான பற்றுங்கொண்டிருக்க வேண்டுவதே ஒவ்வொருவரின் கடமையாகும்" எனக்கூறி விடுத்தனர். அதன்பின் அஷ்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியாரவர்கள் அடிகளாரைக் காணவும் மனங்கூசினர். வேலூரில் நடந்த சைவ சித்தாந்த மகா சமாஜத்திற்குத் தாம் வராமலே நின்றுவிட்டனர். பின்னர் சமாஜத்தில் தாம் மேற்கொண்டிருந்த தலைமை பீடத்தினின்றும் விலகிக்கொண்டனர். J. M. நல்லசாமி பிள்ளையவர்கள் அவருக்குப் பின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

பின் ஒருநாள் அடிகளார் திருக்கோவலூரில் தங்கியிருந்தபோது, 'தியாகி' பத்திராதிபரான இராம சடகோப ஐயங்கார் அவர்கள், " இராமர் புருஷோத்தமர் " என்னும் பொருள் பற்றிச் சொற்பொழி வாற்றினர். அதில் அவர், இராமபிரான் ஒரே சொல்லும், ஒரே வில்லும், ஒரே இல்லும் உடையவர். ஒரே இல்லுடையாரென்பது இலங்கையில் இராவணனது அசோக வனத்தில் சீதா பிராட்டியார் தங்கியிருந்த போது அநுமனை நோக்கி,

" வந்தெனைக்கரம் பற்றிய வைகல்வாய்
இந்த இப்பிற விக்கிரு மாதரைச்

சிந்தை யாலுந்தொ டேனென்ற செவ்வரம்
தந்த வார்த்தைதி ருச்செவி சாற்றுவாய் ''

எனக் கூறிய மொழியே சான்றாகும். தன் மனைவி யன்றிப் பிற மாதரை மனத்தினாலுந் தீண்டேன் என இராமபிரான் திருமணத்தில் கூறிய மொழியையும் அறிவுறுத்திக் கூறினார். அதற்குத் தலைமை வகித் தருளிய அடிகளார் பின்வருமாறு முடிபுரை கூறினார்.

நாமெல்லோரும் வணங்கத்தக்க தெய்வமாக விளங்கும் இராமபிரானிடம் குற்றம் அணுகுமா? மக்களல்லவோ குற்றமுடையவர்கள். குணக்குன்றான இராமபிரான் தம்மை மக்களில் ஒருவனாக எண்ணி, அவர்கள் செய்யுந் தவறுபோல் நான் செய்யேன் என பிராட்டியாரிடம் கூறுவானேன்? தெய்வமாகிய பிராட் டியாரும் ஐயங்கொண்டு அநுமானிடம் கூறுவானேன்? இவை ஐபுறுஞ் செயல்கள் அல்லவா? இங்ஙனம் யான் கூறுவது கொண்டு அன்பர்களாகிய உங்கட்கு அப்பெருமானிடமுள்ள பக்தி குறையாதென எண்ணு கின்றனன்.

கடவுள் எனக் கூறப்பெறுபவர்கள் மூன்று சக்தி களையுடையவர்கள் ஆவார்கள். அச்சக்திகள் இச்சை, கிரியை, ஞானமெனப்படும். விநாயகருக்கு சித்தி, புத்தி, வல்லபை என மூன்று சக்திகளும், முருகப்பெரு மானுக்கு, வள்ளி, தெய்வயானை, வேல் என மூன்று சக்திகளும், சிவபெருமானுக்கு, கங்கை, பார்வதி, பராசக்தி என மூன்று சக்திகளும், பிரம்மாவுக்கு காயத்திரி, சாவித்திரி, சரஸ்வதி என மூன்று சக்தி களும் இருப்பது கண்கூடு. அதுபோன்று விஷ்ணு வுக்கும் சிதேவி, பூதேவி, நீளாதேவி என மூன்று

சக்திகள் உண்டு. அச்சக்திகளில், இராமாவதாரத்தின் போது ஸ்ரீதேவி என்னும் சக்தியை சீதை என்னும் மனைவியாகக்கொண்டனர். மற்றைய இரு சக்திகளாகிய பூதேவி, நீளாதேவி என்னுஞ் சக்திகளை அந்த அவதாரத்தில் அழைத்து வரவில்லை. அதனை வலியுறுத்தவே இராமபிரான் திருமணத்தின் போது சீதாபிராட்டியாரிடம், "இந்த இப்பிறவிக்கு இரு மாதரை சிந்தையாலுந்தொடேன்" எனக்கூறியருளினர். அவ்வாறு இராமபிரான் கூறியதற்கு அந்த இரு மாதர்களையும் எனப்பொருள் கொள்ள வேண்டுமேயன்றி, அன்னிய மாதரை எனப்பொருள் கொள்வது அப்பெருமான்மீது நமக்குள்ள பக்தியைக் குறைப்பதாகும் எனக் கூறினர்.

அவ்வுரை கேட்டு அனைவரும் மனமகிழ்ந்தனர். பிறர் கூறுவதுபோல் வைராக்கியங்கொண்டு, பிற மத நூல்களைத் தொடாமல் இருப்பாராயின், இதுபோன்ற உரைகளை நாம் கேட்க முடியுமா? இலக்கியச் சுவை ஒன்றையே கருதி அடிகளார் பல மத நுட்பங்களையுங் கற்றுத் தெளிந்தது நம் தமிழ்நாடு செய்த புண்ணியமேயாகும் என அனைவருங் கொண்டாடுவாராயினர்.

## 23. சிவிகையும் செலவும்

அடிகளார் எங்குச் செல்ல நேரினும் மடாலய மரியாதைக்குக் குறை நேரா வண்ணம், 'மேனா' என்னும் சிவிகைமீது இவர்ந்து செல்வதே வழக்கம். அவ்வாறு செல்வதால், நெடுந்தொலைவிலுள்ளவர்கள் அடிகளாரின் சொற்பொழிவைக் கேட்டு மகிழ்வதற்கில்லை. அன்றியும் விரைவிற் செல்லத் தக்க ஆகாய விமானம் முதலிய சாதனங்கள் உள்ள இக்காலத்தில்

அடிகளார் பழைய கொள்கையை கைக்கொண்டிருப்பது அன்பர் பலருக்குத் திருப்திகரமாக இருக்கவில்லை. காலத்திற்கு ஏற்றவாறு அடிகளார் தமது பிரையாண வசதியை மாற்றியமைத்துக்கொள்ள வேண்டுமெனச் சிலர் வற்புறுத்தியும் வந்தனர்.

புதுவை, 'கலைமகள் கழகம்' ஆண்டு விழா ஒன்றில் அடிகளார் தலைமை தாங்கியிருந்தனர். அவ்வமயம் சொற்பொழி வாற்றிய திரு. வி. கலியாண சுந்தர முதலியாரவர்கள் அடிகளாரை நோக்கித் "தங்கள் சொற்பொழிவு எங்கள் போன்றவர்கட்கு மிக்க விருப்பமளிப்பதாக விருக்கின்றது. தமிழ் நாட்டிற்கும் வேண்டப்படுவதொன்ருகும். சென்னையிலுள்ள அன்பர் பலர் தங்கள் சொற்பொழிவைக் கேட்கும் ஆவலுடையவர்களாக இருக்கின்றனர். எனவே, அடிகளார் இனிச் சிவிகையில் செல்லும் வழக்கத்தைக் கைவிடுதல் வேண்டும். மோட்டார் காரில் சிவிகையை அமைத்து, மரியாதைக்குக் குறை நேரா வண்ணம் வேண்டிய வசதிகளும் அமைத்துத் தருகிறோம். அதனை அடிகளார் ஏற்றுக்கொண்டு, ஆங்காங்குச் செல்லும் வழக்கத்தை மேற்கொள்ளல் வேண்டும். அவ்வாறு செய்ய ஒருப்படின் சென்னை போன்ற இடங்கட்கு அடிக்கடி செல்லவும், அதனால் பலர் நலமடையவும் கூடும்" எனக் கேட்டுக்கொண்டனர். அதனை அமைதியாகச் செவிமடுத்த அடிகளார் புன்முறுவலுடன் முதலியாரின் வேண்டுகோளுக்கு மகிழ்ந்து, பின்வரும் கதையைக் கூறினர்.

ஓர் ஊரில் மிக்க வயோதிகனை ஒரு அரசன் இருந்தனன். அவனுக்கு வயதுவந்த ஒரு புதல்வன்

இருந்தான். புதல்வனுக்கு விரைவில் சிம்மாசனம் ஏறவேண்டுமென ஆவல் இருந்தது. கிழ அரசன் இருக்கும் வரையில், தான் சிம்மாசனம் ஏறமுடியாது என எண்ணினன். ஏற்ற சமயத்தில் கிழ அரசனைக் கொலை செய்துவிட்டு ஆட்சியைக் கைக்கொள்ள வேண்டும் என முடிவு செய்தனன். அதற்கேற்ற சமயத்தையும் எதிர்நோக்கியிருந்தனன்.

அவ்வூரில் மிக்க வனப்பு வாய்ந்தவளும், ஆடல் பாடல்களில் சிறந்து விளங்குபவளுமாகிய ஒரு பொது மகள் உண்டு. நெடுநாள் தவமியற்றி உலகப் பற்றற்ற சந்நியாசி ஒருவர் அப்பொதுமகளைக் கண்டனர்; மனம் மாறினர். தமது வேட்கையையும் அவளிடம் தெரிவித்தனர். அவளும் அதற்கிணங்கினள். ஒருநாளும் குறிப்பிட்டனள்.

இந்நிலையில் ஒருநாள் கிழ அரசனுக்கு நித்திரை வரவில்லை. கண்விழித்துக் காலத்தைப் போக்க, மேற்கூறிய பொதுமகளை அழைப்பித்து நடனமாடச் செய்தனன். அக்கூட்டத்திற்குப் பலர் வந்திருந்தனர். பொதுமகள் நீண்டநேரம் ஆடினள். பொழுது புலரும் நேரமாயிற்று. அரசன் நிறுத்தும்படிச் சொல்லவில்லை. அவள் ஆடிக் களைத்துவிட்டனள். நடனத்தில் சோர்வு காணப்பட்டது. அது தெரிந்த நட்டுவன், “ இதுவரையில் நீ நல்ல பெயர் வாங்கியிருக்கிருய். இனி இருப்பது சொற்பகாலமே. வாங்கின பெயரை இழக்காமல் உன் கடமையைச் செம்மையாகச் செய்து மேன்மையடைவாயாக ” என ஆறுதல் கூறினன். அவளும் ஊக்கமுடன் தன் கடமையைச் செய்யத் தொடங்கினள். அதுகேட்ட கிழ அரசன், இன்றுவரை நல்ல அரசன்

என்று பெயர் பெற்றுள்ளோம். இவனை அதிகமாகத் துன்புறுத்தியதான கெட்ட பெயர் நமக்கு ஏன் வர வேண்டும் என எண்ணினன். நடனத்தை நிறுத்தி விடுமாறு ஆணை தந்தனன். நட்டுவன் கூறியதைக் கேட்ட அரசகுமாரன், தந்தைக்கு வயது அதிகம் ஆய்விட்டது. அவர் இவ்வுலகில் வாழ்ந்திருப்பது சிறிது காலமேயாகும். இன்றுவரை ஒழுக்கமுடையவனென்றும், நற்குணமுடையவனென்றும், பெயர் பெற்றுள்ளோம். இன்னம் சிறிதுகாலம் பொறுத்து இருந்து அப்பெயரை நிலைபெறச் செய்வதுவே நமது கடமையாகும். அவசரப்பட்டுத் தந்தைக்கு ஊறு செய்து வீண்பழியைத் தேடிகொள்வது நன்றல்ல வென எண்ணித் தன் எண்ணத்தை அறவே விடுத்தனன்.

நட்டுவன் கூறியதை சந்நியாசியும் கேட்டனர். 'என்ன அறியாமை! இதுவரை விரதம், தவம் முதலிய நற்செயலாற்றி, பிரமசரிய விரதத்தைக் கைக்கொண்டு, பிரம்ம தேஜஸைப்பெற விழையும் நாம் மனதை அடக்கத் தவறி, மாசு தேடிக்கொள்ள விருந்தோமே' என எண்ணினர். தம் எண்ணத்தைக் கைவிட்டனர் என ஒரு கதை உண்டு. அதைப் போல் யாமும் முன்னோர் சென்ற வழியைப் பின்பற்றி இதுவரை நடந்து வந்துள்ளோம். அம்முறையை மாற்றி நடப்பது எமக்குச் சிறந்ததாகத் தோன்ற வில்லை. அவ்வாறு நடத்தல் வைதிக மடாலய ஒழுக்கத்திற்கு ஏற்றதன்று எனவுங் கூறினர். அதனைப் பலரும் ஆமோதித்தனர்.

அடுத்த ஆண்டு விழாவில் திரு. வி. கலியாண சுந்தர முதலியாரவர்கள் அடிகளார் மோட்டார்

காரில் செல்ல வேண்டுமெனத் தாம் விரும்பியது நகர மக்களின் வேண்டுகோளின்பேரில் என்றும், அவ்வாறு செல்வதால் குறிப்பிட்ட நகரங்கட்குச் சென்று சொற்பொழி வாற்றி அவர்களை மகிழ்விப்பதாக முடியுமேயன்றி இடையிலுள்ள கிராம மக்கள் அவ்வின்பத்தை நுகர வியலாது என்பதும் பெறப் படுகிறது. எனவே, அடிகளார் சிவிகையிற் செல்வதே அனைவருக்கும் நலம் பயப்பதாகும். காந்தியடிகள், " கிராமங்கள் சீர்திருந்தினல்தான் உலகம் சீர்திருந்திய தாகக்கொள்ளக் கூடும்" எனக் கூறுவதால், அடிகளார் சிவிகைமூலம் சென்று ஒவ்வொரு கிராமத்திலும் தங்கி அங்குள்ள மக்களுக்கு அறிவுரை கூறி மக்களைச் சீர்திருத்த வேண்டுமெனக் கேட்டுக்கொண்டனர்.

அதன்பின், சிவிகைமூலம் சென்னை முதலான இடங்கட்குச் சென்று அவர்களையும் மகிழ்விப்பதாக அடிகளார் உறுதி கூறினர். (இது சென்னை செல் வதற்கு முன்னர் நிகழ்ந்தது.)

## 24. கார்க்கூரும் காற்கூறும்

ஆரணியிலுள்ள மடாலயத்திற்குச் சொந்தமான இடத்தில் பஜனைகூடம் கட்டிக்கொள்வதாகவும், வேண்டும்போது விட்டுவிடுவதாகவும் அவ்வூரார் சிலர் அனுமதி வேண்டினர். அடிகளாரும் அனுமதியளித் தனர். பின்னர் அவர்கள் அதனைத் தங்களுடையதாக ஆக்கிக்கொள்ள முயற்சிப்பதாகவும், அடிகளார் உடனே அங்கு வருதல் வேண்டுமென்றும் அங்கு மேற்பார்வையாளராகவிருக்கும் குட்டி செட்டியார் அவர்கள் விண்ணப்பித்துக்கொண்டனர். அதனை

நேரிற் சென்று ஒழுங்கு செய்வதற்கென அடிகளார் 1932-ஆம் ஆண்டில் ஆரணிக்குப் புறப்பட்டனர்.

இடையில் திருவருணையில் தங்கிப் போளூர் சென்றனர். அங்குத் தமிழ்ப் பண்டிதராகவிருந்த வண்டிப்பாளையம் தண்டபாணி முதலியார் அடிகளாரை வரவேற்று உபசரித்தனர். அடுத்து மாதிமங்கலம் ரயிலடியில் தங்கினர். அது தெரிந்த வடமகாதேவ மங்கலம், ஸ்ரீ மகாதேவ சபையின் செயலாளர் ஆ. பாலசுந்தரம் பிள்ளையும், பொன்னுச்சாரி என்னும் அன்பரும் வந்து அடிகளாரைத் தெரிசித்துத் தங்கள் கிராமத்திற்கு எழுந்தருள வேண்டுமெனக் கேட்டுக்கொண்டனர். அதற்கு அடிகளார் தாம் அவசரமாகச் செல்வதாகவும், மற்றொரு சமயம் வருவதாகவும் வாக்களித்துவிட்டு ஆரணி சென்றனர்.

அங்கு ஆகவேண்டிய செயல்களை ஒருவாறு முடித்துக்கொண்டு, 'குடியேற்றம்' அன்பர்களின் வேண்டுகோட்கிணங்கி ஆங்குச் சென்று சொற்பொழிவாற்றினர். அதனைச் செவிமடுக்க, 'கார்க்கூர்' என்னும் ஊரிலிருந்து செல்வமுடைய ஓர் அன்பர் வந்திருந்தனர். அவர் அடிகளாரை அணுகி, அண்மையிலுள்ள தங்கள் கிராமத்திற்கு வந்துபோக வேண்டுமென வேண்டிக்கொண்டனர். அடிகளாரும் அவ்வேண்டுகோளுக்கிசைந்தனர்.

அடிகளார் புறப்பட்டுச் சென்று ஒருநாள் இரவு எட்டு மணிக்கு அவ்வூரை யடைந்தனர். புதிதாகக் கட்டப்பெற்றிருந்த ஒரு கட்டிடத்தில் அடிகளார் தங்கினர். பகலில் அக்கட்டிடத்தை அடிகளார் பார்த்ததில்லை. அக்கட்டிடத்தின் பின்புறத்தில் ஒரு

குறடும், அதனை அடுத்து மூன்றடி தாழ்ந்துள்ள ஒரு தளமும் உண்டு. இரண்டும் வெண்சுதை தீட்டப் பெற்று, உயர்வு தாழ்வு அறிந்துகொள்ள இயலா வண்ணம் அமைந்திருந்தது. அன்று அன்பர்கள் வரவேற்புச் சிறப்பாகவேயிருந்தது. இரவு அடிகளார் துயில்கொண்டனர். இரண்டு மணிக்கு விழித்துக் கொண்டனர். அன்பர்கள் அனைவரும் ஆழ்ந்த நித்திரையில் இருந்தனர். அடிகளார் அவர்களை எழுப்ப ஒருப் பட்டிலர். தாமே தனியாக ஜல ஸ்பரிசத்திற்காகப் பின்புறம் சென்றனர்.

குறடு நெடுக விருப்பதாக எண்ணிச் சென்றனர். அது அவ்வாறு இல்லாமையால் தவறி தளத்தில் கால் ஊன்றிவிட்டனர். எதிர்ப்பாராத வண்ணம் கால் பள்ளத்தில் சேரவே, உடல் சுமை தாங்காது ஊன்றிய கால் முறிய, வீழ்ந்துவிட்டனர். பள்ளத்தில் விழுந்த அடிகளாருக்குக் கால் முறிந்தது தெரியவில்லை. ஒருவரும் அறியாமல் எழுந்து உட்சென்று, படுத்துக் கொள்ளலாம் என எண்ணினர். எழ முயற்சித்த போதுதான், கால்தூக்க முடியா வண்ணம் வலி தோன்றுவதைக் கண்டனர். காலில் ஊறு நேர்ந்துள்ளது என்பதை உணர்ந்தனர். மாமாவை அழைத்தனர்.

பலர் ஓடிவந்தனர். அடிகளாருக்கு ஏற்பட்ட நிலையைக் கண்டனர். வருந்தினர். உடனே, 'குடியேற்றம்' வைத்தியசாலைக்கு எடுத்துச்சென்றனர். அங்குக் கட்டு கட்டப்பெற்றது. வேலூர் சென்றனர். எக்ஸ்ரே எடுக்கப்பெற்றது. திருத்தணிகை மருத்துவர் வந்தனர். அவரும் கட்டுக் கட்டினர். அவர் உடன்வர

இசையாததால், திருக்கோவலூர் வந்து தங்கிப் பின் புலிசை மடாலயம் வந்து சேர்ந்தனர். அங்கு ஒரு தமிழ் மருத்துவரால் சிகிச்சை செய்யப்பெற்று வந்தது. சில மாதங்களில் குணமுற்றனர்.

கால் என்பு முறிந்து, நடக்கும் தொழின் முயற்சி யின்றி யிருந்த அமையத்திலும் அடிகளார் குன்றாத ஊக்கத்துடன் பாடங் கற்பிப்பதைக் கைவிட்டிலர். இத்தகைய கைம்மாறறியா கடப்பாட்டினைப் பாராட் டாதார் எவரே? உடல் நிலையில் கருத்தூன்றாத அடி களாரின் பேருபகாரச் செயலை எச்சொல் கொண்டு வழுத்துவது என அறிகிலேம்.

இந்நிகழ்ச்சி பற்றி அடிகளார் அன்பர்களுடன் அளவளாவுவதுண்டு. அதுகாலை அடிகளார், "கார்க் கூர் (கார்+கு= மேகத்திற்கு இருப்பிடமான, ஊர்=கிராமம்) என எண்ணிச் சென்றேம், அது காற் கூறு (கால்+கு=காலுக்கு, ஊறு=துன்பம் தரும்) என்பதை அறிந்திலோம்" எனக் கூறுவர். அச்சொன் னயம் கேட்டு அனைவரும் மகிழ்வர்.

## 25. அறுபதாம் ஆண்டு நிறைவு விழா

அடிகளாருக்கு ஸ்ரீமுக ஆண்டு, வைகாசித்திங்கள், மூல நாளுடன் (1933 ஷ மேமீ) அறுபது ஆண்டுகள் நிறைவுற்றன. அப்பெருநாளைத் திருநாளாக மாணவர் அனைவரும் கொண்டாடினர். வடமொழி தென் மொழி ஆகிய மொழிகளில் வல்லுநரான திருவாளர், மகாமகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியாரவர்கள் தலைமை தாங்க, பல பேரறிஞர்கள் சொற்பொழி வாற்ற, மடாலயத்தில் அடிகளாரின்

மணிவிழா செவ்விய முறையில் கொண்டாடப் பெற்றது.

நூற்றுக்கணக்கான தமிழ்ச் சங்கங்களும், புலவர் பெருமக்களும் வாழ்த்துப்பாக்கள் வாசித்தளித்தனர். அவ்வமயம் அடிகளார் தம் அறுபான் ஆண்டு நினைவுக் குறியாக ஒரு தமிழ்க் கலாசாலை திறந்துவைத்தனர். அதனை நடத்துவதற்கென ரூபாய் பத்தாயிரம் மூலதனமாக வைத்தனர். திருப்பாதிரிப்புலியூர், பழையவண்டிப்பாளையம், புதுவண்டிப்பாளையம், கரையேறவிட்ட குப்பம், முருகேச நகர் ஆகிய பல ஊர்களிலிருந்து நூற்றுக்கணக்கான மாணவர்கள் மடாலயத்திலுள்ள பாடசாலைக்கு வந்து இன்றும் கல்வி பயின்று வருகின்றனர். ஏழைமக்கட்கு அறிவுச்சுடர் கொளுத்தும் அச்செயலை அனைவரும் பாராட்டி வருகின்றனர்.

கரந்தை தமிழ்ச்சங்கத் தலைவர் திருவாளர். த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள் செந்தமிழ் மொழியைச் சீர்பெற ஓம்பும் செயலைப் பாராட்டி அப்பெருமகனாருக்கு அடிகளாரின் திருக்கரத்தினாலேயே, "செந்தமிழ்ப் புரவலர்" என்னும் செவ்விய பட்டம் வழங்கப்பெற்றது. சில பத்திரிகைகளுக்கு அவற்றின் முன்னேற்றங்கருதி சன்மானங்கள் அனுப்பி ஆதரிக்கப் பெற்றன.

## 26. பயிற்சிபெற்ற மாணவர்கள்

"ஸ்ரீ பாடலேசுவரர் தரும பாடசாலை" நடைபெறுமல் நின்றபின், அப்பாடசாலையில் பயின்றவர்களும், தமிழ்க்கல்வி பெறவேண்டுமெனும் ஆர்வமுடையவர்களுமான மாணவர் சிலரை, "மீனாக்ஷி

காலேஜ்" எனும் பெயருடன் அதுகாலை விளங்கிய சிதம்பரம் அண்ணுமலை சர்வகலாசாலைக்கு அனுப்பி வைத்தனர். சிலருக்கு, திரு. உருத்திரசாமி ஐயரவர்களைத் துணையாகக் கொண்டு கல்வி புகட்டி, திருவையாறு அரசர் கல்லூரியில் நடைபெற்ற தேர்தலுக்கு அனுப்பிவைத்தனர்.

அடிகளார் மடாலயத்தில் எழுந்தருளியுள்ள நாட்களில் சிறுவர்கட்குப் பாடம் போதிக்கப் பெறுமல் இருக்கும் நாட்கள் சிலவேயாகும். அவை,

" அட்டமியி லோதிஞல் ஆசானுக்(கு) ஆகாது
சிட்டருக்குப் பன்னென்குந் தீதாகுங் - கெட்ட உவா
வித்தைக்கு நாசமாம் வெய்ய பிரதமையில்
பித்தரும் பேசார் பிழை "

என ஆன்றோர் கூறியுள்ளமையால், அதனை ஆதாரமாகக் கொண்டு, அமாவாசை, பௌர்ணமி ஆகிய தினங்களும், அவற்றின் முன், பின் நாட்களும் அஷ்டமியன்றும் பாடம் நடைபெறாது. அன்றியும் அடிகளார் வளர்பிறை சஷ்டி நாளன்று உணவு உட்கொள்ளாமல் மௌன விரதம் அனுஷ்டிப்பதால் அன்றும் பாடம் நடைபெறு. சஷ்டி நீங்கலாக மற்றைய நாட்களில் சொற்பொழிவு நடைபெறுவதும் உண்டு.

மடாலயத்தில் கல்வி பயின்று, வித்துவான் பரீக்ஷையில் தேர்ச்சிபெற்று, தற்போது கலாசாலைகளில் தமிழ்ப் பண்டிதராக விளங்குபவர்களில் சிலர் பெயரைக் கீழே தருகிறேம். அவர்களாவார்.

ந. ஆறுமுக முதலியார், தலைமைத் தமிழாசிரியர், நகராண்மைக்கழக உயர்நிலைப்பள்ளி ; விழுப்புரம். அ.

நடேச முதலியார், தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்நிலைப்பள்ளி, லால்குடி, (திருச்சி); முருகேச முதலியார், தமிழாசிரியர், போர்டு உயர்நிலைப்பள்ளி, அரியலூர்; மு. இராசாக்கண்ணு முதலியார் (அரசங் கண்ணனார்) B. O. L (Hon) தமிழ்ப் பேராசிரியர், அரசினர் கல்லூரி, கும்பகோணம்; ஆ. சிவலிங்க முதலியார், தமிழ் விரிவுரையாளர், சிவஞானபாலைய சுவாமிகள் தமிழ்க்கல்லூரி, மயிலம்; சு. சண்முக முதலியார், தமிழ் விரிவுரையாளர், சிவஞானபாலைய சுவாமிகள் தமிழ்க்கல்லூரி, மயிலம்; க. செந்தில்நாயக, முதலியார், தமிழ் விரிவுரையாளர், தமிழ்க்கல்லூரி, திருப்பதி; M. தண்டபாணி முதலியார், தமிழாசிரியர், உயர்நிலைப்பள்ளி, பெரம்பூர்; பா. ஏகாம்பர முதலியார், தமிழாசிரியர் உயர்நிலைப்பள்ளி, செங்கற்பட்டு; க. சம்பந்த முதலியார், தமிழாசிரியர், ஹிந்து உயர்நிலைப் பள்ளி, மதுராந்தகம்; ந. ஆறுமுக முதலியார், தமிழாசிரியர், பெண்கள் உயர்நிலைப்பள்ளி, செங்கற் பட்டு. ந. திருநாவுக்கரசு முதலியார், தமிழாசிரியர், செயிண்டு பீட்டர் பள்ளி, இராயபுரம், சென்னை; ப. திருநாவுக்கரசு முதலியார், தமிழாசிரியர், லிட்டில் பிளவர் உயர்நிலைப்பள்ளி, கும்பகோணம்; இரா. பழநியாண்டி முதலியார், தமிழாசிரியர், S. P. S. உயர்நிலைப்பள்ளி, கூடலூர் O. T.; ந. கருணைாந்த முதலியார், தமிழாசிரியர், செயிண்ட் ஜோசப் இனைப் பள்ளி, திருப்பாதிரிப்புலியூர்; ந. தண்டபாணி முதலியார், தமிழாசிரியர், உயர்நிலைப்பள்ளி, தாம்பரம்; முத்தையா முதலியார், தமிழாசிரியர், டேனிஷ் மிஷன் செகெண்டரி பள்ளி, நெல்லிக்குப்பம்; சக்கரபாணி நாயகர், (ஆயிரம் ரூபாய் பரிசு பெற்றவர்) தமிழாசிரியர்

உயர்நிலைப்பள்ளி, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை ஆகிய பலர் அடிகளாரின் பெருங்கருணையால் இன்றும் செந்தமிழ்ப் பயிற்றுவிக்கும் சீரிய பேறு பெற்றுள்ளனர் எனக் கூறுதல் மிகையாகாது. அன்றி, வேறு துறைகளில் பணி புரியும் மாணவர்களும் பலர் உண்டு.

பெண் மகளிர் பலர் அடிகளாரிடம் பயின்று அறிவுபெற்றுள்ளனர். சிலர் பண்டிதைகளாகவும் விளங்குகின்றனர். அவர்களுள் டிப்டி கலெக்டர், திரு. அரங்கசாமி முதலியார் அவர்களின் வாழ்க்கைத் துணைவியாராக விளங்கும் திரு. க. ர. ஆதிலட்சுமி அம்மையாரவர்கள் அடிகளாரிடம் பாடம் கேட்டு உணர்ந்ததன் பயனாக கந்தரனுபூதி, திருப்போரூர்ச் சந்நிதி முறை ஆகிய நூல்களுக்குக் குறிப்புரை எழுதி வெளியிட்டிருப்பதே, பெண்மணிகளும் அடிகளார் மூலம் அறிவு பெற்றுள்ளனரென்பதற்குச் சான்று பகரும்.

## 27. சென்னை செலவு

சென்னையில் வதிபவரும், 'திருவொற்றி யூரான் அடிமை ' என்னும் சிறப்புப் பெயர் பூண்டவருமாகிய திரு. த. ப. இராமசாமிப் பிள்ளையவர்கள் அழைப்புக் கிணங்கி 1934 - ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதத்தில் அடிகளார் சென்னை சென்றனர். சூளையிலுள்ள, ' தியாகர் வில்லா ' என்னும் பிள்ளையவர்கள் இருப்பிடத்தில் தங்கியிருந்து பல சொற்பொழிவுகளாற்றினர்.

சைவசித்தாந்த மகா சமாஜத்தின் விசேட மகாநாடு ஒன்று மயிலாப்பூரில் கூடிற்று. அதற்கு அடிக

ளார் தலைமை தாங்கிச் சொற்பொழிவாற்றினர். சமாஜ ஆண்டு விழாவை திருவதிகையில் நடத்து வதெனை முடிவு செய்யப் பெற்றது. அடிகளார் ஊர் திரும்பினர்.

1934 - ஆம் ஆண்டு டிசம்பரில் சைவசித்தாந்த மகா சமாஜத்தின் இருபத்தொன்பதாவது ஆண்டு நிறைவு விழா திருவதிகையில் திரு. வி. கலியாண சுந்தர முதலியாரவர்கள் தலைமையில் கூடி நடை பெற்றது. அப்பேரவையை அடிகளாரே திறந்து வைத்தனர். அது காலை அடிகளாராற்றிய திறப் புரையும், இறுதியில் கூறிய வாழ்த்துரையும் பல நீதி கள் நிரம்பியனவாக விளங்கின.

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் செயலாள ரான திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்களின் அழைப்பிற் கிணங்கி, அடிகளார் 1935 - ஆம் ஆண்டு மேமாதத்தில், சென்னைக்கு அண்மையிலுள்ள கோவூ ருக்கு எழுந்தருளினர்கள். 'திருமேனிச்சுரம்' என்னும் சிவாலயத்தில் நடைபெற்ற வைகாசி விழாவில் அடிக ளாரின் சொற்பொழிவுகள் பல நடைபெற்றன.

திருவெண்ணெய் நல்லூரைத் தனது பிறப்பிட மாகக் கொண்டவரும், சென்னை, ஹானரெரி பிரசி டென்சி மாஜிஸ்ட்ரேட்டும், கண்டிராக்டரும் ஆகிய திரு. வெ. ஆதிசேஷ முதலியாரவர்கள் கோவூர் சென்று அடிகளாரைச் சென்னைக்கு அழைத்து வந்தனர். முதலியாரவர்களுடைய ஆதரவில், போலீஸ் கமிஷனர் ரோட்டிலுள்ள அவரது இல்லத் தில், மூன்று மாதங்கள் தங்கியிருந்தனர். அவரது "நால்வர் அருள்" என்னுமிடத்திற்குச் சென்று,

7

அங்குப் பெரியபுராண சம்பந்தமான பல சொற் பொழிவுகளையாற்றினர். அவ்விடம் விட்டு அகன்ற பின் வாயுரை வாழ்த்தாக முதலியாரவர்கட்குப் பின் வரும் செய்யுளை அடிகளார் எழுதி அனுப்பிவைத் தனர்.

" நல்லாதி சேடப்பேர் நண்ப விதுகாண்க
எல்லா நலனு மெய்துக - பொல்லாத
சூரர் தடிந்து சுரருக் கருள்புரிந்தோன்
பேரருளைப் பெற்றநலத் தால் "

பர்மா ஆயில் கம்பெனி ஏஜண்டான கோவிந்த ராஜ முதலியாரவர்கள் இல்லத்திலும், நெல்சன் டைப் பவுண்டரி சொந்தக்காரரான திரு. மாணிக்க முதலியா ரவர்களுடைய 'கணேசர் கலியாண மண்டபம்' என்னு மிடத்திலும் பல பகல் தங்கியிருந்தனர். பல சொற் பொழிவுகள் நடைபெற்றன. பல அன்பர்கள் குழுமி யிருந்து அடிகளாருடைய மொழி யமுதத்தைப் பருகி இன்ப மெய்தினர். சென்னை வாசிகள் அடிகளாரிடம் காட்டிய அன்பு மறக்கற் பாலதன்று.

## 28. ஆலயத்தலைமையும் அதனை நடத்திய முறையும்

அன்பர் பலரின் வேண்டுகோட் கிணங்கி 1936 - ஆம் ஆண்டில் அடிகளார், புலிசை சிவாலய தருமகர்த்தர் பதவியை ஏற்றுக்கொண்டனர். அவ் வாண்டு வைகாசித் திருவிழா அறிக்கையாக வெளி யிட்ட அழைப்பிதழ் நாட்டிற்கே ஒரு எடுத்துக் காட் டாக விளங்கி யிருந்தது. சங்க இலக்கியங்களிலும், பன்னிரு திருமுறைகளிலும் விழாக்கள் சம்பந்தமாக காணப்பெறும் கருத்துக்களெல்லாம் குறிப்பிட்

பெற்று, இன்றியமையாத சில அரிய கருத்துக்களும் அதில் மிளிர்ந்து தோன்றின.

ஆலய பரிபாலனம் எவ்வாறு இருத்தல் வேண்டு மென்பதைப் பிறருக்கு அறிவுறுத்துதல் போன்று அடிகளாரின் நிர்வாகத் திறமை விளங்கித் தோன் றிற்று. அடிகளார் காலத்திற்றான் ஆலயத்தில் மின்சார விளக்குகள் ஏற்பட்டன. விழாக்காலங்களில் அதன் அங்கமாக ஆலய நிர்வாகத்திலேயே சமய சம்பந்தமான சொற்பொழிவுகள் நடத்தவும் ஏற்பாடு செய்யப் பெற்றன.

அடிகளாரே தலைமை வகித்து ஆலய நிர்வாகத்தை என்றென்றும் நடத்திவரின், இன்றியமையாத பல சீர் திருத்தங்கள் செய்யப் பெறும் என்பது பல அன்பர் களின் அவாவாக விருந்தது. ஆனால், இரண்டொரு ஆண்டுகட்கு மேல் அடிகளார், அப்பணியை இருந்து நடத்த முடியாத நிலை நேர்ந்தது.

ஆங்கில அறிவும், அதிகார பதவியும் பெற்றுத் தங்களை உயர்வாகவும், மற்றவர்களைத் தாழ்வாகவும் எண்ணி நடத்தும் குணம் சிலர்பால் காணப்படும் சுபாவமாகும். அத்தகைய முறையில் பழகியவரும், சமயப் பற்றுதலற்றவரும் ஆகிய ஓர் அதிகாரி முன் அறிவிப்பின்றியே சிவாலயக் கணக்கைப் பரிசோதிக்க வந்தனர். அடிகளார் அவரை இன்னாரென்று அறிந்து கொள்ளாமையால் வாளா விருந்தனர். தாம் மரியாதை யாக வரவேற்கப்பட வில்லை யெனும் எண்ணம் அவருக்கு உண்டாயது போலும்.

அடிகளாரிடம் நடந்துகொள்ள வேண்டிய முறை சிறிது மின்றி, அதிகார தோரணையில் சிவாலய

கணக்குகளைக் காண்பிக்க வேண்டுமெனக் கேட்டனர். அதன் பின்னர்தான் அவரை அடிகளார் இன்னாரென அறிந்து கொண்டனர். பின்னர் அமைதியாக, 'ஆலயத் திற்குச் சென்று, மானேஜரைக் காணின் அவர் காண் பிப்பார்' எனக் கூறினர். அதனை அவர் மேலும் அலக்ஷி யம் செய்வதாக எண்ணிக்கொண்டனர். 'உங்களைக் கேட்டால் நீங்களல்லவோ வருவித்துக் காண்பிக்க வேண்டும். என்னை ஆலயத்திற்குப் போகுமாறு கட்டளையிடுகிறீர்களே' எனச் சினந்தனர். அச்சொல், அடிகளார் தம் வாழ்நாளிலேயே கேட்டறியாத கடு மொழியாகத் தோன்றிற்று. வந்த அதிகாரியை நோக்கினர், 'உங்கள் போன்றவர் களிடமெல்லாம் கீழ்ப்படிந்து விடையிறுக்கும் நிலையில் முருகப்பெரு மான் எங்களை வைத்திருக்கவில்லை. எனவே, இப் பொறுப்பு இனி எமக்கு வேண்டுவதில்லை' எனக் கூறினர். இராஜிநாமா கடிதம் ஒன்றும் எழுதி அவ ரிடமே கொடுத்து விட்டனர்.

வந்த அதிகாரி வேறு கூறுவதற்கின்றி ஆலயம் சென்றனர். கணக்குகள் திறம்பட வைத்திருக்கும் முறையைக் கண்டு மகிழ்ந்தனர். அடிகளாரைத் தாம் முன்னர் அறிந்து கொள்ளாமற் போனதற்கு வருந் தினர். மீண்டும் மடாலயம் வந்தனர். தமது அறியா மைக்கு வருந்தினர். அப்பதவியை அடிகளாரே ஏற்று நடத்துதல் வேண்டுமென வேண்டிக் கொண்டனர். அதற்கு அடிகளார், "முருகப் பெருமான் திருவருட் செயல், இம்முறையில் நமக்கு அறிவு புகட்டி யுள்ள தால் இனியும் அத்தொடர்பை ஏற்கச் சம்மதியேம்" எனக்கூறி விடுத்தனர்.

## 29. சென்னை செலவும், வேலூர் சமாஜமும்

அடிகளாரிடம் மிக்க அன்பு பூண்டவரும் டிப்டி கலெக்டருமான திரு. க. அரங்கசாமி முதலியாரவர்களின் அழைப்பிற் கிணங்கி 1937-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் அடிகளார் சென்னைக்கு எழுந்தருளினார்கள். தியாகராய நகரிலுள்ள முதலியாரவர்களின் இல்லத்திலேயே அடிகளார் பல வாரங்கள் தங்கியிருந்து அரிய பல சொற்பொழிவுக ளாற்றினார்கள்.

சைவசித்தாந்த மகா சமாஜத்தின் செயலாளரான திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்களின் அழைப்பிற் கிணங்கி, மயிலாப்பூரிலுள்ள அவர் இல்லத்திற்குச் சென்று தங்கியிருந்தனர். திருமயிலை கபாலீச்சுரம் அமர்ந்த பெருமானுடைய விழாவைக் கண்டு, கண் குளிரத் தெரிசித்தனர். விழாவைக் காண வருவோர் நலம் பெறும் வண்ணம் ஐந்து அரிய சொற்பொழிவுகளாற்றினர்.

அடிகளார் முன்னர் எழுந்தருளி யிருந்த வமயத்தில் உபசரித்த அன்பர்களின் வேண்டுகோட் கிணங்கி, அவர்கள் மனமும் மகிழும் வண்ணம் ஆங்காங்குச் சென்று தங்கியிருந்து சொற்பொழி வாற்றினர். பின்னர் ஊர் திரும்பினர்.

1937 - ஆம் ஆண்டு டிசம்பரில் வேலூரில் நடைபெற்ற சைவசித்தாந்த மகா சமாஜத்தின் ஆண்டு விழாவிற்கு அடிகளாரே தேர்ந்தெடுக்கப் பெற்றனர். அடிகளார் ஆங்குப் போந்து தலைமை தாங்கித் தம் பணியை அன்பர்கள் உள்ளம் மகிழ ஆற்றினர். இரவு அடிகளாருக்குச் சுரநோய் கண்டது. உடல் நிலை செவ்

விய முறையில் இல்லை. 103° அளவு சூடிருக்கலா மெனக் கருதப் பெற்றது. இத்தகைய நிலையில் அடி களார் தம் கடமையை அடுத்த நாட்களில் எவ் வகையில் நிறைவேற்ற வியலும் எனப் பலர் ஏங்கினர்.

அன்புடைய மாணவர்களின் கண்களில் நீர் துளும் பிற்று. அது கண்டு அடிகளார் அவர்கட்கு ஆறுதலாக, "முருகன் திருவருள் முன்னிற்பின் நமக்கு இது ஒரு பொருட்டன்று. பணியாற்றுகையில் உயிர் நீங்கினும் மகிழ்ச்சியே; உடல் நிலை எவ்வகை மாறுபாடுறினும் ஏற்றுக்கொண்ட பணியைச் செய்து முடிப்பதே நமது கடமையாகும். கவலையுறுதிர். அப்பெருமான் திரு வருள் நமக்கு மிகுதியும் உண்டாதலின் அது முன் னின்று நன்மையே செய்விக்கும்" எனக் கூறினர். அடிகளார் கூறிய வண்ணம் அந்நோய் பகலில் குறைந் தும், இரவில் மிகுந்தும் இருந்தது. அந்நிலையிலும் அடிகளார் மனச்சோர் வின்றித் தம் கடமையில் சிறி தும் வழுவாது செய்து முடித்தனர். பின்னர் சில தினங்கள் சுரநோய் அடிகளாரை வருத்திற்று. விரை வில் குணமுற்றனர். முருகன் திருவருளை நம்பிய அடிக ளார் எவ்வித ஊறு மின்றிப் புலிசையை யடைந்த னர்.

"சைவ ஒழுக்கம்" எனும் ஒரு சிறு நூல் அடிக ளாரால் தொகுக்கப்பெற்று, சமாஜ கூட்டத்தில் அனை வருக்கும் வழங்கப் பெற்றது. அது இன்றும் பலருக் கும் பெரும் பயன் விளைவிப்பதாக விளங்குகின்றது.

## 30. தஞ்சை வெள்ளி விழா

உலக மொழிகளுள் உயர்தனிச் செம்மொழியாய் விளங்கி, அரியாசனத்து வீறுகொண்டு அமர்ந்திருந்த

நம் தம் தமிழ்மொழி, மீண்டும் அவ்வுயர்வைப் பெற ஏற்ற முறையில் பணியாற்ற வேண்டுமெனும் ஆர்வம், பல அன்பர்களின் உள்ளத்தினின்றும் எழுந்தது. அதற்கென, தஞ்சையைச் சார்ந்துள்ள கருந்திட்டாங் குடி என வழங்கும் கரந்தையில், கடந்த 1911 - ஆண்டு வைகாசித் திங்கள், முதல் நாள் அன்று, "கரந்தைத் தமிழ்ச் சங்கம்" என ஒரு சங்கம் நிறுவப் பெற்றது.

அச்சங்கம், பிறமொழி கலவாத செவ்விய தமிழ் மொழியைப் பரப்ப வேண்டுமெனும் ஆர்வத்துடன் புரிந்துவரும் தொண்டு பலவாகும். அதன் ஆண்டு விழாக்களில் பல பேரறிஞர்கள் தலைமை தாங்கிப் பணியாற்றி யுள்ளனர். நம் அடிகளாரும் அச்சங்கத் தின் ஏழு எட்டாம் ஆண்டு விழாக்களில் தலைமை தாங்கிப் பணியாற்றி யுள்ளனர்.

இருபானைந்து ஆண்டுகள் பணியாற்றிய அச்சங் கம் தம் வெள்ளி விழாவைக் கொண்டாட முன் வந்தது. அவ்விழாவிற்குத் தலைமை தாங்கிப் பணி யாற்றும் ஆற்றல் வாய்ந்த பேரறிஞர் தமிழ்நாட்டில் நம் அடிகளாரே யாகுமெனை முடிவு செய்தது. அன்பர் பலர் புலிசை போந்து அடிகளாரை அழைத்தனர். அடிகளாரும் அவர்களின் வேண்டு கோளுக்கு இசைந் தனர்.

1938 ஆம் - ஆண்டு ஏப்ரல் மாதத்தில், 'கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் வெள்ளிவிழா' அடிகளாரின் தலைமையில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெற் றது. 'புலவர் கல்லூரி' ஒன்றும் அடிகளார் கரத் தினாலேயே திறந்து வைக்கப் பெற்றது. செந்தமிழ் வளர்ச்சிக்கென செவ்விய முறையில் பெரும் பணி

யாற்றி வரும் கரந்தைத் தமிழ்ச் சங்கத் தலைவர், திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கட்கு அடிகளார், ' தமிழ வேள் ' என்ற பட்டத்தையும், ஷெ சங்கப்புலவர் திரு. வேங்கடாசலம் பிள்ளையவர்கட்கு, ' கவியரசு ' என்ற பட்டத்தையும் வழங்கினர்.

அவ்விழாவில் அடிகளாராற்றிய முன்னுரை பின்னுரைகள் அனைவரையும் ஆனந்தக் கடலுள் ஆழ்த்தின. அடிகளாரின் சீரிய உரைகளை அடிக்கடி செவி மடுக்கும் பேறு பெற்றிலோமே யென வருந்திக்கூறிய அன்பர்கள் பலராவர். அச்சொல் அடிகளாரின் மாணவர் பலருக்கும் அகமகிழ் வளிப்பதாயிற்று. அடிகளாரைப் போற்றாத புலவர்களில்லை.

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தினர் தமது நினைவுக் குறியாக, அதிக கனமின்றியும், தாங்கிச் செல் வோருக்கு மிக எளிதாகவும் இருக்கும் வண்ணம் நன் முறையில், ' சிவிகை ' ஒன்று அமைத்து வழங்கினர். தற்போது மடாலயத்தில் கையாளப் பெற்று வருவது அந்தச் சிவிகையே யாகும்.

## 31. கோவூர் செலவும், குறங்கிற் கழலையும்

சைவசித்தாந்த மகா சமாஜத்தின் செயலாளரான திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள் கோவூர், திருமேனீச்சுரம் ஆலய தருமகர்த்தராக விருந்தனர். மீண்டும் அவர்கள் அழைப்பிற் கிணங்கி, அடிகளார் கோவூர் சென்றனர். 1939 - ஆம் ஆண்டு மே மாதத்தில் வைகாசி விழாவில் அன்பர்கள் அக மகிழ சொற்பொழிவாற்றினர். அங்குச் சில தினங்கள் தங்கி யிருந்தனர்.

அன்பர் சிலரின் அழைப்பிற் கிணங்கிச் சென்னை சென்றனர். சிம்புமல் சௌக்கார் அவர்களின் ஆதரவில் தங்கி யிருந்து சில சொற்பொழிவுகளாற்றினர். சில அன்பர்களின் இல்லங்கட்கும் அவரவர்கள் வேண்டுகோட் கிணங்கிச் சென்று தங்கியிருந்து, சொற்பொழிவாற்றி அவர்களை மகிழ்வித்தனர். அவற்றுள் ஐக்கிய நாணய சங்க ரிஜிஸ்டரார், திரு. கீ. தெய்வ சிகாமணி முதலியார் அவர்கள் இல்லத்தில், 'மெய்கண்டார்' என்பது பற்றி ஆற்றிய சொற்பொழிவில் உள்ள சொற்பொருளின் நுணுகிய கருத்துக்கள் இன்றும் அன்பர்களின் உள்ளங்களில் கமழ்ந்து கொண்டிருக்கின்றன. பின் மைலாப்பூரில் தங்கி யிருந்து சில சொற்பொழிவுகளாற்றினர்.

கோடைக்கால மாகையினாலும், அடிகளார் ஆங்காங்குச் சென்று சொற்பொழி வாற்றும் பணியை மிகுதியாக மேற்கொண்டிருந்தமையினாலும், கண்ணேறு பட்டதோ வென்று பிறர் நினைக்கும் வண்ணம் வெப்பந் தாங்க மாட்டாது, அடிகளாரது இடது துடையில் ஒரு பெரிய கட்டி தோன்றிற்று. டாக்டர் திரு. சம்பந்த முதலியாரவர்கள் அதற்கு சத்திர சிகிச்சை செய்தனர். அதுகாலை டிப்டி கலெக்டர் திரு. க. அரங்கசாமி முதலியாரவர்களின் மனைவியாரும், இராஜாபாதர் முதலியார் அவர்களின் திருக்குமாரியாருமாகிய திரு. க. ர. ஆதிலட்சுமி அம்மையார் அடிகளாரின் அருகிருந்து ஆற்றிய பணி மறக்கற்பாலதன்று. அடிகளார் சின்னாள் சென்னையிலேயே தங்கி யிருந்தனர். அந்நோய் அடிகளாரை வருத்துவதாயிற்று. குணங் காணாமையால் புலிசை மீண்டனர்.

புலிசையில் அடிகளாரின் ஆசிரியர்களில் ஒருவ ரான ஆறுமுகம் பிள்ளையவர்கள் குடும்பத்தினர் அனை வருமே, அடிகளாரின் அருகிருந்து பணிபுரிவாராயினர். இரத்தினவேற் பிள்ளை, இராஜேஸ்வரம் பிள்ளை, தனபாக்கியம் அம்மையார், சுவாமிநாத முதலியார், ராஜேஸ்வரி அம்மையார், ஆசிரியை பட்டம்மையார் ஆகியவர்கள் அண்மையிலேயேயிருந்துபுரிந்ததொண்டு மறக்கற் பாலதன்று.

அடிகளாரின் உடல்நிலை சிறிது சிறிதாகக் குண முற்று வந்தது. டாக்டர் கூறிய அளவுப்படி இராஜேஸ்வரி அம்மையார் ஒவ்வொரு வேளையும் மருந்து கொடுத்துவந்தனர். ஓர் இரவு மருந்து கொடுக் கப்படவில்லை. மறுநாள் காலை அடிகளார், அம்மை யாரைநோக்கிக் கேட்டனர். அதற்கு அம்மையார், "இரவு அடிகளார் குறட்டைவிட்டு நித்திரை செய்து கொண்டிருந்தமையால் அதனைக் கலைக்க ஒண்ணாதென எண்ணிச் சென்றுவிட்டேன்" எனக் கூறினர். அதனைக் கேட்ட அடிகளார் நகைச்சுவை தோன்ற, "நான் குறட்டின்மீது தானே நித்திரை செய்து கொண்டிருந்தேன். குறட்டைவிட்டு எப்படி நித்திரை செய்யமுடியும்" எனக் கேட்டனர். இச்சிலேடை மொழி அம்மையாருக்கு மிக்க மகிழ்வூட்டியது. அதனைக் கேட்டு அனைவருமே மகிழ்ச்சியுற்றனர்.

முருகப்பெருமான் திருவருள் முன்னின்றதால் விரைவில் குணம் ஏற்பட்டது. அடிகளார் படுத்த படுக்கையாக விருந்த காலத்தும் மாணவர்கட்குப் பாடம் போதிக்கும் பணியைக் கைவிட்டிலர். அது அவர்கட்கு ஆறுதலளிப்பதாகவும் இருந்தது.

## 32. சென்னை அறிஞர்கள் வேட்கை

அடிகளார், சென்னை - மயிலாப்பூரில் சிலநாள் வைகியிருந்தனர். அதுகாலை, அடிகளார் சொற்பொழி வாற்றிய சிறப்பினை, சென்னையில் வெளிவந்த 'திரு விளக்கு' என்னும் மாத வெளியீடு (1939 ஜுன் பிரமாதி-வைகாசி) பின்வரும் கட்டுரையை வெளி யிட்டுள்ளது.

### சென்னையில் ஞானியார் சுவாமிகள்

திருக்கோவலூர் ஆதீனம் - திருப்பாதிரிப்புலியூர், மடாலயத் தலைவர், உயர் திருவாளர், ஞானியார் சுவாமிகள் சென்னையை யடுத்த கோலூர் சிவாலயத் தில் நடைபெற்ற திருவிழாவை முன்னிட்டுச் சென்ற திங்கள் இறுதியில் அவண் போந்து, பத்து நாட்கள் கேட்பவர் செவியும் உள்ளமும் மகிழச் சொற்பொழி வாற்றினார்.

பல அன்பர்கள் வேண்டுகோளுக்கிணங்கி, அவர் இப்போது மயிலாப்பூரில் வந்திருப்பதாக அறிகிறோம். பல ஆண்டுகளாகப் போதிய உணவும், உரமும் இல்லா மையால் சென்னைத் தமிழர்கள் உள்ளத்தில் வாடிக் கிடந்த தமிழ்ப்பயிர் ஞானியார் அவர்களின் சொன் மாரியினால் மீண்டும் தழைத்தோங்குமென்று நம்பு கிறோம். ஆம், சைவப்பயிர் என்றது வேண்டுமென்றே தான் தமிழ்ப்பயிர் என்று சொன்னோம். ஞானியார் ஒரு சைவமடத் தலைவராயிருந்தபோதிலும் அவ ருடைய சொற்பொழிவுகளில் சமயப் பகைமை காண் பது அரிது. அவருடைய பேருரைகள் எல்லாச் சமயி களும் உவந்து கேட்கக் கூடியதாயிருக்கும். சுருங்கச் சொன்னால் அவைகளில் தமிழ் மணமே மிகுந்துகமழும்.

ஞானியார் காலத்திலேயே உயிர்வாழ்ந்திருக்கும் பேறுபெற்ற நாம், அவருடைய சொற்பொழிவுகளைக் கேட்காமல் அசட்டையாயிருந்தால், அது நம் வாழ்க்கையில் பயன்படுத்திக்கொள்ளாமல் இழந்துவிட்ட சிறந்த தருணங்களில் ஒன்றாகும். பின்னால் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டி வரும்.

ஞானியார் சுவாமிகள் தமிழ்நாட்டுக்குக் கிடைத்தற்கரிய ஒரு பெரும் பொக்கிஷமாகும். அதைப் போற்றி வளர்த்துப் பயன்படுத்திக்கொள்வது தமிழர் கடமை. "என்னால் அறியாப் பதம் தந்தாய், யான் அது அறியாதே கெட்டேன்" என்று பிறகு வருத்தப் படுவதில் பயனில்லை.

## 33. பொன் விழா நிகழ்ச்சி

ஞானியார் மடாலயத் தலைமையை அடிகளார் ஏற்று ஆசாரிய பீடத்தில் எழுந்தருளி, ஐம்பது ஆண்டுகள் ஆயின. அதனை அன்பர் பலர் அறிந்தனர். மாணவர்கள் மகிழ்ச்சி மீதூர ஒன்று கூடினர். பொன் விழாக் கொண்டாட்டக் குழு ஒன்று நிறுவினர். நாட்டாண்மைக் கழகத் தலைவர் திரு. கே. சீதாராம ரெட்டியாரவர்கள் அக்குழுவிற்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். டாக்டர் பு. வே. தேவராஜ முதலியார், கிழக்கு மருதூர், நிலக்கிழார், திரு. கி. நாராயணசாமி நாயுடு முதலியோர் உறுப்பினர்களாக அமைந்தனர். தினசரித் தாள்கள் பலவற்றினும் நிகழ்ச்சி முறை வெளியாயின.

1939-ஆம் ஆண்டு, நவம்பர் 18, 19, தேதிகளில், புலிசை ஞானியார் மடாலயத்தில் விழா கொண்டாடப்

பெற்றது. முதல்நாள் காலை அடிகளார் நீராடிப் பூசை முடித்துக்கொண்டு, வண்டிப்பாளையம் சென்றனர். அங்குள்ள சற்குரு சமாதிகளை வழிபாடு செய்து கொண்டு, மடாலயத்திற்கு எழுந்தருளினார்கள். மடாலயத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ வல்லீ தேவசேனா சமேத ஸ்ரீ சிவசுப்பிரமணியப் பெருமானுக்கு அடிகளார் தமது திருக்கரத்தினாலேயே அபிடேக ஆராதனை முதலியவற்றைச் செய்து முடித்தனர்.

மாணவர்களின் வேண்டுகோட்கிணங்கி அடிகளார் ஒரு பீடத்தில் எழுந்தருளியிருந்தனர். திரு. உருத்திரசாமி ஐயரவர்களை முன்னிட்ட மாணவர்கள் பலரும், அடிகளாரைக் கடவுளாகவே பாவித்து அபிடேக ஆராதனை முதலியன செய்வித்தனர். அது காலை மாணவர்கள், 'சீதக்களப' எனத் தொடங்கும் விநாயகர் அகவலும், திருமுருகாற்றுப்படையும் பாராயணஞ் செய்தனர். அடிகளார், அனைவருக்கும் திருநீறு நல்கினர். 'முருகன் திருவிளையாடல்' என்ற பொருள் பற்றி அடிகளார் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர். முருகனை வழிபாடு செய்வதற்கு, 'திருமுருகாற்றுப் படை' சிறந்த நூல் என்பதனை மக்கள் அனைவரும் எளிதின் உணருமாறு தெளிவாக விளக்கிக்காட்டினர்.

விழாக் கூட்டம் மாலையில் கூடியது. திரு. கே. சீதாராம ரெட்டியார் முன்மொழிய, திரு. டி. ஆர். சக்ரபாணி ஐயங்காரவர்கள் பின்மொழிய, திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் வழிமொழிய திரு. டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினர்.

தலைவரவர்கள் முதன்முதல் திருநெல்வேலியில் அடிகளாரின் சொற்பொழிவைக் கேட்டது முதலாக, அடிகளாரின் நாவன்மை, கல்வித்திறன், ஒழுக்கம் முதலியவற்றைக் கவர்ச்சி மிக்க நடையில் எடுத்து விளக்கினர். பல கழகங்கள் அனுப்பிய பாராட்டுரைகளும், மாணவர்கள் எழுதிய வாழ்த்துரைகளும் வாசித்து அளிக்கப்பெற்றன. பல பேரறிஞர்கள் சொற்பொழி வாற்றினர்.

திருவிடைமருதூர் தேவார பாடசாலை ஆசிரியரும், அடிகளாரின் மாணவருமான மு. நடராஜ தேசிகரவர்கள் இடையிடையே அனைவர் மனமும் கசிந்துருக திருமுறைப்பாக்களை ஓதினர்.

ஆதி குருமூர்த்திகளின் மாணவரான அவிநாசிநாத சுவாமிகள் இயற்றிய நெஞ்சு விடுதூது முதலிய நூல்கள் அடங்கிய, 'தோத்திரக் கொத்து' என்னும் நூலும், அடிகளாரின் மாணவியாரான திரு. க. ர. ஆதிலட்சுமி அம்மையாரவர்கள் அடிகளாரிடம் பாடங் கேட்டுக் குறிப்புகளாக வைத்திருந்த, 'கந்தரனுபூதி' எனும் நூல் உரையுடனும், அச்சிட்டு அனைவருக்கும் வழங்கப்பெற்றன. இரவு ஆலயத்திற்குத் தொண்டர் குழாங்களுடன் அனைவரும் சென்று வழிபாடு செய்து வந்தனர்.

மறுநாள் காலை திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை தலைமையில் அவை கூடியது. சில புலவர்களும், மாணவர்களும் வணக்கப் பாடலை வாசித்து அளித்தனர். பின்னர் பண்டிதர் திரு. மு. கதிரேசன் செட்டியாரவர்கள் தலைமை தாங்கினர். சேலம் காலேஜ் தமிழ் விரிவுரையாளர், திரு. ஆந்திரக்காசியப திம்மப்ப

அந்தணரவர்கள், அடிகளார் மீது இயற்றிக் கொண்டு வந்திருந்த, 'ஆசாற்றுப்படை' என்னும் நூலை அரங்கேற்றினர். அதில் அடிகளாரின் நற்பண்புகள் பல பாராட்டப் பெற்றிருந்தன.

மாலை திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் தலைமையில் மகாநாடு கூடியது. திருவாளர்களான ந. மு. வேங்கடசாமி நாட்டார், ச. சச்சிதானந்தம் பிள்ளை முதலிய பேரறிஞர்கள் சொற்பொழிவாற்றினர்.

தலைவரவர்கள் அடிகளாரைப் பற்றி விதந்து ஓதினர். அடிகளார் அனைவருக்கும் வாழ்த்துக்கூறினர். சைவம், தமிழ் ஆகியவற்றை வளர்க்கத் தொண்டு புரிந்து வரும், சில மாத வெளியீட்டுத் தாள்களுக்கு நன்கொடைகள் அனுப்பிவைக்கப் பெற்றன.

மழை மிகுதியாக இருந்தமையால் இரயில் பாதை பழுதுபட்டு, போக்கு வரவு இன்றி இருந்தது. அதனால் பல அன்பர்கள் விழாவிற்கு வந்து அதிற் கலந்து கொள்ள முடியவில்லை. அவ்வாறு வரக்கூடாமையை அறிவித்துத் திருவாளர்களான, ஸர். பி. டி. ராஜன், த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, ஈ. வே. இராமசாமி நாயக்கர், டி. எம். நாராயணசாமி பிள்ளை, யாழ்ப்பாணம்நடேசப் பிள்ளை முதலிய அன்பர்களின் தந்திகளும், கடிதங்களும் படிக்கப்பெற்றன.

இப்பொன் விழாவேயன்றி வைர விழாவும் அடிகளார் கண்டு களிக்க இறைவன் திருவருள் பாலிக்க வேண்டுமெனப் போற்றாத புலவர்களில்லை. அவைகள் மிகுதியும் செய்யுள் வடிவமாகவுள்ளனவாதலால்

அவற்றைவிட்டு, உரை நடையில் சில பத்திரிகைகளில் வெளிவந்துள்ள இரண்டு மூன்று வாழ்த்துரைகளை எடுத்துக்காட்டாக ஈங்குத் தருகிறோம்.

## 34. திரு. வி. க.

ஆசிரியர் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்களின் பாராட்டு உரை.

(திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புக்கள். பக்கம் 169—173)

ஞானியார் சுவாமிகள்

ஞானியார் சுவாமிகளின் முழுப்பெயர் "சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்" என்பது. சுவாமிகள் திருக்கோவலூர் ஆதீனம் ஞானியார் மடத்தின் தலைவராயிருந்தவர். அம்மடத்தின் கிளையாயுள்ள திருப்பாதிரிப் புலியூர் அறப்பள்ளியே சுவாமிகளின் உறைவிடமாகவுள்ளது.

தமிழ்நாட்டில் எத்துணையோ மடங்கள் உள்ளன. அவை என்னை ஈர்த்தனவோ? இல்லை. அம் மடங்களுள் ஒன்றாகிய ஞானியார் மடம் மட்டும் என்னை ஈர்க்குமோ? பின்னை என்னை ஈர்த்தது எது? ஞானியார் சுவாமிகளின் பரந்த கலையொளி.

ஞானியார் சுவாமிகள் தென்மொழியில் பெரும் புலமை வாய்ந்தவர்; வடமொழியில் புலமையுடையவர். சுவாமிகட்கு ஆங்கிலமும் தெரியும். இவை எல்லாவற்றிற்கும் மேலாகச் சுவாமிகளிடத்தில் இயற்கைப் புலமை அமைந்திருந்தது.

சுவாமிகளை யான் முதல் முதல் 1913-ம் ஆண்டிலே வேலூரிலே சைவ சித்தாந்த மகா சமாஜ ஆண்டு விழா மேடையிலே கண்டேன். அந்நாள் நன்னாள்.

ஆறுமுக நாவலரை யான் கண்டதில்லை. அவரது நாவன்மையைப் பிறர் சொல்லக் கேட்டிருக்கிறேன். இளமையில் யான் கண்ட நாவலர் கதிரைவேற் பிள்ளையே. ஞானியார் சுவாமிகள் பேச்சைக் கேட்ட பின்னைத் தமிழ்நாட்டில் மற்றுமொரு நாவலர் இருத்தலைக் கண்டேன். தமிழ்நாட்டிலும் கிளாட்ஸன்கள் சுரேந்திரர்கள் இருக்கிறார்கள் என்று என் நெஞ்சம் எண்ணியது.

ஞானியார் சுவாமிகள் அறப்பள்ளித் தலைமையேற்று அரை நூற்றாண்டு ஆயபோது, அப்பள்ளிச் சார்பில் பொன் விழா (1939) கொண்டாடப்பட்டது. அவ்விழா மலரில் என் சிறு மொழியும் இடம்பெற்றது அம்மொழியில் இரண்டொரு பகுதியை அகழ்ந்து ஈண்டுத் தருகிறேன். அஃது ஈண்டைக்குப் பொருத்தமாகும்.

.......முருகன் சேவடி வருடி யுருகும் ஈரநெஞ்சும், அவன் புகழ் பேசி இனிக்கும் நன்னாவும், தண்மை பொழியும் செவ்விய நோக்கும், வெண்ணீறு துதையும் நெற்றியும், மாணிக்கக் குழை பிறங்குஞ் செவியும் பொன்னொளிரும் மணிமார்பும், கருமைக் கதிர் விரிக்குந் திருமேனியும், 'சண்முகா - சண்முகா' என்று நீறளிக்கும் நீண்ட கையுங்கொண்ட அடிகளின் திருவோலக்கப் பொலிவு, என்னுள்ளத்தில் ஓவிய

மெனப் படிந்து நிற்கிறது. அஃது எவர் உள்ளத்தை யுங் கவரும் : எவர்க்கும் எளிதில் இன்பூட்டும்.......

........ஞானியார் சுவாமிகள் மாணுக்கருக்குப் பாடஞ் சொல்லும்போதும், சொற்பொழிவு நிகழ்த் தும்போதும் தொல்காப்பியனுராகவும், நக்கீரராகவும், திருவள்ளுவராகவும், இளங்கோ அடிகளாகவும், கச்சியப்பராகவும், கம்பராகவும், சேக்கிழாராகவும், வியாசராகவும், நீலகண்டராகவும், சிவஞான முனிவ ராகவும், பிறராகவும் முறை முறையே விளங்கி விளங்கி இலக்கிய இலக்கணச் சாத்திர நுட்பங்களை வெளியிடுவதைக் கேட்டுக் கேட்டுப் புலவரானவர் பலர். பழம் புலவர் பலரும் ஞானியார் ஒருவரிடம் விளங்குதல் வியப்பன்றோ ?........

....சுவாமிகளின் பேச்சுத்திறனை எதற்கு ஒப்பிடு வது ? கடல் மடைத்திறப்புக்கா - வெண்கலக்கோட் டையில் அரசுவா புகுதலுக்கா - பெரும்புயலுக்கா — ஓயாமழைக்கா ? எதற்கு - எதற்கு ஒப்பிடுவது ? பலர் பலவாறு கூறுப.

திருப்பாதிரிப்புலியூரில் வீற்றிருந்து அடியவர்க் கருள்புரியும் கோவலடிகள் கருமை பூத்த ஒரு பொறுமை மலை. அம்மலையினுச்சியில் - மூளையில் - கலைமேகங்கள் பொழிந்த அறிவு மழைநீர், தேங்கித் தேங்கிப் புரண்டு திரண்டு பன்முகங்கொண்டெழுந்து முட்டி முடுகி, வாயின் வழியே முழங்கி விரைந்து இடையீடில்லாச் சொற்றொடர் அருவியாக இழிந்து, பலதிறச் சுவை நுட்பப் பொருள்கள் மிதந்து சுழல, அன்பு வெள்ளப் பெருக்காய்ப் பரவிப் பரந்து, அருள் அலைகொழித்துக் கொழித்து ஓடும். நீர் பருகப் போந்த

புலி, கரடி, யானை, மான், பசு முதலியன அருவி முழக்கிலெழும் இன்னொலி கேட்டு, அதில் ஈடுபட்டுத் தன் தன் பகைமை மறந்து மயங்கி நிற்கும். கரை நீராடுவோர் வெள்ளத்திலுறும் மின் விசையால் பிணி நீங்கப்பெறுவர். ஞானியார் சுவாமிகள் பேச்சால் விளைந்த நலன் அளப்பரிது.........

சுவாமிகள் முதன்முறை தென்னாடு நோக்கிய போதும், சென்னை போந்தபோதும் என் பத்திரிகைகள் முன்னணி வேலைகள் செய்தன. அடிகள் தென்னாடு சென்றபோது, 'தேசபக்தன்' தொண்டாற்றினான். சென்னை சேர்ந்தபோது, 'நவசக்தி' பணி செய்தாள்.

தமிழ்நாட்டிலே பல விடங்களிலே பலதிற விழாக்கள் ஞானியார் தலைமையிலே நடைபெறும். அவ்விழாக்களில் என் ஒலிபெறுதன மிகச் சிலவாயிருக்கும். சுவாமிகள் தலைமையில் யான் பேசிய பொருள் வகைகள் பல திறம். அவைகளையெல்லாம் சுவாமிகளின் முடிவுரை அணி செய்யும்.

ஞானியார் இலௌகிகத்தில் வல்லவராம். ஆனால் சுவாமிகள் என்னிடம் இலௌகிகம் பேசியதே இல்லை. பெரிதும் பொதுக் காரியங்களைப் பற்றியே பேசுவர். சென்னை, இராயப்பேட்டை, ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபைக்கு இரண்டாம் முறை சுவாமிகள் எழுந்தருளியபோது, சுவாமிகளும் யானும் ஓய்வாக உரையாடிக்கொண்டிருந்தோம். அப்பொழுது சுவாமிகள். 'நீங்கள் ஏன் செல்வரை அருவருக்கிறீர்' என்று கேட்டார். 'யான் செல்வரை அருவருப்பதில்லை; ஓரேயிடம் செல்வம் திரள்வதை அருவருக்கிறேன்;

செல்வரிடம் பொருளுக்குச் செல்வதில் எனக்கு அருவருப்புண்டு' என்றேன்.

யான் இளமை தொட்டு ஞானியார் சுவாமிகளை வணங்கி வந்தேன். ஒருவரை ஒருவர் வணங்குதல் கூடாதென்று சிலர் பேசுவர். அவருள் ஒருவர், 'நீங்கள் ஏன் ஞானியாரை மட்டும் வணங்குகிறீர்" என்று கேட்டார். அதற்கு, ஞானியாரை வணங்கும் பழக்கம் எனக்கு இன்று ஏற்பட்டதன்று. அஃது ஏற்பட்டு நீண்ட காலமாயிற்று. அதை வலிந்து நிறுத்தப் புகுவது ஆணவமாகும் என்று பதிலிறுத்தேன்.

ஞானியார் சுவாமிகள் முதல் ஆண்டு விழா கடந்த (1942) தைப்பூசத்தில் இரண்டு நாள் நடைபெற்றது. முதல்நாள் சுவாமிகளின் படத்திறப்பு என்னால் நிகழ்த்தப்பட்டது. இரண்டாம் நாளும் யான் பேசுதல் நேர்ந்தது. அப்பொழுது ஓரிடத்தில், 'யான் ஒருவரை வணங்கிவந்தேன். அவரும் மறைந்தார்....." என்று குறிப்பிட்டேன்.

ஞானியாரின் மடத்தலைமையும், சிவிகையூர்தலும், இன்ன பிறவும் சுவாமிகளை வெளியூர் செல்லாதவாறு தகைந்து வந்தன. அவைகள் சுவாமிகளைச் சிறைப் படுத்தின என்றே சொல்வேன். இலங்கை, மலேயா, தென்னாப்பிரிக்கா முதலிய நாடுகள் சுவாமிகளின் தமிழைப் பருக எவ்வளவு விழைந்தன என்பதை யான் அறிவேன்.

1941-ஆம் ஆண்டு அன்பர் இராமசாமி நாயுடு என்பவர் தென்னாப்பிரிக்காவினின்றுஞ் சென்னை போந்தனர். அவர் சுவாமிகளையும் என்னையும் தென்

ஞுப்பிரிக்காவுக்கு அழைத்துச் செல்ல விரும்பினர். சுவாமிகளைக் காண நாயுடுவும் யானும் காஞ்சி சென்றோம்: சுவாமிகளைக் கண்டோம். நாயுடு சுவாமிகளிடம் தமது கருத்தைத் தெரிவித்தனர். ‘எனக்குள்ள தடைகளை முதலியார் சொல்வர்’ என்ற பதில் சுவாமிகளிடத்திருந்து நகைப்புடன் பிறந்தது. காஞ்சியில் கண்ட அந்நகைமுகக்காட்சியே இறுதியாயிற்று.

## 35. சித்தாந்தம்

சென்னை, டிப்டி கலெக்டர், ராவ் சாகிப் திரு. கே. கோதண்டபாணி பிள்ளையவர்கள் எழுதிய கட்டுரை.

### ஞானியார்

இச்சிறு சொற் பெரும் பொருட்பெயர் தாங்கிய அடிகளைத் தமிழ்நாடு நன்குணரும். இவர் இயற்றும் தமிழ்த் தொண்டினைப் போற்றுவோர் பலர். இவர் புலமையைப் புகழும் புலவர் பலர். இவர் நல்லுரை கேட்டு நலமுறுவார் பலர். சிறிதேனும் இப்பெரியார் பாற்கண்டன சில எழுதலுற்றேன்.

மெய்யன்பர்களே! இச்சிற்றுரையை நீங்கள் உணரத்தொடங்குமுன் உங்களை ஒன்று வினவ விரும்புகின்றேன். இச்சிற்றுரையின் தலைப்பையே வினவாக்கிக் கொள்வீர்களாக. ஞானி-யார்? இக்காலத்தில் நம் நாட்டில் ஞானம் உடையவர் யார்? யார் உளர்? வீடு பயக்கும் உணர்வினையுடையார் அல்லது தருவார் யார், யார் உளர்? அன்பு நெறியிலும், அறிவு நெறியிலும் திளைப்பவர் யாவருளர்? எங்கெங்குத் தேடினும் அடிகளன்றி யாருளர் காண்பாம். “சான்ற

கொள்கைச் சாயா யாக்கை ஆன்றடங்கறிஞர்" அடிகளன்றி யாருளர். தேர்ந்து அறிந்து தெரிவிப்பீராக.

ஞானியார் பெருமான் என்பார் யாவர். எத்தகையர் என நேரே காணுமாறு நெடுநாள் அவாவி ஒருநாட் கண்டேன். காட்சியளவில் இவர்தம் வடிவும், அழகும் மனத்தைக் கவர்ந்தன. சிறிதே சிவந்து நிமிர்ந்த உருவம். துவராடை உடுத்த துகள்தீர் மேனி. பருமையும் மெலிவுமின்றிப் பாங்குற அமைந்த உடல். விரிந்த கொள்கையின் பரந்த நெற்றி, ஆழ்ந்த நோக்குடன் அன்பொழுகு கண்கள். நேர் நிமிர்ந்து முனை வளையாக் கூர் அறிவு காட்டும் கூரிய மூக்கு. தமிழ்ப் புலமை பூக்கும் தனிவாய். தெய்வ ஒளிவீசும் திருமுகம். இவர் முகத்தோற்றத்தை உற்று நோக்குக. அதில் தோற்றுவது யாது? சங்கத் தமிழின் திங்களிப் போ! சிந்தை சேர்ந்த சிவத்தொளியோ! அன்பு பழுத்த அகத்தெளிவோ! அறிவு பழுத்து அமை வளமோ! தமிழின் பழுத்த தனியழகோ! யாதெனப் புகல்வது. இவை யாவுந் திரண்டெழுந்த "ஞானத்தின் திருஉருவோ" நம் எதிரே தோன்றுவது? கண்டன யாவையும் வாரி வாரி உண்டன கண்கள். கொண்டன களிப்பு.

இந்நிலையிலும் ஓர் ஐயம் நிகழ்ந்தது. ஐயநிகழ்ச்சி அறிவிற்கியல்போ! அல்லால் கல்வியின் குறைவோ! அஃது யாதாயினும் ஆகுக. எழுத உரிய வடிவும் அழகும் இயற்கையிற் பெற்ற இவர் காதில் அசைந்தது குண்டலம். கழுத்திற் றவழ்ந்தது கண்டிகைத்தாவடம். இவர் புதுமையை அறவே நீக்கிப் பழமையிற் பழுத்த பழையர் போலும்! இவர்பால் புதியன புகுந்தார்

போற்றும் உரையும் செயலும் காண்பது எங்ஙனம் என ஐயுற்றேன். ஐயந்தெளியுமாறு தேடி நின்றேன். சிறிது பொழுதில் இப்பெருமான் ஒரு சொற்பொழி வாற்றுவர் எனக்கூறினர் சிலர். அடிகளின் சொல் லுரை கேட்டுத் துணிதலே நலம் எனத் துணிந்திருந் தேன்.

சொல்மழை தொடங்கிற்று. முதுநீர் நிலையிற் புதுநீர் சேர்ந்தது. புரண்டெழுந்தது வெள்ளம். அன்பு நெறியை அளாவிற்று. அறிவு நெறியும் புக்கது. அலை கள் சுமந்தன அறிவும் செறிவும். கலையின் நிறைவு நுரையின் மிதந்தது. சுவையும் கனிவும் சுழித்திழுத் தன. வெள்ளத்துள் ஆழ்ந்தேன். யாண்டொளித் ததோ என் ஐயம்! என்னை மறந்தேன். மிதந்தேன். இறுதியில் தன் நினைவு சிறிது முளைத்தது. என்னுட னிருந்தார் எண்ணிலார், என்னுயினரெனா உற்று நோக்கினேன். என்னிலும் மிதந்தனர் ஏனையோர். என்னே சொல்வன்மை! என்னே சொல் வளம்! தூற்றவே வந்தோர் தாமே தொழுதனர் அன்பரானுர்.

என்ன புண்ணியஞ் செய்தனர் இவரிடம் கற்கும் இளஞ்சிறூர்! ஒருநாள் இச்சிறுவர்களைச் சோதிக்க நேர்ந்தது. என்னே இவர் தம் கல்வியின் தெளிவும், தேர்ச்சியும்! மாணவர் மாற்றம் காட்டும் மருவிய ஆசான் மாட்சி. அடிகள் வெகுளாது விரையாது ஐயந்திர அறிவுக்கேற்ப உள்ளத்தூன்ற உரைத்து உரைத்துப் பால்மணம் மாறுப் பாலர் தமையும் பாவல ராக்கினர். இந்நல்லாசிரியர் சொல் நல்லுரை கேட்கின் புல்லும் புகலும் இலக்கணம். கல்லும் சொல்லும்

கவி. இப்பேராசிரியர் பாற் கற்றபின் மற்றொருவர் வாய் கேட்க நூலுளதோ ? மனமுளதோ ?

நாட்டின் நலத்தால் நல்லோர் தோன்றுவர். அடிகளின் நாடெது ? அதன் நலம் யாது ? அவர் நாடு நடு நாடென்ப. "நடு நாடு" என்பது ஏனைய நாட்டின் இடையுள நாடு என்பர். இப்பொருள் சிறந்த தொன்றன்று. "நடு" எனும் சொல் ஈண்டு வினைத் தொகை. சைவத்தையும் தமிழையும் நட்ட (நிலை நாட்டிய) நாடு. அடிகள் இவற்றை இன்று நடுகின்ற நாடு. இனி நடும் நாடுமாம். அன்பு நெறியிற் சென்றார் இருவர் (அப்பர், சுந்தரர்) இங்குத் தோன்றினர். அறிவு நெறியிற் சென்றார் இருவர் (மெய்கண்டார், அருணந்திசிவாசாரியார்) இங்கு உதித்தனர். அந்நால் வரும் ஒருவராகி, ஞானியார் பெயரே பூண்டு, நலந்தர இங்குத் தோன்றியுள்ளார். அந்நால்வரிற் பின்னுள இருவர் அடிகள் பெயரினும் புகுந்தனர். அடிகள் பெயரினைச் சிறிது கருதுவீர்களாக. "மெய்ஞ்ஞான சிவாசாரியார்" அடிகளுக்கும் அன்புநெறியினும் அறிவுநெறியில் அவா அதிகம் போலும்.

அன்று ஓர் அம்மை (திலகவதியார்) கெடிலக் கரையில் அழுது அழுது தந்தார் நம் ஆளுடையரசை இன்று அவ்வாற்றின் எதிர்கரை நின்று நந்தமிழன்னை யும் தவம் பல செய்து தந்தனள் ஒரு தனி இளங் குழவியை. இது தவவேடம் பூண்டு தனியரசு செய்யக் காண்மின்.

ஐயன்மீர், எளியேன் கூறியன புனைந்துரை எனச்சிறிதும் ஐயுறற்க. ஐயம் உளதெனின் நேரிற் செல்க. உண்மையை உணர்க. அடிகளின் பொன்

விழா அண்மைத்து. அடிகளைக் காணுதல் அரிதன்று. காணுதற்குரிய காலம் இடம் ஆதிய வரையறையில. யாவராயினும் கற்போர் உளரேல் அடிகள் கண்டுயி லும் கொள்ளார். அவருடன் பலநாட்பழகுதல் வேண்டாம். அடிகளை ஒருகாற் காணின், ஒருகால் அவருரைகேட்பின், " அன்பராகுநரன்றி மன்பதை யுலகில் மற்றையரிலரே. "

## 36. ஆனந்த விகடன்

' கல்கி ' ஆசிரியர், ரா. கிருஷ்ணமூர்த்தியவர்கள் வெளியிட்டது

### சைவ சித்தாந்தமும் ஞானியார் சுவாமிகளும்

சில நாளைக்கு முன்பு நான் ஒரு சைவசித்தாந்தி யின் பிரசங்கம் கேட்டேன், பிரசங்கி, சர்க்கார் உத்தி யோகம் பார்த்துப் பென்ஷன் வாங்கிக் கொண்டி ருக்கும் பெரியார். அவர்சைவ சித்தாந்தத்தின் அருமை பெருமைகளை விஸ்தாரமாக விவரித்தார். உலகத்தில் வேறு எந்த சமயமும் சைவசமயத்துக்கு ஈடாகாதென்று விவாதித்தார். கடைசியில் ஆவேசம் வந்தவரைப்போல், " ஆகா ! இப்பேர்ப்பட்ட சைவ சித்தாந்தத்தை அந்த அடால்ப் ஹிட்லருக்கு யாரும் எடுத்துப் போதிப்பாரில்லையே ? ஹிட்லர் மட்டும் சைவ சித்தாந்தத்தை அறிந்து கொண்டாராகுல் இப் பேர்ப்பட்ட விபரீதமான காரியங்களைச் செய்வாரா ? உலகத்தை யுத்தத்தில் ஆழ்த்துவாரா ? அந்தோ ! பரிதாபம் ! என்று கதறிஞர். இதைக்கேட்ட சபை யோரில் சிலர் கரகோஷம் செய்து ஆர்ப்பரித்தார்கள்.

ஆனால், எனக்குப் பக்கத்திலிருந்த ஒருவருக்கு மட்டும் பிரசங்கி சொன்னது பிடிக்கவில்லை யென்று தோன்றிற்று, " ஆமாம், ஆமாம்; ஹிட்லருக்குச் சைவ சித்தாந்தத்தைப் போதித்து விட்டால் ரொம்ப நல்லது தான். அவருடைய விரோதிகளை பீரங்கிவாயில் வைத்துச் சுடுவதற்குப் பதிலாகக் கழுவிலேற்றிக் கொன்று விடுவார்! செலவு குறைச்சல் " என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தார். (சம்பந்தர் சமணர்களைக் கழுவேற்றினார் என்ற கதையை நினைத்துக் கொண்டுதான் அவர் அப்படி முணுமுணுத்திருக்க வேண்டும்.)

எனக்கு அந்த சமயம் என்ன தோன்றிற்று என்பதையும் சொல்லி விடுகிறேன். " ஆகா! இந்த உலகத்திலே கடவுள் என்னென்ன அக்கிரமங்களை யெல்லாம் வைத்திருக்கிறார்? எப்பேர்ப்பட்ட மூர்க்கர்களையும் மூடாத்மாக்களையும் படைத்திருக்கிறார்? எவ்வளவு பாவங்களையும், தீமைகளையும் ஏற்படுத்தி யிருக்கிறார்? அந்தோ! அந்தக்கடவுளுக்கு மட்டும் சைவ சித்தாந்தத்தை யாராவது போதித்து விட்டால், இந்த மாதிரி அக்கிரமங்கள் எல்லாம் உலகில் நடக்குமா? ஐயோ! கடவுளுக்குச் சைவ சித்தாந்தத்தை புகட்டுவதற்காக இந்த சைவப் பிரசங்கியை உடனே கடவுள் பால் அனுப்பினால் எவ்வளவு நன்றாயிருக்கும்" என்று நான் எண்ணமிட்டுக்கொண்டிருந்தேன்.

விஷயம் என்னவென்றால், இந்த நாளில் நாமெல்லாரும் பிறருக்குப் போதனை செய்யவே தயாராயிருக்கிறோம். அந்த போதனையை நமது வாழ்க்கையில் கொண்டுவரத் தயாராயிருப்பதில்லை. மேற்படி சைவ

சித்தாந்தப் பிரசங்கியையே எடுத்துக்கொள்வோம். அவர் ஏன் சைவ சித்தாந்தத்தை ஹிட்லருக்குப் போதிக்க விரும்புகிறார்? நம் ஊரில் எத்தனையோபேர் சைவ சித்தாந்தத்தைக் கரைத்துக் குடித்துவிட்டிருக்கிறார்களே, அதன் பயன் என்ன? சைவ சித்தாந்தம் பிறந்த தமிழ்நாடு இன்று ஏன் அடிமை நாடாயிருக்கிறது? இங்கே ஏன் இவ்வளவு சாதி - மத - துவேஷங்கள் குடிகொண்டிருக்கின்றன? இந்நாட்டு ஜனங்கள் ஏன் அன்னிய பாஷை மோகத்தில் வீழ்ந்திருக்கிறார்கள்? இங்கே ஏன் இவ்வளவு வேஷதாரிகளும், வஞ்சகர்களும், தேசத் துரோகிகளும் இருக்கிறார்கள்? நம் ஊரில் நிலைமை இப்படி இருக்கும்போது, ஹிட்லருக்குச் சைவசித்தாந்தத்தைப் போதிக்க மேற்படி பிரசங்கியார் இவ்வளவு கவலைப்படுவானேன்? இருக்கிறது; காரணம் இருக்கிறது. அடால்ப் ஹிட்லர் ஒருவேளை ஜயித்து, அதனால் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கு கேடுவந்து, அதன் விளைவாகத் தம்முடைய பென்ஷனுக்கு ஆபத்து வந்துவிடப் போகிறதே என்று இந்தப் பிரசங்கிக்குக் கவலை! அந்தக் கவலையினால்தான் ஹிட்லருக்கே சைவ சித்தாந்தத்தைப் போதித்து விடலாமென்று அவர் ஆசைப்பட்டது! அதே காரணத்தினால்தான், சேம்பர்லினுக்கும் சர்ச்சிலுக்கும் அவர் சைவ சித்தாந்தத்தைப் போதிக்க ஆசைப்படவில்லை.

இம்மாதிரி எத்தனையோ சைவ சித்தாந்தப் பிரசங்கிகளை நாம் பார்த்திருக்கிறோம். அவர்கள் அன்பு மதமாகிய சைவ சித்தாந்தத்தைப்பற்றித் தேனொழுகப் பேசுவார்கள்.

" அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே "

என்ற திருமூலர் பாட்டைச் சொல்லி, " இம்மாதிரி அன்பே கடவுள் என்று போதிக்கும் மதம் உலகத்தில் உண்டோ?" என்று கேட்பார்கள். ஆனால் விபூதிக்குப் பதிலாக நாமத்தைப் போட்டுக்கொண்டு ஒருவர் வந்து விட்டால் அவரைச் சுண்ணாம்பு காளவாயில் போடுவதற்குத் தயாராயிருப்பார்கள் !

தமிழ் நாட்டுச் சைவ சித்தாந்த பிரசங்கிகளில் சிலர் இங்கிலீஷ் பாஷையையும் கரைகண்டவர்கள். ஸ்பென்ஸர், ஹக்ஸ்லி முதலிய மேனாட்டுத் தத்துவ சாஸ்திரிகள் கூறிய முடிவுகளெல்லாம் சைவ சித்தாந்தத்தில் பொதிந்து கிடப்பதை அவர்கள் கண்டு பிடித்துச் சொல்வார்கள். டார்வின் கொள்கையை எத்தனையோ காலத்திற்கு முன்பு சைவ சித்தாந்தம் ஸ்தாபித்துவிட்டது என்று நிரூபிப்பார்கள். ஆனால், தங்களுடைய உத்தியோகத்திற்கோ, சம்பளத்துக்கோ, பென்ஷனுக்கோ ஏதாவது ஆபத்து வருவதாயிருந்தால், அதற்குக் காரணமாயிருப்பவர்களை ஒரு தடவையல்ல ஏழு தடவை கழுவிலேற்றத் தயாராயிருப்பார்கள்.

இவ்வாறு சைவ சித்தாந்தப் பிரசங்கம் செய்பவர்களில் அநேகர், " சைவத்தின் உண்மையை அறிந்தவர்களுமல்ல. சைவத்தை வாழ்க்கையில் அனுஷ்டிப்பவர்களுமல்ல " என்பதைப் பார்க்கிறோம்.

வைஷ்ணவ சித்தாந்தப் பிரசங்கம் செய்கிறவர்களும் சைவ சித்தாந்திகளுக்குக் கொஞ்சமும் மேற்படி விஷயங்களில் சளைத்தவர்கள் அல்ல. சைவசித்தாந்திகளாவது மற்ற சித்தாந்தக்காரர்களைத்தான் சுண்ணாம்பு காளவாய்க்கு அனுப்புவார்கள். வைணவ சித்தாந்திகளோ தங்களுக்குள்ளேயே, வடகலையார் தென்கலையாரும், தென்கலையாரை வடகலையாரும் கழுவேற்றத் தயாராயிருப்பார்கள்.

இதெல்லாம் பொதுவாக நாம் பார்த்திருக்கும் விஷயங்கள். ஆனால், விதி விலக்காக சைவத்திலும் வைஷ்ணவத்திலும் சில பெரியார்கள் இருக்கிறார்கள். அவர்கள் உண்மையாகவே சமய தத்துவங்களை உணர்ந்தவர்கள். சமய வாழ்க்கை நடத்துபவர்கள். இப்படி விதிவிலக்காயுள்ள சமயப் பெரியார்களுக்குச் சிறந்த உதாரணமாக இன்று தமிழ் நாட்டில் ஒருவரைக் குறிப்பிட வேண்டுமானால் திருப்பாதிரிப் புலியூர் ஸ்ரீ ஞானியார் சுவாமிகளைத்தான் குறிப்பிட வேண்டும்.

ஸ்வாமிகளின் உருவத் தோற்றத்தைப் பார்த்ததுமே, "இதோ ஒரு பெரியார் இருக்கிறார்" என்னும் உணர்ச்சி நமக்கு உண்டாகும். அவருடைய வாய்மொழிகளைக் கேட்டு, அவருடைய வாழ்க்கை முறையையும் கவனித்தோமானால், அவருடைய பெருமை மேலும் மேலும் நமக்குப் புலனாகும். "அன்பே சிவமாய் அமர்ந்திருக்கும் பெரியார் இவரல்லவா" என்று எண்ணி எண்ணி வியப்போம்.

ஒவ்வொரு சமயமும் ஒரு தத்துவத்தை வெளியிடுகிறது; அத்துடன், ஒரு வாழ்க்கை முறையையும்

உபதேசிக்கிறது. உலகத்தின் சிருஷ்டி, மக்களின் வாழ்க்கை, கடவுளின் ஸ்வரூபம் இவற்றைக் குறித்துச் சொல்லும் பகுதி தத்துவப்பகுதி. சமய தத்துவத்துக்கிணங்க வாழ்க்கையை எப்படி நடத்த வேண்டுமென்று போதிப்பது அனுஷ்டானப்பகுதி. எல்லா சமயங்களிலும்போல் சைவ சமயத்திலும் இந்த இரண்டு பகுதி இருக்கின்றன. பசு, பதி, பாசம் (ஜீவாத்மா, பரமாத்மா, மாயை) என்னும் மூன்று அம்சங்களை சைவ சமயம் குறிப்பிட்டு, இவற்றுள் பதியிலிருந்து பசுவும் பாசமும் தோன்றிப் பதியிலே மறைகின்றன என்று சித்தாந்தப் படுத்துகிறது. இது சைவ சமயத்தின் தத்துவப்பகுதி. பசுவாகிய ஜீவன் தன்னையொத்த மற்ற ஜீவன்களிடத்திலெல்லாம் அன்பு செய்வதாலும், இறைவனை பக்தியினால் வழிபடுவதினாலும், அடியார்களுக்குத் தொண்டு செய்வதினாலும்; மாயை நீங்கிப் பதியை அடையலாம் என்று சைவ சமயம் போதிக்கிறது. இது அனுஷ்டானப் பகுதி.

மேலே நாம் பார்த்ததுபோல், சைவ சமயத்தின் தத்துவ ஆராய்ச்சியில் கரை கண்டவர்கள் தங்கள் வாழ்க்கையில் அச்சமய போதனையை அனுஷ்டிப்பதில்லை. சைவ வாழ்க்கை முறையைக் கைப்பற்றி ஒழுகும் பக்தர்களுக்கும் சைவ சமய தத்துவங்கள் தெரிந்திருப்பதில்லை. தத்துவமும் தெரிந்து வாழ்க்கையிலும் சைவர்களாயிருப்பவர்களுக்கு, அந்த உண்மைகளை சகலரும் அறிந்து கொள்ளும்படியாக எடுத்துச் சொல்வதற்கு வேண்டிய வாக்கு வன்மை இருப்பதில்லை. இந்த மூன்று விதமான பெருமைகளையும் உடையவர் ஸ்ரீ ஞானியார் சுவாமிகள். அவர் சைவ

சமயத்தின் தத்துவங்களை நன்கு அறிந்தவர் ; வாழ்க்கையில் அச்சமயபோதனைக் கிணங்கி நடப்பவர்; சைவ சமயத்தின் தத்துவங்களையும், போதனைகளையும் பற்றி அபார வாக்கு வன்மையுடன் பிரசங்கம் செய்யக் கூடியவர்.

“ சோனு மாரியாகப் பொழிவார் ” “ கடன் மடை திறந்தாற்போல் பேசுவார் ” என்பதெல்லாம் சுவாமிகள் விஷயத்தில் உபசார மொழிகள் அல்ல. ஐந்து வருஷத்துக்கு முன்பு அவர்கள் பட்டினத்தடிகளைப் பற்றிச் செய்த பிரசங்கத்தை நான் கேட்டேன். அதில் அவர் கூறியவிஷயங்கள் இன்னும் என்மனதை விட்டு அகலாமல் இருக்கின்றன. சில பேர் பிரசங்க மாரிபொழிவார்கள். அவர்கள் என்ன சொன்னார்கள் என்பது மட்டும் கேட்பவர்களுக்குத் தெரியாது. “ பெரியவர் அபாரமாய்ப் பேசினர் ; ஆனால், அவ்வளவு பெரிய விஷயங்கள் நமக்கெல்லாம் புரியுமா ?” என்று சொல்லிக் கொண்டு போவார்கள். ஆனால், சுவாமிகள் பேச்சு இப்படியல்ல, அவர்கள் பிரசங்கத்தைப் படித்தவர்களும் ரஸிப்பார்கள் ; பாமரர்களும் விஷயம் இன்னதென்று தெரிந்து கொள்வார்கள். மணி மணியாக, முத்து முத்தாக சுவாமிகள் வாயிலிருந்து வரும் வார்த்தைகள் நம் மனதில் என்றும் அழியாத வாறு பதிந்து விடும். எப்படிப்பட்ட சிக்கலான சமய உண்மையையும் சிக்கறுத்துச் சொல்வார்கள்.

“ உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின்
வாக்கினிலே ஒளி யுண்டாகும் ”

என்னும் கவியின் வாக்கை சுவாமிகள் சொற்பொழிவு கள் மெய்ப்படுத்தும்.

ஸ்ரீ ஞானியார் சுவாமிகள் திருப்பாதிரிப்புலியூர் மடாதிபதியாகி இந்த மாதத்தோடு ஐம்பது வருஷங் கள் பூர்த்தியாகின்றன. இந்த ஐம்பது வருஷகாலத்தில் சுவாமிகள் ஆயிரக்கணக்கான சமயப் பிரசங்கங்கள் செய்திருப்பார்கள். லட்சக்கணக்கான ஜனங்களுக்கு சைவ சமயத்தின் உண்மைகளை எடுத்துப் போதித் திருப்பார்கள். எவ்வளவோ பேருடைய வாழ்க்கை யைத் தமது உபதேசங்களால் புனிதப் படுத்தியிருப் பார்கள்.

சுவாமிகள் சமயப்பணி செய்வதுடன் தமிழ்ப் பணியும் செய்து வருகிறார்கள். எத்தனையோ பேருக் குத் தமிழ் அன்பையும், தமிழ் அறிவையும் ஊட்டி யிருக்கிறார்கள். அரசாங்க உதவியின்றி ஒரு தமிழ்க் கல்லூரியும் நடத்தி வருகிறார்கள்.

ஸ்வாமிகளின் தமிழன்பு, தமிழ்ச்சுவையின் அனு பவ உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டது. "தமிழ், பரமசிவன் அருளிய மொழி" என்பதற்காக மட்டும் அவர் தமிழைப் போற்றுகிறவர் அல்ல. இத் தகைய தமிழன்பர்களும் சிலர் இருக்கிறார்கள். பரம சிவன் அருளிய தமிழாயிருந்தாலும், அதில் வேறு தெய்வங்களைப் போற்றும் நூல்களை அவர்கள் மதிப்ப தில்லை, இராமாயணத்தின் கதாநாயகன் இராமன் என்பதற்காகவே அவர்கள் கம்பராமாயணத்தை "மட்டம்" என்று தள்ளிவிடுவார்கள். ஆபாசங்கள் நிறைந்த எட்டாந்தர ஸ்தலபுராணமானாலும், விஷ்ணு வைக் கொஞ்சம் மட்டந்தட்டி யிருந்தால் அதைத்

தலையில் தூக்கிவைத்துக் கொண்டு கூத்தாடுவார்கள். ஸ்ரீ ஞானியார் ஸ்வாமிகளின் ஆழ்ந்த தமிழன்பில் இத்தகைய குறுகிய சமயப் பற்று குறுக்கிடுவது கிடையாது. உண்மைக் கவிதைக்கும், வெறும் செய்யுளுக்கும் அவர்கள் நன்ருக வித்தியாசம் அறிந்தவர்கள். எதெதற்கு எந்த அளவில் மதிப்புக் கொடுக்க வேணுமோ, அவ்வளவுதான் கொடுப்பார்கள்.

இந்தியாவின் புராதனமான ஆதி சமயம் சைவ சமயம்; உபநிஷதங்கள் கூறும் வேதாந்த மதமும் சைவ சமயமும் ஒன்றேதான். வடநாட்டார் கோதுமையை ரொட்டி தட்டிச் சாப்பிடுகிறார்கள். தென்னிந்தியர்கள் சிலர் அதே கோதுமையைச் சமைத்துச் சாப்பிடுகிருர்கள். ஆனல் இரண்டும் கோதுமை தானல்லவா? இவ்வாறே வட இந்தியாவில் வேதாந்தமாகத்தழைத்த சமயந்தான், தென்னுட்டில் சைவமாக வளர்ந் தோங்கிற்று. ஸநாதன தர்மத்தின் இந்த இரண்டு பகுதிகளுக்கும் பொதுவான ஒரு சிறப்பு உண்டு. வேதாந்தமதம் எல்லாமதங்களையும் கடவுளை அடையும் வழிகளாக ஒப்புக் கொள்ளுகிறது; சைவ சமயமும் அவ்வாறே. புதிதாக உண்டான மதங்கள் தங்களுடைய பெருமையை நிலை நாட்டுவதற்காகப் பிறமதங்களுடன் சண்டையிடுவது அவசியமாயிருக்கலாம். அந்த அவசியம் ஆதிசமயங்களுக்கு இல்லையல்லவா? அண்ணன் தம்பிகள் பாகப்பிரிவினைக்காகச் சண்டை போட்டுக்கொள்வது இயற்கை; ஆனல், தகப்பனரே பிள்ளைகளுடன் பாகத்துக்குச் சண்டை போட்டால் அதைவிட மூடத்தனம் வேறென்ன இருக்கிறது? ஆகையினல் தான் வேதாந்தத்திலும்

9

சைவசமயத்திலும், "சர்வமத சம்மதம்" என்னும் அரிய கொள்கையை நாம் காண்கிறோம். ஆனால், சைவத்தின் இந்தத் தனிப் பெருமையைக் குலைக்க விரும்பும் சில சைவப் பெரியார்களும் இருக்கிறார்கள். மற்றுமதங்களைக் குறைத்துச் சொன்னால்தான் சைவத்தைப் பெருமைபடுத்தியதாகும் என்று இவர்கள் நினைக்கிறார்கள். ஸ்ரீஞானியார் சுவாமிகள் 'வீர சைவர்' ஆனபோதிலும்அத்தகைய வீரப்பிரதாபங்களை அவர்களிடம் காணமுடியாது. சர்வமதசமரஸ ஞான முடைய உண்மை ஞானியார் அவர்.

"வேதாந்த சித்தாந்தசமரச நன்னிலை பெற்ற
வித்தகச் சித்தர் கணத்"

தைச் சேர்ந்த பெரியார் என்றும் சொல்ல வேண்டும்

ஸ்ரீ ஞானியார் ஸ்வாமிகள் பட்டத்துக்கு வந்த ஐம்பதாவது வருஷ பூர்த்திக் கொண்டாட்டத்தைச் சென்ற 18 - 19உகளில் ஸ்வாமிகளின் சீடர்களும், தமிழன்பர்களும் சேர்ந்து சிறப்பாகக் கொண்டாடினார்கள். முறையே அறுபதாவது, எழுபதாவது, எண்பதாவது வருஷ பூர்த்திக் கொண்டாட்டங்களையும் நடத்துவதற்குத் தமிழ் மக்கள் கொடுத்து வைத்திருக்க வேண்டுமென்று விரும்புகிறேன். இறைவன் அருள்புரிய வேண்டும்.

## 37. முற்றுணர்வினர்

ஞானியார் மாணவர், வித்துவான் மு. இராசக்கண்ணனார் குறிப்புரை. சித்தாந்தம் பத்திரிகையில் வெளிவந்தது.

அறிவு இன்னது என அதற்கிலக்கணம் பலவாகப் பேசப்படுகிறது; அவற்றுள் ஒன்று வருவதை அறி

தலுமாம். ஆழ்ந்தகன்ற மதிநுட்ப முடையாருக்கே அச்செயல் ஆவதொன்ருகும். அறிவுருவ ஆண்டவனுக் கென்றுவகுத்தவற்றுள் ‘ முற்றுணர்வினனுதல் ’ என் பதும் ஒன்று என்பது ஈண்டு நினைவிற் பொதிந்து கொள்ளத் தக்கதாகும்.

வருங்கால உணர்வு மிகுந்து நிற்கும் பெருமை சிவத்திரு ஞானியாரடிகளுக்கே யுண்டு. பல நிகழ்ச்சி கள் இவ்வுண்மையை விளக்கிக் காட்டினும், ஒன்றி னைச் சுருக்கமாக அறிவிக்க முற்படுகின்றேன்.

திருவையாற்றுக் கல்லூரியும், அண்ணுமலைப் பல் கலைக் கழகமும் வித்துவான் தேர்வில் தேரும் எண்ண முடையாருக்கு நிலைக்களங்களாக விளங்குகின்றன. அடியேன் அடிகளார் திருமுன்னர் இருந்து கற்கத் தொடங்கிய நாள்தொட்டு அவர்கள் முன்னரிருந்து கற்றலைத் தவிரக் கல்லூரியில் சேர்ந்து படித்தலை விரும்பாதவனுனேன். நாளாக ஆக இவ்வெண்ணம் வளர்ந்ததேயன்றிக் குறைந்ததன்று.

வித்துவான் தேர்விற்குத் தனித்துச் (Private) செல்வோருக்கு ஆண்டுகள் இருபத்தைந்து நிறைந் திருத்தல் வேண்டும் என்பது சென்னை பல்கலைக் கழ கச் சட்டமாகும். முதற் றேர்வுக்குரியவற்றைக் கற்று முடிந்த காலத்தில் அடியேன் பதினெண் யாண்டுகளே நிறைந்திருந்தேன். முற்குறித்த சட்டப்படித் தேர் விற்குச் செல்லும் தகுதி வயதால் எனக்கில்லை. ஆயி னும், ஆண்டு குறைவினையுடையாரையும் பல்கலைக் கழகத்தார் விரும்பின் சட்டத்தைச் சிறிது தளர்த்தி (Exempt) தேர்விற்குச் செல்லுமாறு செய்யலாம் என்ற உண்மை அறியப்பட்டது.

அக்காலத்து அடியேனுடன் மற்றொரு மாணவி யாரும் அடிகளிடத்து தமிழ் கற்றுக்கொண்டிருந்த னர். அன்னார்க்கும் ஆண்டுத் தொல்லைகுறுக்கிட்டது. ஆதலின் நாங்கள் இருவரும் அவ்வைந்து வெண்பொற் காசுகளைச் செலுத்தித் தேர்விற்குரியவர்களாக ஆக்கப் படல் வேண்டும் என்று பல்கலைக் கழகத்தாரைக் கேட்டுக் கொண்டோம். 1934-ம் ஆண்டு செப்டம்பர் திங்களில் இது நடந்தது.

நவம்பர் மாதம் (ஐந்தாம் நாள் என்று நினைவு) காலை வழக்கம்போல் 9-30-மணியளவிற்கு மடாலயத் திற்குச் சென்றேன். முன்னருள்ள மண்டபத்தில் திரு. உருத்திரசாமி ஐயரவர்கள் இருந்தனர். என் னுடன் பயின்ற மாணவியாரும் அங்கிருந்தனர். என் னைக் கண்ட ஐயரவர்கள், 'உனக்கு வரவில்லை. இவர் களுக்கு வந்துவிட்டது' என்றனர். யான் ஒன்றும் அறியாதவளாய்ச் சிறிது எண்ணி நின்றேன். அந்த மாணவியார் தேர்விற்குச் செல்லலாம் என்று பல் கலைக் கழகத்தார் அனுப்பிய முடிவினை ஐயர் என் கையில் தந்தனர். உண்மை நன்கு விளங்கிற்று.

என்னை மறந்து சில விநாடிகள் நின்றேன். மிக்க ஆவலுடன் தேர்வுக்கென்று படித்துக்கொண்டிருந்த எனக்கு அச்செய்தி பெரியதோர் ஏமாற்றத்தைத் தந்தது. அடக்கமுடியாததோர் பெருஞ்சினம் பல்கலைக் கழகத்தார்மேல் பொங்கி எழுந்தது. எனக்குச் சபிக் கும் ஆற்றல் இருந்தால்......?

சினம் அடங்க வில்லை. உட்கட்டிலிருக்கும் அடி களாரைச் சென்று வணங்குவதையும் மறந்திருந்த நான் சிறிது நல்ல அறிவுவர உள்ளே விரைந்து சென்

றேன். தம்மை நோக்கி வந்த என் உள்ளத்தைத் தம் அறிவுக் கண் கொண்டு அடிகள் ஆழ்ந்து நோக்கினர். யான்பேச முடியாத நிலையினனாய் ' ஓ ' என்று கதறியழுதுவிட்டேன். என் துன்பத்தைக் கண்ட அடிகள், " இராஜா ! அழாதே அவர்களுடன் நீயும் தேர்வி லிருந்து எழுதலாம் " என்றனர்.

நீரால் அவிந்த நெருப்பென அடியேன் உள்ளக் கொதிப்பு உடனே ஆறியது. ஏன் ? அவ்வாண்டி லேயே அடிகள் எவ்வாறேனும் நம்மைத் தேர்விற்குச் செல்லும் வண்ணம் செய்வார்கள் என்றே பிள்ளை மதியால் பேதையேன் எண்ணினேன்.

1934-ம் ஆண்டு கடந்தது. 1935-ம் ஆண்டு சென்றது. 1936-ல் உயர்திரு. கா. நமச்சிவாயமுதலியாரவர் களைத் திருமடத்திற்கு அழைத்த அடிகளார், " இவ் விளைஞன் வித்துவான் தேர்விற்குத் தனித்துச் (Private) செல்ல விழைகின்றான். தங்கள் உதவி மிகுதியும் வேண்டற்பாலது " என்றனர். அவ்வளவே அவர் அடியேனைச் சென்னைக்கு அழைத்து வந்தனர். பலரிடம் சென்று வந்தனர்.

பின் தேர்விற்கு வெண்பொற் காசுகள் கட்டப் பட்டன. முற்குறித்த மாணவியாரும் அடியேனும் அவ்வியாண்டில் ஐயாற்றுக் கல்லூரிலேயே எழுத நேர்ந்தோம். ஒரே மண்டபத்தில் தேர்வினை எழுதி னேம் என்று மட்டும் குறிப்பதற்கில்லை. நூறுஅளவில் தேர்விற் கென்று ஆண்கள் இருந்த அம்மண்டபத் தில் அடியேனுக்கு ஆண்கள் இடையில் இருந்தெழுத வாய்ப்பில்லை. தனித்த இடங்களாக மூன்று குறிக்கப் பட அவற்றுள் நடுவில் அடியேன் இருந்தெழுத அடி

யேனுக்கு வலப்பக்கத்தே அம்மாணவியாரும் இருந்து எழுதுமாறு நேர்ந்தது !

இந்நிகழ்ச்சியை எண்ணும் போது அடிகளாரின் முற்றறிவின் பெருமையை எண்ணி வியத்தல் அல்லது வேறு என்ன செய்யக்கடவேன் !

## 38. நல்லாசிரியர்

'தமிழ் அணங்கு' பத்திரிகையில் திரு. ச. நடராஜன் (Superintendent, S. A. Co-operative Central Bank, Cuddalore) அவர்கள் எழுதி வெளியிட்டது.

மறைத்திரு ஞானியாரடிகளின் பெருமையை என்னவென்று ஆராய்வது இக்கட்டுரையின் கருத்தன்று. யாதுபற்றி எனின், அவரது நூலறிவும், நுண்ணுணர்வும், மெய்ஞ்ஞானமும் இன்னதன்மையன வெனஅளவிட்டறிந்தார் யாவரும் இலர். அங்ஙனமிருப்ப, ஒன்றுக்கும் பற்றாத எளியேன் போன்றொருவன் அவர் பெருமையை ஆராய முயல்வது, அந்தகனொருவன் இயற்கையின் வனப்பை யெல்லாம் ஆராயப்புகுவது போலாம். ஆயின். அவரது புனித வாழ்க்கையினின்று மக்கள் அனைவரும், கற்றாரும் மற்றாரும், கற்றுக்கொள்ள வேண்டிய படிப்பினைகள் யாவை என்பதை மட்டும் ஈண்டுக் கருதுவோம்.

ஞானியாரடிகளை நினைத்தவுடன் அவரது மலர்ந்த முகமும், அவரகத்திருந் தெழும் இனிய சொல்லும் நம்கண்முன் தோன்றுகின்றன. அடுக்கிய இடுக்கண் கோடி உற்று உள்ளம் வெதும்பி வாழ்க்கையில் மனச் சலிப்புற்ற ஒருவனும் அவரது திருமுன் சென்று

அவருள்ளத்திருந்து அன்பு பெருக்கெடுத்தூறும் கனி மொழியைக் கேட்பானாயின் அவன் நலிவு நீங்கிப் புத்துயிர் பெற்றுத் திரும்புவான் என்பதை அவரோடு ஒரு சிறிது கூடிப் பழகிய எவரும் அறிவர். எல்லா உயிர்கள் மேலும் எவன் கருணை பூண்டு ஒழுகுகின்றானே அவனே அந்தணன் எனத் தமிழ் மாமறை கூறும். கருணை, அருள் என்னும் பண்புகள் அன்பின் அடியாகப் பிறத்தலானும், அன்பெனப்படுவது. மனத்தின்கண் நிகழும் உவகையே யாதலானும். தன் மனத்தைச் செம்மைப் படுத்திக் கொள்ளாத ஒருவன் பிற வுயிர்கள்மேல் எங்ஙனம் கருணையோடிருத்தல் கூடும்? பிறர் ஆக்கங் கண்டவழி அவையெல்லாம் தனக்குக் கிட்டவில்லையே எனப் பொறாமை கொள்ளும் ஒருவனும், பிறர்க்குரியன கோடல் அறனன்று என்னும் நடுவு நிலைமையின்றி எல்லாந் தனக்கே வேண்டும் என்னும் மனக்கோட்டம் உடைய ஒருவனும், அயலான் ஒருவனைக் கண்டபோது அவனோடு பொய்ந்நகையாடி அவனிடத்து அன்புடையவன் போல் நடித்து, அவனைக் காணாதவழி இகழ்ந்துரையால் அழித்துச் சொல்லும் புன்மையனும், இயற்கையில் நமக்கமைந்த துன்பங்கள் போதாவென்று தன் மன மொழி மெய்களால் பகை வளர்த்தும், கலாம் விளைத்தும், வஞ்சனை சூழ்ந்தும், மனித வாழ்க்கையில் வெப்பத்தை உண்டுபண்ணும் எவனும் அந்தணனாயிருத்தல் கூடுமோ? எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் குணம் பற்றி எழுந்த அந்தணன் என்னுங் காரணப்பெயர் நாளடைவில் குணம் ஒழித்து. ஒரு குலம் பற்றி வழங்கிய இடுகுறிப் பெயராய் மாற

லாயிற்று. இவ்வாறு தனித் தமிழ் வழக்கின் பொருள் எல்லாம் என்று மங்கலாயிற்றே! அன்றே தமிழகத்தைத் தாழ்வு நெருங்கிப் பற்றலாயிற்று. இது நிற்க; காம, வெகுளி, மயக்கங்களாகிய உட்பகையை வென்று, நான் எனதென்னும் செருக்கற்று, பிறிதொன்றன் நோய் தன் நோய்போல் போற்றித் தலை சிறந்த ஒழுக்கத்தின்கண் நிற்கிறவன் எவனோ அவனே உள்ளத்தில் குளிர்ச்சி பெற்றவன். அவனே பிற உயிர்க்கும் குளிர்ச்சியை அளிப்பவன். அவனே அந்தணன். அத்தகைய அந்தணர் தொகை உலகெங்கும் பரவுதல் வேண்டும். அவரது உள்ளத்தினின்று பெருகும் குளிர்ச்சியே தற்போது ஏற்பட்டுள்ள கொதிப்பை ஆற்றி மன்பதையை உய்விக்கும். இத்தகைய தக்காரின் மிக்காராய்த் தலை சிறந்து விளங்கியவர் நம் ஞானியார் அடிகள் அன்றே!

"எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு"

என அறிவுக்கு விளக்கவுரை கூறினர் ஆசிரியர் திருவள்ளுவனார். அஃதாவது தான் கூறப்புகும் பொருள் எவ்வளவு கடினமாயிருப்பினும் அதைக் கல்லாதாரும் அறிந்துவக்கும் வண்ணம் எளிய முறையில் விளங்க வைத்தலும், பிறர் சொல்லும் பொருளுரை எவ்வளவு நுண்ணிய கருத்தாயினும், அவர் அதைத் திறம்பட எடுத்துரைக்க மாட்டாதபோதும், அவர் சொல்லப்புகுவது என்னவென்று அறிந்து கொள்வதுமே சிறந்த அறிவெனப்படும். அவ்வகை அறிவு ஏற்படுவதற்கு விரிந்த கல்வியும், ஆழ்ந்த நூலாராய்ச்சியும் வேண்டப்படும். தம்புகழ் கருதியும்,

பொருளீட்டி வாழ்வது குறித்தும், தம்மிற் சிறந்த புலவரின் புகழ் கண்டு பொறாது அவர்க்குச் சிறுமை கூற ஏதுவாதல் பொருட்டும் அவர்மீது பகை கொண்டும் நூற்பொருள் உணர்ந்து சேரல் நூலாராய்ச்சியாகாது. பிறரைப் பழித்தலானும், தம்மை அளவிறப்பப் புகழ்தலானும், தாங் கல்லாத நூல்களைக் கற்றறிந்தோர் போன்று பெரியதோர் ஆரவாரஞ் செய்தலானும், கல்லாத ஒருவனை உலகம் கல்விமான் என மயங்கிக் கோடலில்லை.

ஒருவன் உள்ளத்திருந்தெழும் சொற்களும், அவன் அதைச் சொல்லும் முறைமையுமே அவனுடைய கல்வி, கேள்வி, அறிவாகியவற்றை அறிவதற்கு உரைகல் என்பதை யாவரும் அறிவர். ஆரியமும் செந்தமிழும் ஐயம் திரிபற முழுதுணர்ந்து வேதம், ஆகமம், சாத்திரம், இலக்கியம், இலக்கணம் முதலிய விழுமிய நூற்பொருள்களை அறிவு நுணுகி ஆழ்ந்தாராய்ந்தறிந்து, அங்ஙனமாராய்ந்தவற்றைப் பிறர் உவக்கும் வகையால் நுண்பொருளும் எளிதில் விளங்கும் வண்ணம் பொலிவு தோன்ற முகமலர்ந்தினியவாகச் சொல்லி, சைவ சமய உண்மைகளையும், திருநெறித் தமிழின் மாண்புகளையும் தமிழ் நாடெங்கணும் பரவச் செய்து, மக்களுள்ளங்களைக் கவர்ந்து கொண்ட பெருமை நம் ஞானியாரடிகளுக்கே உரிய தொன்றன்றோ! மெய்யாசிரியருக்கு நூல்கள் வகுத்த பண்புகள் எல்லாம் அவரிடம் மிளிர்ந்திருப்பதை அவரது சொற்பொழிவை ஒருசில நிமிஷங்கள் கேட்டவனும் கண்டிடுவான் என்பதில் ஐயமுண்டோ?

உயர்குடிப் பிறப்பும், அருளும், பெருந்தகைமையும் ஓரிடத்திருந்தே முழுவதையும் காணுதற்கரிய பெருமையை உடைய உலகம் போன்று, பிறரால் வகுத்தறியப்படாத கல்வியின் பெருமையையும், வானம் வறப்பினும் தன்னைச் சேர்ந்த உயிர்கட்கு நீர் வளத்தைக் கொடுக்கும் மலை போன்று உயர்ந்த தோற்றமும், பொருள் வருவழி வறந்த காலத்தும் தன்னைச் சேர்ந்தவர்களுக்குக் கல்விச் செல்வத்தைக் கொடுக்கும் கொடையும், நடுவுநிலை மாறாது நிறைகோல் போல வினவப்பட்ட சொற்பொருளியல்பை மலைவு நீங்க அறிவித்தலும், புலவர் இருவர் மாறுபட்டாராயின் உண்மைபெறத் தான் அவர்க்கு நடு நின்று உரைத்தலும், மலர் போன்று கண்டோரெல்லாம் விரும்பும் மென்மையும், முகமலர்ச்சியும், கலைபயில் தெளிவும், கட்டுரை வன்மையும் உடையவன் யாரோ அவனே உண்மை ஆசிரியன் எனப்படுவான். அத்தகைய ஆசிரியனும், நூற்பொருளைப் பிறர்க்கு உணர்த்த வேண்டிய காலமும் இடனும் அறிந்து, தெய்வத்தை மனத்திருத்தி, தான் உரைக்கும் நூற்பொருளை உள்ளத்தமைத்து அமைதியாகக் கோபியாமல் விருப்பத்துடன் மலர்ந்த முகத்தோடு கேட்போர் ஆற்றலறிந்து அவர் மனதில் ஏற்றுக் கொள்ளும்படி நன்மனத்துடனே நூற்பொருளை விளக்கல் வேண்டும் என நம் நூல்கள் கூறும்.

" ஈத லியல்பே யியம்புங் காலை
காலமு மிடனும் வாலிதி னோக்கிச்
சிறந்துழி யிருந்துதன் தெய்வம் வாழ்த்தி
உரைக்கப் படும்பொரு ளுள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து

கொள்வோன் கொள்வகை யறிந்தவ னுளங்கொளக்
கோட்டமில் மனத்தினூல் கொடுத்த லென்ப ''

என இவ்வாறெல்லாம் அமைந்த ஆசிரியரின் மெய்யிலக்கணங்களனைத்தும் நிரம்பி விளங்கியவர் நம் அடிகளாரல்லரோ! இஃதிங்ஙன மிருப்ப, ஒருமுறை சொல்லிய பிறகு மாணவன் எழுந்து, " மற்றோர் முறை தயை கூர்ந்து விளங்கும்படிச் சொல்லுங்கள் " என்றால், அவனை எல்லா மாணவர் முன்னும் நகையாடி, " இதெல்லாம் உன் மூளைக்கு எப்படி எட்டும், பேசாமல் உட்கார், அல்லது நிம்மதியாய் வீட்டுக்குப் போய் உறங்கு " எனச் சலிப்புறும் ஆசிரியரையும், " ஐய, இதற்கு இவ்வாறு பொருள் கோடல் ஏற்புடைத்தன்றே, நூலாசிரியர் கருத்துக்கது ஒவ்வாதோ " என நுண்ணறிவுள்ள மாணவன் ஒருவன் வினவுவானாயின் அவன் மேல் சீறி விழுந்து, " நூற்பொருள் எல்லாம் நீ கரை கண்டவனோ, சீ, சொன்னதைக் கேட்டுப் படி " எனப் பதை பதைத்து அறிவைக் கொலை செய்யும் ஆசிரியரையும் இக்காலத்தில் நாம் ஆங்காங்குக் காண்கின்றோம்.

இவரெல்லாம் ஆசிரியர் தாமோ? ஆசிரியர் வேடங்கொண்ட கொலைஞரல்லரோ? பிறிதொன்றன் உயிரை மாய்த்தல் மட்டுமா கொலை! அம்மம்ம! இவர் மாணவர் அறிவை வளர்த்துச் செந்நெறி புகட்டி, அவர் மனத்தைப் பண்படுத்த வேண்டியவரா யிருக்க, அதற்கு மாறாக, அவர்க்கு இயற்கையில் அமைந்துள்ள ஒரு சிறிது அறிவையும், ஆராயுந் தன்மையையும் அடிவேரறப் பறிக்கும் தீவினையில் தம்மை யறியாது செல்கின்றனர்.

எல்லா மாணவரும் அறிவுடன் விளங்குவாராயின் அவர்க்குப் பள்ளிகள் எதற்கு? ஆசிரியன்மார்தாம் எற்றுக்கு? "அன்னம் ஆவே, மண்ணொடு கிளியே, இல்லிக்குடம் ஆடு, எருமை நெய்யரி, அன்னர் தலை இடை கடை மாணாக்கர்" என நூல் பயில்வோர் மூவகைத் திறத்தினராதல் கண்டன்றோ நம் பண்டை ஆசிரியரெல்லாம், "கொள்வோன் கொள் வகை யறிந்து அவனுளங்கொளக் கோட்டமில் மனத்தொடு" நூலைக் கற்பிக்க வேண்டும் என வரையறுத்துக் கூறிப் போந்தனர். இக்காலத் தாசிரியன்மார்க்கு, எவ் வாற்றானும் மெய்யாசிரியராகத் திகழும் நம் தேசிக மூர்த்திகளின் வாழ்க்கை, உலகிற்கு நன்னெறி உணர்த்துவதாக.

## 39. மாமா மறைவும் மனக்கலக்கமும்

அடிகளாருக்குத் தாயுடன் பிறந்த அம்மான் ஒருவர் உண்டு. அவர் பெயர் பழநியாண்டி ஐயர் என்ப தாகும். அவரும் அவர் மனைவியாரான அமிர்தம் அம்மை யாரும் அடிகளாருக்குத் தாய் தந்தையர்கள் போல் இருந்து இளமை முதல் பாதுகாத்து வந்தவர்களாவார் கள். அடிகளார் எங்குச் செல்லினும் அவர்களும் உடன் செல்லுதல் வழக்கம். அடிகளாருக்கு எதுவேண்டி யிருப்பினும், அல்லது எதனைச் செய்ய வேண்டியிருப் பினும், 'மாமா' என்று அழைத்து அவர் மூலம் தம் விருப்பத்தைத் தெரிவிப்பார். அவரும் அன்புடன் வந்து வேண்டுவன புரிவார். மாமா அடிகளாரைக் கண் ணிமைபோல் அண்மையிலிருந்து பாதுகாப்பார். அடி களாரை விட்டுப்பிரிய என்றும் ஒருப்படார். இரண்

டொரு தினங்கள் பிரிய நேரினும் அது அவருக்கு வருத்தந் தருவதாயிருக்கும். அடிகளார்பால் அவர் வைத்திருந்த அன்பு அளவு கடந்ததாகும். மடாலய நிர்வாகம் முழுவதும் அவர் பொறுப்பிலேயே இருந்து வந்தது. அடிகளாருக்கு எவ்வித கவலையும் நேரா வண்ணம் கவனித்துத் திறம்பட நடத்தும் ஆற்றல் அவருக்கு இயற்கையாகவே அமைந்து கிடந்தது.

செல்வர் முதல் மாணவர்கள் ஈறாக மடாலயத்திற்கு வரும் அன்பர்கள் அனைவருமே அவரை, 'மாமா' என்றே அழைப்பார்கள். அவரவர்கட்கு ஏற்றவாறு உபசரிப்பதிலும், அடிகளாரின் உள்ளக்கிடக்கையை அறிந்து அதற்கேற்ப நடப்பதிலும் மாமாவுக்குச் சமானமானவர்கள் இல்லை. எழுபதிற்கு மேற்பட்ட வயதாகியும் சிறு பிள்ளைகள் போல் சுறுசுறுப்பாக வேலை செய்வர். விழாக்காலங்களில் அடிகளார் ஏற்ற காலம் தவறாமல் செல்வதற்கு உரிய ஆயத்தங்களை யெல்லாம் கண்விழித்துச் சோம்பலின்றிச் செய்து முடிப்பர். அடிகளார் கவலையின்றிக் கல்வித் துறையில் மிகுதியும் முன்னேற்ற முற்றதற்கு மாமா அவர்களின் அளவுகடந்த பொறுப்பே காரணமாகும். அடிகளாருடன் இருப்பதிலேயே அவர் மிக்க மகிழ்ச்சிகொள்வார்.

முன் ஏற்பாடுகள் சில செய்விக்க வேண்டி அடிகளார், மாமாவை சில மாணவர்களுடன் இரண்டொரு இடங்கட்கு ரயில்மூலம் முன்னர் அனுப்பி வைப்பதுண்டு. அவர் முன்னர் சென்று ஆவனவற்றை மிக்க ஊக்கத்துடன் செய்து முடித்து விடுவர். பின்னர் அடிகளாரின் வருகையை எதிர்

நோக்கி யிருப்பர். அடிகளார் வருவதாகக் குறிப்பிட்ட காலத்திற்குப் பின் இரண்டொரு நிமிடங்கள் தாமத மேற்படினும் மாமா உடல் பூமியில் தரியாது. கன்றைப் பிரிந்த பசுப்போல் கண்கலங்கி நிற்பர். அச் செயல் உடன்போந்த மாணவர்களின் மனதையும் இளகச் செய்துவிடும். அவர்கள் மாமாவுக்கு ஆறுதல் கூறிவிட்டு, அடிகளார் வரும் வழியை நோக்கி முன் ஓடுவர். சிவிகையின் வரவு நெடுந்தூரத்தில் காணப் படின் திரும்பி வந்து மாமாவிடம் கூறுவர். அதனைக் கேட்டபின்தான், மாமா அவர்களின் கண்கலக்கம் ஒருவாறு சாந்தியடையும். நேரிற் கண்டு அளவளாவிய பின்தான் மகிழ்ச்சியோடு செயலாற்ற முற்படுவர்.

இத்தகைய அன்பிற்கு இருப்பிடமாகிய மாமா அவர்கள் 1939 - ம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் ஒரு முக்கிய காரியமாகத் திருக்கோவலூர் சென்றூர்கள். சென்றவிடத்தில் சுரநோய் கண்டது. அது விரைவில் குணந்தருவதாகத் தோன்றவில்லை. அடிகளாருக்கு அறிவிக்கப் பெற்றது. அடிகளார், ஒரு அன்பரை அனுப்பித், தனிக் 'கார்' மூலம் மாமாவை அழைத்து வர ஏற்பாடு செய்தார். மாமா அவர்கள் மடாலயத்தை யடைந்த பின்னரும் சுரநோய் தீரவில்லை. மருத்துவர்கள் வேளை தவராது மருந்தளித்து வந்தனர். சிலநாட்கள் படுக்கையிலேயே இருந்தனர். மருத்துவர்களும் கைவிட்டு விட்டனர்.

திருச்சி, நாஷனல் காலேஜில் தமிழ்ப் பண்டிதராகப் பணியாற்றி வரும் மாமா அவர்கள் முதற் புதல்வரான திரு. ப. கந்தசாமி ஐயரவர்கட்கு அறிவிக்கப் பெற்றது. அவர்களும் உடனே புறப்பட்டு வந்தனர்.

அவர் வந்து சேருவதற்குள் மாமா அவர்கள் இறைவன் திருவடி நீழலையடைந்தனர்.

மாமா அவர்களின் மறைவு அடிகளாருக்குப் பெரும் மனக்கலக்கத்தை உண்டுபண்ணி விட்டது. மரக்கலம் உடைந்த மீகாமன்போல் ஆதரவற்று நின்றனர். எத்தகைய செயலையும் செய்து முடித்தற்கு வலக்கரம் போல் பேருபகாரமாகவிருந்த மாமாவைப் பறிகொடுத்த பின் அடிகளாரின் நிலை பரிதபிக்கத் தக்கதாகவிருந்தது. வரும் அன்பர்களிடமெல்லாம் அவர் செயலாற்றுந்திறத்தைக் கூறிக் கூறி வருந்து வாராயினர்.

மாமா அவர்களின் இறுதிச் சடங்குகள் செம்மையுற நிறைவேறியன. அதற்கென அடிகளார் அடிக்கடி "கருவூலம்" உள்ள அறைக்குச் செல்ல வேண்டிய ஆவசிகம் ஏற்பட்டது. பழக்க மின்மையால் அவ்வறையுட் செல்லுங்காலத்து ஓர் ஆணி அடிகளாரின் திருவடியிற் தாக்கி ஊறுவிளைத்தது. அது குணமாவதற்குப் பல நாட்கள் சென்றன. அதன்பின் பொருள் சம்பந்தமான ஒவ்வொரு செயலுக்கும், மற்றையவற்றிற்கும் அடிகளாரே அடிக்கடி எழுந்து சென்று கவனிக்க வேண்டிய கடமை ஏற்பட்டுவிட்டது.

## 40. கோவல் தமிழ்ச் சங்கம்

1933-ஆம் ஆண்டு, செப்டெம்பர் மாதம், 2-ஆம் திகதியன்று அடிகளாரின் மாணவர்கள் சிலரின் முயற்சியால் திருக்கோவலூரில் 'கோவல் தமிழ்ச் சங்கம்' என்னும் பெயரால் ஒரு சங்கம் தோற்றுவிக்கப் பெற்றது.

அதில், டிப்டிக்கலெக்டர் - K. கோதண்டபாணி பிள்ளை, தாசில்தார்-M. கிருஷ்ணமுதலியார், முன்சிப்-பாஸ்கரரெட்டியார், மாஜிஸ்ட்ரேட்-சதாசிவரெட்டியார், எஞ்சினீயர் - தே. வரதராஜ முதலியார், K. O. பெருமாள்சாமிபிள்ளை, பாடசாலைகளின் டிப்டி இனிஸ்பெக்டர்-முத்துசாமி ஐயர், கண்டாச்சிபுரம்-க. ரத்தின சபாபதி முதலியார், ஆசிரியர் - திருநாவுக்கரசு முதலியார், ஆசிரியர்-P. கோவிந்தசாமி பிள்ளை, ஆசிரியர்-ஆ. சீநிவாச முதலியார், தமிழ்ப் பண்டிதர்-சௌந்திர ராஜ உடையார், டாக்டர் - எம்மாபாய் அம்மாள், C. கிருஷ்ணசாமி பிள்ளை, கோ. இராமசாமி நாயக்கர், நெசவு ஆசிரியர் - A. அப்பாசாமி முதலியார், ஆசிரியர்-N. ஜெயராம முதலியார், M. வேங்கடேச முதலியார், பாலகிருஷ்ண பிள்ளை, பாவாடைசாமி பிள்ளை ஆகிய பலர் அங்கத்தினர்களாயினர்.

முதல் ஆண்டு நிறைவு விழா, திரு. வி. கலியாண சுந்தர முதலியாரவர்கள் தலைமையிலும் அடுத்த ஆண்டு விழாக்கள் சோமசுந்தர பாரதியார், கோதண்டபாணி பிள்ளை ஆகியவர்களின் தலைமையிலும் நடைப்பெற்றன. அதன் பின்னர் ஒவ்வொரு ஆண்டு விழாவையும் அடிகளாரே தலைமை தாங்கி நடத்தி வைத்தனர். ஆண்டு விழாக்களில், புரிசை - முருகேச முதலியார், வே. வேங்கடராஜுலு ரெட்டியார், பழநி சாமி சிவாசாரியார், S. முத்துசாமி நயினார், தேவாசாரியார், ஔவை - துரைசாமி பிள்ளை, வே. ஐயா நாயக்கர், ராம - சடகோப ஐயங்கார், மா. இரத்தினம் பிள்ளை, N. வேணுகோபால் பிள்ளை, கி. வேங்கடசாமி ரெட்டியார், S. பெரியசாமி பிள்ளை,

கி. இராமலிங்க முதலியார், தே. வரதராஜ முதலியார், T. B. கிருஷ்ணசாமி முதலியார், வி. ஐ. முனிசாமி பிள்ளை, தில்லை - வரதராஜ சுவாமிகள், தேவாரம்-ராஜம் அம்மையார், டாக்டர் - தர்மாம்பா அம்மையார், பண்டிதை - அ. நாராயணி அம்மையார், ரா. ஜெகதாம்பா அம்மையார், ஆழ்வார்நாயகி அம்மையார் ஆகிய பலர் சொற்பொழிவாற்றி மக்களை மகிழ்வித்தனர்.

அடிகளார் கோவலில் தங்கியிருக்கும் காலங்களில் ஞாயிறு தோறும் அடிகளார் தலைமையிலேயே வாரக்கூட்டங்கள் கூடி நடைபெறும். மற்றைய நாட்களில் மாலை நேரங்களில் சித்தாந்த பாடங்கள் நடைபெறும். ஞானப்பிரகாசம் பிள்ளை, நடனசபாபதி ஐயர், வேங்கடசுப்பிரமணிய ஐயர், நடேச பண்டாரம், இரத்தின முதலியார் முதலிய சங்க அங்கத்தினர்களும் மற்றும் பலரும் அதிற் கலந்து கொள்வர்.

1940 - ம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் கோவல் தமிழ்ச் சங்கத்தின் ஆறும் ஆண்டு நிறை விழா அடிகளாரின் தலைமையில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. அடிகளார் வழக்கம்போல் தமது தலைமை உரையையும், முடிபுரையையும் வழங்கி அனைவரையும் மகிழச் செய்தனர்.

திருக்கோவலூருக்கு அண்மையிலுள்ள கண்டாச்சிபுரம் என்னும் ஊரில் அடிகளாரின் மாணவர்களது முயற்சியால் தோற்று விக்கப்பெற்ற, " செந்தமிழ்க் கழகம் " என்னும் சங்கத்தின் முதல் ஆண்டு நிறை விழாவிற்கு அடிகளார் எழுந்தருளி தலைமை தாங்கவேண்டுமென அவ்விடமிருந்து வந்திருந்த அன்பர்கள் வேண்டிக்கொண்டனர்.

அடிகளார் அதற்கிசைந்தனர். அடுத்த வாரத்தி லேயே அவ்விழா கொண்டாட ஏற்பாடு செய்யப் பெற்றது. அடிகளார் ஆங்கு எழுந்தருளினர். அந்தக் கிராமத்திலுள்ள மக்கள் அனைவரும் அடிகளாரை மேள வாத்தியத்துடன் ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். ஒவ்வொரு இல்லத்தினரும் அடிகளாரின் சிவிகையை நிறுத்தி, வரவேற்ற முறை கண்கொள் ளாக் காட்சியாக விருந்தது.

செந்தமிழ்க் கழகத்தின் முதல் ஆண்டு நிறைவு விழா அடிகளாரின் தலைமையிலேயே தொடங்கியது. பல அறிஞர்கள் சொற்பொழிவாற்றினர். அதில் அடிகளாரின் நற்பண்புகள் பல விரித்துரைக்கப் பெற்றன. அடிகளாரும் முன்னுரை பின்னுரைகளை அன்பர்கள் மனம் மகிழும் வண்ணம் விரித்துரைத் தனர். க. இரத்தின சபாபதி முதலியார், இராமலிங்க முதலியார், இராசமாணிக்க முதலியார், ச. குப்புசாமி முதலியார், முத்தையா பிள்ளை முதலிய அன்பர்கள் வரவேற்புக் குழுவினராகவிருந்து, அடிகளாரிடம் காட்டிய அன்பு அளவு கடந்ததாகும். கண்டாச்சி புரம் என்னும் அந்த கிராமத்தின் பெயர் 'கண்ட ராதித்தபுரம்' எனக் கல்வெட்டுகளில் காணப்பெறுவ தாகவும் அவ்வாறே இனி வழங்க ஏற்பாடு செய்ய வேண்டுமெனவும் முடிவு செய்தனர்.

ஆண்டு விழாவிற்குப்பின் அடிகளார் அணையேறி, சிவபுரி முதலிய இடங்களுக்குச் சென்று சில நாட்கள் தங்கியிருந்தனர். ஆங்காங்குச் சிற்சில சொற்பொழிவு கள் நடைபெற்றன.

செஞ்சி, தாசில்தாரர் திருவாளர் - M. கிருஷ்ண முதலியாரவர்கள், அடிகளாரை வந்து அழைத்

தனர். செஞ்சியில் ஒரு மகாநாட்டைக் கூட்டினர். 1940 - ஆண்டு மேமாதம் 3- ஆம் திகதி முதல் மூன்று நாட்கள் அம்மகாநாடு சிறப்புற நடைபெற்றது. அறி ஞர் களின் சொற்பொழிவுகளும், அடிகளாரின் முன் னுரை பின்னுரைகளும் அன்பர்களுக்குப் பெருமகிழ் வைத் தந்தன. திரு. கேசவரெட்டியார், திரு. முரு கேசம் பிள்ளை ஆகிய அன்பர்கள் அடிகளாரிடம் காட்டிய அன்பு மறக்கத்தக்க தன்று. அடிகளார் மீண்டும் திருக்கோவலூரை அடைந்தனர்.

# பிற் பகுதி

கட்டளைத் கலித்துறை

முத்தமிழ் ஓங்கிடச் சங்கமு மில்லைமு வேந்தரில்லை
சத்திய சைவம் வளர்த்திட நால்வர்கள் தாமுமில்லை
எத்தகை யாலவை யீடேறு மென்றே யிரங்குநர்க்காப்
புத்தமிழ் தம்போலத் தோன்றினர் ஞானியார் பூதலத்தே.

## 41. திருக்கோவலூரில் நிலைபெற்றிருத்தல்

மாமா அவர்கள் மறைந்த பின்னர் அடிகளாரை அன்புடன் போற்றி ஆதரவு புரிபவர் அரியராயினர். அமிர்தம் போன்று உணவுகளைத் தயாரித்து, அடிகளாரை உபசரித்து வந்த மாமா அவர்தம் மனைவியாரான அமிர்தம் அம்மையார் அவர்களுக்கு, கணவன் பிரிவு காரணமாக ஏற்பட்ட மனோநிலை, வியாதியாகப் பரிணமித்து, அவர்களைப்படுத்த படுக்கையாகஇருக்கச் செய்து விட்டது. இந் நிலையில் அடிகளார் எங்குஞ் செல்வதற் கின்றி திருக்கோவலூரிலேயே நிலையாகத் தங்கியிருந்தனர். தக்கபடி ஆதரிப்பாரின்மையால் அடிகளாரின் உடல் நிலை தளர்ச்சியடையத் தொடங்கிற்று. உடல் தளரினும் உள்ளந்தளராத அடிகளார் அந்நிலையிலும், “சிவஞானபோத மாபாடியம்” என்னும் நூலை அன்பர் பலருக்கும் போதித்து வந்தனர்.

கோவல் தமிழ்ச்சங்கத்தின் வாரக் கூட்டங்கள் அடிகளாரின் தலைமையில் மிகச் சிறப்பாக நடை

பெற்று வந்தன. 1940-ஆம் ஆண்டு, டிசம்பர் மாதத்தில் சைவ சித்தாந்த மகாசமாஜத்தின் 35-வது ஆண்டு விழா, மயிலம், சிவஞான பாலைய சுவாமிகள் ஆதரவையில் நடைபெற்றது. ஆங்குச் சென்றிருந்த அன்பர்கள் பலர் அடிகளாரைக் காணத் திருக்கோவலூரை அடைந்தனர். கோவல் தமிழ்ச் சங்கத்தின் விசேடக்கூட்டமொன்றை, அவர்களைக் கொண்டு நடத்த அடிகளார் ஏற்பாடு செய்தனர்.

25 - 12 - 1940 மாலை அக்கூட்டம் கோவல் - வீரட்டானம், சிவாலய முன்மண்டபத்தில் கூடியது. கரந்தை, தமிழ்ச் சங்கத் தலைவர், திரு. த. வே. உமாமகேசுவரம்பிள்ளை, B. A. B. L. அவர்கள் தலைமை வகித்தனர். விழுப்புரம், நகராட்சி ஆணையளார் திரு. கி. இராமலிங்க முதலியார், B. A. அவர்கள் 'திருவாசகம்' என்பது பற்றியும், யாழ்ப்பாணம். கல்லூரி ஆசிரியர், திரு. க. மதியாபரணர், B. A. அவர்கள், ' இயேசுவும் வள்ளுவரும் ' என்பது பற்றியும், கரந்தை, தமிழ்ச் சங்கத் தமிழாசிரியர், திரு. வெள்ளைவாரண முதலியாரவர்கள், ' தமிழிசைத்திறன் ' என்பது பற்றியும், சிதம்பரம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், வரலாற்று ஆசிரியர். திரு. ச. க. கோவிந்தசாமி பிள்ளை, M. A. அவர்கள், 'சோழர் காலத்திய கோயில்களும், மடங் களும், என்பது பற்றியும் சொற்பொழிவு களாற்றினர். தலைவர் முடிவுரைக்குப்பின் அடிகளார் கூறிய வாழ்த் துரை மிகச் சிறப்புடையதாகவிருந்தது.

அதன்பின் சிறிது காலத்திற் கெல்லாம் ஒருவர் பின் ஒருவராக த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர் களும், ச. க. கோவிந்தசாமி பிள்ளையவர்களும் இவ்

வுலக வாழ்வை நீத்தார்கள் எனக்கேட்டு, அடிகளார் பெரிதும் வருந்தினர்.

அடிகளாருக்கும் உடல் நிலை செவ்விய முறையில் இருக்கவில்லை. அடிக்கடி சிறுசிறு நோய்கள் தோன்றித் தோன்றி மறைந்தன. அதனால் உடல் நிலை தளர்ச்சியுற்றிருந்தது. அதுகாரணமாக அடிகளார் வேறு எங்குஞ் செல்லாது திருக்கோவலூரிலேயே வதிந்து வந்தனர். அது அங்குள்ள மக்கள் அனைவருக்கும் பேருவகை அளிப்பதாயிற்று.

## 42. மடாலய சீர்திருத்தம்

திருக்கோவலூரில் அடிகளார் நிலையாகத் தங்கியிருந்த காலத்தில் வழக்கம் போல் பாடம் போதித்து வந்தனர். சொற்பொழிவுகளாற்றினர். அதனோடு அமையாது, பொருள் கொண்டு சில திருப்பணிகளும் செய்து முடித்தனர்.

மடாலயத்தின் முதல் குருமூர்த்திகளான உயர் சிவத்திரு ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளின் மாணவர்களுள் ஒருவரான அண்ணாமலை அடிகளாரின் ஆலயத்தைப் பிரித்துப் புதிய முறையில் கட்டிமுடித்தனர்.

மடாலயத்திற்கு அண்மையிலுள்ள மகாகுரு மூர்த்திகளின் சந்நிதி பழுதுபட் டிருந்தமையால், அதனை ஆங்காங்குப் பிரித்துக் கட்டி முடித்தனர். மதிற்சுவரையும் செவ்விய முறையில் கட்டினர். அதில் மேற்கு நோக்கியுள்ளதாக ஒரு வாயிலும் வகுத்தனர்.

மடாலயத்திற்குச் சொந்தமான ஆவணி மூல மண்டபத்தை அடியோடு பிரித்துப் புதிய முறையில்

கட்டி முடித்தனர். அதற்கு முன்னர் சிறு மதிற் சுவரும் கட்டி, வாயிலும் வகுத்தனர்.

அறையணி நல்லூரிலுள்ள மடாலயத்திற்குச் சொந்தமான கட்டிடங்கள் எல்லாவற்றையும் புதிய முறையில் திருத்திக் கட்டிமுடித்தனர்.

ஓவர்சியர் இராஜம்பிள்ளையவர்களையனுப்பி, திருமுதுகுன்றத்திலுள்ள மடாலயத்தையும் செவ்விய முறையில் கட்டிமுடித்தனர். அவ்வாறு அடிகளார் புரிந்த திருப்பணிகள் அனைத்தும் அவரது நினைவுக் குறிகளாக இன்றும் இருந்து விளங்கி வருகின்றன.

திருமுதுகுன்றம் சிவாலயத்தில் (1941 மார்ச்சு) விக்கிரம ஆண்டு மாசித்திங்களில் பெருவிழா நடைபெற்றது. அவ்விழாவின் அங்கமாக நடைபெறும் விரிவுரை கூட்டங்கட்குத் தலைமை வகிக்க வருமாறு அடிகளாரை அழைத்தனர். திருப்பணி செய்துள்ள திருமுதுகுன்ற மடாலயத்தைப் பார்வையிடவும், விழாக் கூட்டங்களுக்குத் தலைமை வகிக்கவும் அடிகளார் ஆங்குச் சென்றனர்.

அந்நகரார் அடிகளாரை அன்புடன் வரவேற்று உபசரித்தனர். அடிகளாரும் அங்குச் சில நாட்கள் தங்கியிருந்தனர். விழாக் கூட்டங்களில் தலைமை தாங்கினர். தேன்போன்ற இனிய செந்தமிழ் மழையைப் பொழிந்து, அனைவரையும் மகிழ்வுறச் செய்தனர்.

வக்கீல் - ரங்கசாமி பிள்ளை, பாடசாலை - சபாபதி செட்டியார், பண்டிதர் - சிவகுருநாதம் பிள்ளை, பண்டிதர் - ஞானப்பிரகாசம் பிள்ளை, வைத்தியநாத முதலியார் ஆகிய பல அன்பர்கள் உடனிருந்து அடிகளாருக்கு உபசரணைபுரிந்து வந்தனர்.

பண்டிதர் - சௌந்தரராஜ உடையார் வரைந்த, 'திருமுதுகுன்றத் தல வரலாறு' அச்சிட்டு அனைவருக்கும் வழங்கப் பெற்றது. அடிகளார்பால் ஆலய மானேஜர் அவர்களும், அந்நகரினரும் புரிந்த அன்புடைமை மறக்கற்பாலதன்று.

## 43. செய்யாறு செலவு

1941-ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் திருக்கோவலூருக்கு அண்மையிலுள்ள கண்டாச்சி புரம் 'செந்தமிழ்க் கழகம்' இரண்டாம் ஆண்டு நிறை விழாவில் தலைமை தாங்கிச் சொற்பொழி வாற்றினர். அன்பர்கள் அனைவரும் மகிழ்ச்சிக் கடலுளாழ்ந்தனர்.

ஆரணியில் அடிகளாருக்கு ஒரு மடாலயம்உண்டு. அம்மடாலய நிலத்தில் பஜனை கூடம் கட்டிக் கொண்டு, பின்னர் அது தங்களுடையதென வீண் வாதம் செய்வதாக முன்னர் கூறிேனமல்லவா, அது சம்பந்தமாக அம்மடாலயத்தின் மேற்பார்வையாளரான குட்டி செட்டியாரவர்கள் நேரில்வந்து, அடிகளார் அங்கு எழுந்தருளினல்தான் அவர்கள் வழிக்கு வருவார்கள் என்று கேட்டுக் கொண்டனர். அவர்தம் வேண்டுகோளுக்கிணங்கி அடிகளாரும் ஆரணி சென்றனர். ஆங்குச்சில பகல் தங்கியிருந்தனர்.

அடிகளார் ஆரணியில் தங்கியிருப்பது உணர்ந்த திருவோத்தூர் எனவழங்கும் 'செய்யாறு' நகரினர் குழுமிவந்து அடிகளாரைத் தம் நகருக்கு வருமாறு விரும்பி அழைத்தனர். அடிகளார், அவர்களின் வேண்டு கோளுக்கிணங்கி ஆங்குச் சென்றனர். திரு. மா. தெய்வசிகாமணி முதலியாரவர்கள் இல்லத்தில் எழுந்தருளியிருந்தனர்.

திருவோத்தூரில், ம. தி. பாநுகவி சுவாமிகள் என்ற பெரியார் ஒருவர் இருந்தனர். அவர் வடமொழி தென்மொழி ஆகிய இரு மொழிகளிலும் வல்லுநர். சென்னை, 'பிரபஞ்சமித்திரன்' பத்திரிகையில் அவரது வேதாந்த சம்பந்தமான அரிய கட்டுரைகள் ஒவ்வொரு வாரமும் வெளிவரும். அப்பத்திரிகையின் முன்னேற்றங் கருதி, ஞானகலாவிலாசினி, ஞானாமிர்த பாஷிணி, ஞானசஞ்சீவினி, ஞானலதா எனப் பெயரிய பல கதைகள் எழுதி உதவியுள்ளனர். அவை யாவும் இறுதியில் வேதாந்த ஞானத்தைப் புகட்டுவனவாகவே யிருக்கும். அன்றியும்; ஹரிஹர தார தம்மியம், கந்த புராணக் கலாபூஷண உரை, திருமாற்பேற்றுப் புராணம் முதலிய நூல்களும் இயற்றியுள்ளனர். அவர் மூவகைத் தமிழிலும் வல்லுநராக விருந்தமையால் அவரை, "முத்தமிழ் ரத்நாகரம், ம. தி. பாநுகவி சுவாமிகள்" என அனைவரும் அழைப்பர். அவரிடம் கற்றுத் தேர்ந்த மாணவர்கள் பலராவார்கள். அடிகளார் தலைமையில் வேலூரில் நடைபெற்ற சைவ சித்தாந்த மகா சமாஜக் கூட்டத்திலும் அவர் சொற்பொழிவாற்றி யுள்ளனர். அத்தகைய பெரியார் மறைவிற்குப் பின்பு, அவரது மாணவர்கள் தங்கள் நன்றி யறிதல் விளங்கும் பொருட்டு "பாநுகவி மாணவர் கழகம்" எனப் பெயரியதொரு சங்கத்தை நிறுவியுள்ளனர். அதன் பன்னிரண்டாம் ஆண்டு நிறைவு விழாவிற்குத் தலைமை தாங்க வேண்டுமென்பதே அவர்களின் வேண்டுகோளாகும்.

விஷு ஆண்டு, வைகாசித் திங்கள், கஅ-ஆம் திகதி (31-5-1941) திருவோத்தூர், பரிதிபுரம் திருநாவுக்கரசு மடாலயத்தில், பாநுகவி மாணவர் கழகத்தின்

12-ஆம் ஆண்டு நிறைவு விழா நடைபெற்றது. காஞ்சீபுரம், திரு. க. வச்சிரவேலு முதலியார், B. A., L. T., அவர்கள், 'கண்ணுதல் கருணை வெள்ளம்' என்பது பற்றியும், திருவோத்தூர், வித்துவான் திரு. T. S தேவசேனாபதி தேசிகர் அவர்கள், 'கம்பரும் வான்மீகரும்' என்பது, பற்றியும், திருவோத்தூர் வித்துவான் திரு. G. வில்வபதியவர்கள், 'வளைவர்கோன் மடப்பாவை' என்பது பற்றியும், திருவோத்தூர், வித்துவான் திரு. K. கோவிந்தன் அவர்கள் 'மணிமொழி யளித்த இருமொழி' என்பது பற்றியும் சொற்பொழிவாற்றினர். அவைகட்கு அடிகளார் பின்னுரை கூறி அனைவரையும் மகிழ்வித்தனர். அது காலை, ஆ. மா. சிவஞானம் அவர்களும் உடனிருந்து உபசரித்தனர். தேனினுமினிய அடிகளாரின் உரையைச் செவிமடுத்த அன்பர்கள் இன்றும் மறக்கவொண்ணு மகிழ்வெய்துகின்றனர்.

ஆண்டு விழா முடிவுற்றபின் அடிகளார் திருக்கோவலூருக்கு வரத் திரும்பினர். அடிகளாரை உள்ளன்போடு உடனிருந்து கவனிப்பவரின்மையால் உடன் மெலிந்திருந்த அடிகளாருக்குக் கண்விழிப்பும், காலந்தவறிய உணவும் ஒத்துக்கொள்ளாமல் வயிற்றுப் போக்கு ஆரம்பித்து; ஊறுசெய்யத் தொடங்கியது. வரும் வழியில் இது நேர்ந்தது ஆதலின், எங்குந் தங்கி மருந்து உட்கொள்ள முடியாமல் இரவெல்லாம் பிரயாணஞ் செய்துவந்து, காலை ஐந்து மணிக்குக் கோவல் குறுகினர். சிவிகை தாங்குநர் அடிகளாரின் உடல்நிலை யுணர்ந்து, தங்கள் சிரமத்தைப் பொருட்படுத்தாது வந்து சேர்ந்தது போற்றத்தக்கதொன்ருகும்.

அதுபோது அடிகளார் உணர்ச்சியற்ற நிலையில் இருந்தனர். காதோடு பேசினர். உடலில் சூடு காணப் பெறவில்லை. இந்நிலையில் டாக்டர் துரைசாமி முதலியாரவர்கள் மருந்து கொடுத்து வயிற்றுப் போக்கை நிறுத்தி, உடலிலும் சூடு வரச்செய்தனர். அதன்பின் உணர்ச்சி வரப்பெற்றனர். அடிகளார் பழைய நிலையை அடைய சில தினங்கள் சென்றன. அதுகாலை டாக்டர் அவர்கள் சிரமம் பாராது கண்விழித்து, செய்த சிகிச்சையை எண்ணி எண்ணி நன்றி பாராட்டுவர். அடிகளார் அவர்பால் காட்டிய நன்றி என்றும் மறக்கற்பாலதன்று. இனி நெடுந்தூரம் பிரயாணஞ் செய்தல் தம் உடல் நிலைக்கு ஏற்றதன்றென முடிவு செய்துகொண்டனர்.

## 44. அடிகளாரின் தலைமை உரை

திருவோத்தூர் பாநுகவி மாணவர் கழகத்தின் 12-வது ஆண்டு விழாவில் அடிகளார் வழங்கிய சொற்பொழிவின் குறிப்பு. இது மாணவர், த. உலகநாதன் என்பவரால் தமிழணங்கு பத்திரிகையில் வெளியிடப் பெற்றது.

மெய்யன்பர்களே !

இப்பொழுது இங்கு நாம் திருவோத்தூர் பரிதிபுரத் திருநாவுக்கரசு மடாலயத்தில், பாநுகவி மாணவர் கழகப் பன்னிரண்டாவது ஆண்டு விழாவின் இன்பத்தை அனுபவிக்கக் கூடியுள்ளோம்.

உலகில் மனிதப் பிறவி எப்பிறவியினும் சிறந்தது. மனிதன் நாடோறும் துயிலெழுந்ததும் 'நான் மனிதனாகப் பிறந்திருக்கிறேன்' என்று எண்ணல்

வேண்டும். ‘வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்’ என்றபடி மனிதன் தன்னைத்தான் மதித்தல்வேண்டும். பிறப்பின் வாய்ப்பினை யுணர்ந்து அதனால் நாம் என்னென்ன செய்யவேண்டுமென்று சிந்திப்பது, ஆண்களாகவும், பெண்களாகவும் பிறந்த ஒவ்வொருவருடைய கடமையாகும். பொருத்தமாகக் கிடைப்பதே வாய்ப்பு எனப்படும்.

நம்பால் உள்ள தீய குணங்களையும், பிறர்பால் உள்ள நல்ல குணங்களையுமே நாம் நினைத்தல்வேண்டும். ஒருவன் பிறர்பால் உள்ள தீய குணங்களை நினைப்பது, அவனுக்குத் தீமை விளைவிக்கும். தன்பால் உள்ள நற்குணங்களை எண்ணுவது, கர்வத்தை உண்டாக்கும். நாம் நல்லன செய்து உடனே அவற்றை மறத்தல் வேண்டும். மனித வாழ்வில் இது முக்கியமான விஷயமாகும். கெடுதி செய்யாதவர்கள் உலகில் இல்லை. அதிக தீமை விளைப்போரையே ‘கெட்டவர்கள்’ என்று உலகம் அழைக்கிறது.

அறிவு; இயற்கை அறிவு, செயற்கை அறிவு என இருவகைப்படும். கடந்த பிறவியில் நுகர்ந்து, இறந்தபோது தொடர்புற்று மறுமையினும் தோன்றுவதே இயற்கை அறிவாகும். படிப்பினால் - பெரியோர்கள் பழக்கத்தினால்-ஒழுக்கத்தினால் உண்டாவதுசெயற்கை அறிவு. இவற்றுள் படிப்பினால் வளரும் அறிவுதான் சிறந்த அறிவு. படித்தவர் தாம் முன்னர் அறியாது செய்த பிழையினைப் பின்னர் தெரிந்து வருந்தும் இயல்புடையர். படியாதவர்கள் தீமை செய்ததைச் சிந்திக்கமாட்டார்கள். செய்த பிழையினைச் சிந்தித்து வருந்துதலே பச்சாத்தாபம் ஆகும். தான் செய்த தீச்செயல்களையெல்லாம் ஒருவன் தன் நண்பர்களிடமோ,

பெரிய சபைகளிலோ, நாற்சந்தி கூடுமிடங்களிலோ கூறிப் பச்சாத்தாபப்படுவதால் அவன் தன் தீச்செயல்களைக் கடிவதோடு, பிறரும் அவன் பாவந் தொலைய இறைவனை வேண்டுவார்கள். எல்லா வகையான துன்பங்கட்கும் காரணமாக இருப்பது அறியாமை ! அறியாமை !! அறியாமை !!!

நாம் பிறரை மூடர் என்று பழிக்கலாகாது. சிலர், பிறருடைய பெருமையைக் கேட்கவும் சகிக்கமாட்டார்கள். அத்துடன் நில்லாது அவர் பெருமையைக் குலைப்பதற்கும் வழி தேடுவார்கள். ஆகையால் எவரும் முதலில் தம் மூடத்தனத்தை உணரவேண்டும். படிப்பு அறியாமையை நீக்குமென்று முன்னமே கண்டோம். எல்லா நூல்களும் இந்த உண்மையை நன்கு விளக்குகின்றன. நாம் செயற்கை யறிவுடன் கல்வி கற்றுக் கடவுள் நெறிநின்று உயிரையும் உடலையும் போற்ற வேண்டும். “ எவனொருவன் படித்து அறிவுடையவன் ஆவானோ அவன் பிறக்காமல் இருக்கும் இறவாத முத்தி சாதனம் எய்தப் பெறுவான். ” என்று ஈசாவாஸ்யம் என்னும் வடமொழி நூல் இயம்புகிறது.

ஆசையறுக்கும் நூல்களையே நாம் படித்து முக்தி பெறவேண்டும். இக்காலத்தே ஆசை விளைவிக்கும் நூல்கள் பல்கியுள்ளன. அதுபற்றி விவரிக்க அடியேன் விரும்பவில்லை. வித்தையால் முத்தியடையலாம் என்னும் கருத்துள்ள ‘ வித்தை விரும்பு ’ என்னும் ஔவையார் வாக்கே வேதங்களின் உட்கருத்தாகவும் விளங்குகிறது. சிலர், ‘ வயதாய்விட்டது. நம்மால் இனி படிக்க வியலாது ’ என ஓதுவ தொழிகின்றனர். ஆனால் அவர்களுள் வயது முதிர்வால் இனி நம்மிடம் பணப்பெட்டியின் திறவுகோல் வேண்டுவதில்லை

என்று கூறித் தம் அருமந்த மகாரிடம் அதனைக் கொடுக்கவும் மனமில்லாதவர்கள் பலர் இருக்கிறார்கள்.

"யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு"

என்னும் பொன்மொழி, நாம் இறக்கும்வரை படிக்க வேண்டும் என்பதை வற்புறுத்துகிறது. தற்காலத்தில் முதியோர் கல்விக்கு அரசியலாரும் நன்முயற்சிகொண்டிருப்பது பாராட்டுதற்குரியதாகும்.

ஐயந்தீர்க்கும் நூல்களில் தெய்வத் திருக்குறளும், தொல்காப்பியமும், திருக்கோவையாரும் தலைசிறந்தவை. "செல்வம் புலனே புணர்வு..." என்னும் மெய்ப்பாட்டியல் சூத்திரத்தில் புலன் என்பதற்குக்கல்விப் பயனாகிய அறிவுடைமை என்பது பொருள். கல்விப் பயனாகிய அறிவுடைமை இன்பத்தைக் கொடுக்கும். பெருமிதமென்பது ; கல்வி, தறுகண், இசை, கொடை இவற்றால் வருவது. எனவே, இன்பமும் பெருமிதமும் பெறக் கல்விவேண்டும். ஒருவன் இவ்விரண்டும் வேண்டுவதின்றெனின், தன்னைப் பற்றிப் பிறர் புகழ்தல் வேண்டும் என்ற எண்ணமாவது இல்லாமலிரான். இல்லற வியலின் முடிவில் திருவள்ளுவர் 'புகழ்' என்னும் அதிகாரத்தை அமைத்திருப்பது இக்கருத்தைப் புலப்படுத்தும். கொடுத்து வருவது புகழ். அடித்து வருவது பிரதாபம். கல்வி கற்றுப் பிறர்க்கு அதனைப் போதிப்பதால் வரும் புகழ் சிறந்த புகழ். ஒவ்வொருவரும் தம் வீட்டு மொழியையும் நாட்டு மொழியையும் கற்கவேண்டும். தமிழ்மொழி நமக்கு வீட்டு மொழியாகவும், நாட்டுமொழியாகவும்

இருக்கிறது; தமிழ்மொழி நம்மை வளர்த்து இன்பம் கொடுக்கும் மொழியாகும்.

தமிழ்மொழியில் குறைபாடுகள் உள்ளன என்று கூறுவாரெல்லாம் அறிவில் குறையுள்ளவர்களேயன்றி உண்மையில் மொழி குறைபாடு உடையதன்று. அன்னோர் கூற்று, வேற்று வழி நுழைந்தானொருவன் வழி தவறிவிட்டது என வழியின்மேல் பிழையேற்றிக் கூறும் கூற்றுப் போலாம். தமிழ்மொழியைத் தெய்வமென்று போற்றல் வேண்டும். "தமிழ்த் தெய்வத்தை உள்நினைந்து ஏத்தல் செய்வாம்" என்று கருணைப் பிரகாசர் பாராட்டிப் பாடியுள்ளார். மனம், வாய் இவற்றின் வினையாகிய நினைத்தல், ஏத்துதலோடு, இனம்பற்றி மெய்யின் வினையான வணங்குதலையும் உடன்கூட்டிப் பொருள் கொண்டு மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரணங்களாலும் நாம் தமிழ்மொழியைப் போற்றல் வேண்டும். "முத்தமிழும் ஆனான் கண்டாய்" எனத் திருநாவுக்கரசரும் தமிழ்மொழியைத் தெய்வமாகப் போற்றியதை அடியேன் உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். எனவே, நாமனைவரும் தமிழ்த்தெய்வ விழா அவ்வப்போது ஆற்றி இன்பம் பெறல்வேண்டும்.

தமிழ்மொழியைப் பலர் பலவிதமாகப் பாராட்டியுள்ளார்கள். தமிழின் வளப்பத்தை அருணகிரிநாதர் "புகலரியதான தமிழ்," "பெரிய தமிழே பாடி" என்று பாராட்டியிருக்கிறார். திருக்குறளின் முதற் குறளும், ஈற்றுக்குறளும் நம் நினைவில் இருத்தல் வேண்டும். அவற்றினும் முதற்குறளின் முதலெழுத்தும், ஈற்றுக்குறளின் கடையெழுத்தும், தமிழ் நெடுங் கணக்கின் முதலெழுத்தையும், ஈற்றெழுத்தையும் நினைவுறுத்துவன. இறையனார் அகப்பொருளினும்,

முதற் சூத்திரத்தின் முதல் எழுத்தும், ஈற்றுச் சூத்திரத்தின் கடையெழுத்தும், அகரமும் னகரமுமாய் அமைந்திருத்தல் நோக்கற்பாலது. (இந்நூலுள் னகர உயிர்மெய் உயிரோடல்லது மெய் இயங்காதென்பதை அறிவிக்கிறது.) இறையனார் அகப்பொருள் முதற்சூத்திரம், "அன்பின் ஐந்திணை......" எனத் தொடங்குகிறது. ஆங்கிலம்போன்ற மொழிகள் வீர உணர்ச்சியை உண்டாக்குகின்றன. நம் இனிய தமிழ்மொழி எல்லாப் பண்புகளினும் சிறந்த அன்புணர்ச்சியைத் தரும் என்பது புலப்பட அகப்பொருள் முதற்சூத்திரம் அமைந்திருத்தல் கண்டு இன்புறத் தக்கதாகும்.

தமிழ்மொழி நீங்கலாகப் பதின்மூன்று வேற்று மொழி யுணர்ந்த பத்திரிகை ஆசிரியர் ஒருவர் இருந்தார். அவர் ஒரு சமயம் சில தமிழ்ப் பாட்டுக்களைக் கேட்டு, ஈசன்பால் மனம் ஈடுபட்டு, நோய் நீங்கப் பெற்றார். அதனை அவர்தம் பத்திரிகையில் பலபடப் பாராட்டி எழுதியுள்ளார். தமிழ் பயிலாத பிறமொழி அறிஞர் தமிழ்மொழியை இங்ஙனம் பாராட்டினால், தமிழின் பெருமையைத் தமிழர்கள் அறியாரெனின் அவர்களை என்னென்று இயம்புவது!

இனி, இவ்வினிய தமிழ்மொழியைக் கற்றறிந்த புலவர்கள் பெருமை போற்றற்குரியதாம். பண்டைக் காலத்தே அரசர்களும் வள்ளல்களும் புலவர்களை ஆதரித்து இன்பம் எய்தினார்கள். "பொய்யடிமையில்லாத புலவர்க்கு மடியேன்" என்று ஒவ்வொருவரும் புலவர்களுக்கு நன்மதிப்புக் கொடுத்தார்கள். புலவர்களைப் போற்றப் போற்ற நாட்டில் நல்லறிவு

பரவும். அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய நூல்கள் உலகில் சந்திர சூரியர் உள்ள அளவும் நின்று இன்பந் தரும். செல்வரின் கொடைப்பொருள்; ஊரபிமானம் சாதி அபிமானம் இவற்றைப் பொறுத்தது. புலவர்கள் கொடைப்பொருள்; எல்லா நாட்டிற்கும் எல்லாச் சாதிக்கும் பயன்படும், புலவர்களைப் போற்றினல் அவர் காலத்து மக்கள் நற்பயன் உறுவதோடு, அவர்களுக்குப் பின்வரும் மக்களும் இறவாத இன்பம் பெறுவார்கள்.

மெய்யன்பர்களே !

பாநுகவி சுவாமிகள் என்பவர்களை நான் நன்கு அறிவேன். சிறந்த நூலாசிரியரும், உரையாசிரியரும், சொற்பொழிவாளருமாக அவர் காலத்தில் திகழ்ந்தவர். ம. தி. பாநுகவி என்னும் தம் பெயருக்கேற்ப (மதி - சந்திரன், பாநு - சூரியன், கவி - சுக்கிரன் இம்மூன்றும் அழுக்கில்லாத வெண்கிரகங்கள்.) களங்கமில்லாத தமிழறிஞராக விளங்கினுர்கள். அவர் எழுதிய ஹரிஹர தாரதம்மியம், கந்தபுராணக் கலாபூஷண உரை என்னும் நூல்களால் சிறந்த உரையாசிரியர் எனவும், திருமாற்பேற்றுப் புராணம் முதலிய நூல்களால் உயர்ந்த நூலாசிரியர் எனவும், ஆற்றிய அரிய சொற்பொழிவுகளால் நல்ல பிரசங்கி எனவும் அறிந்து கொண்டேன். இப்பெரியாரின் பெயரால் கழகமொன்று நன்முறையில் இயங்குவது கண்டு மகிழ்ச்சியடைகிறேன். தமிழ்மக்கள் யாவரும் ஆதரவு தந்து இதுபோன்ற 'கழகங்களைப் போற்றி நன்மையெய்துதல் சாலவும் நன்று.

## 45. அடிகளாரிடமுள்ள சில அரிய பண்புகள்

சிவம் பொலிந்து விளங்கும் அடிகளார், அவைக் கண் எழுந்தருளிய அளவிலேயே புன்னகையுடன் கூடி விளங்கும் திருமுக மண்டலமும், திருநீற்றினல் திகழ்ந்து விளங்கும் பரந்த நெற்றியும், மகர குண்டலங் களை மகிழ்வுடன் தாங்கி நிற்கும் திருச்செவிகளும், அனைவரையும் நோக்கி இன்முகம் காட்டும் ஆழ்ந் தொளிரும் அரிய கண்களும், செம்பொன் ஒளிவிட்டு விளங்கும் சிவலிங்க தாரணத்துடன் மிடைந்து விளங்கும் உருத்திராக்கத் தாழ்வடத்தின் தனியழகும், காண்போர் கண்களைக் கவரும் பெரும் விருந்தெனத் தோன்றும். அடிகளாரின் வருகையைக் கண்டதும் அவையில் குழுமியுள்ள அன்பர்கள் தம் வீண்பேச்சுக் களை நிறுத்திக்கொண்டு, அடிகளாரின் திருமுகத் தையே நோக்கிய வண்ணமிருப்பர்.

அடிகளார் வாய்திறந்து பேருரை வழங்கத் தலைப் படின் எளியவும், இனியவுமான மொழிகளையே கையாளுவர். அதனைச் செவிமடுப்போர் தம்மை மறந்த நிலையில் அடிகளாரின் சொல்லமிழ்தை மாந்தி மாந்திக் களிப்பர். கல்லாத எளிய மக்கட்கும், கற்ற பேரறிஞர்கட்கும் அம்மொழிகள் செவ்விதின் விளங்கி இன்பம் பயக்கும்.

> '' கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
> வேட்ப மொழிவதாஞ் சொல் ''

என்ற தமிழ் மறைக்கு இலக்கியமாக அடிகளாரின் மொழிகள் அமைந்துள்ளன எனக் கூறல் மிகை யாகாது. வடமொழியிலுள்ள கருத்துக்களைத் தென்

மொழியிலுள்ள கருத்துக்களோடு இணைத்துக்காட்டும் அழகைக் கேட்டு, வடமொழி வல்லுநர் பலர் தம் அறியாமைக்கு இரங்குவர்.

சாத்திரக் கருத்துக்களை மிக எளிதான முறையில் எடுத்துக் காட்டுகளுடன் விளக்கும்போது சாத்திர வல்லுநர் பலராலும் அறிந்துகொள்ள முடியாத பல ஐயங்கள் உள்ளங்கை நெல்லிக்கனியெனத் தெள்ளிதில் விளங்கும்.

எடுத்துக் கூறும் பொருள் எத்தகையதாக விருப்பினும், அதனின்றும் மக்களின் அன்றாட வாழ்க்கைக்குப் பயன் படுவனவாக உள்ள நற்பண்புகளை எடுத்துக்காட்டி, அவற்றைச் செயன்முறைக்குக் கொண்டு வரவேண்டிய இன்றியமையாக் கடமைகளையுங் கூறி வற்புறுத்துவர்.

சொற்பொழிவாற்ற முற்படுவோரிற் பெரும்பாலோர், சிறிதுநேரம் தம் கடமையை ஆற்றியதும் நாவரட்சி கொண்டு, சோடாவோ, பாலோ உட்கொள்ள வேண்டிய நிலைமைக்கு வந்துவிடுவர். ஆனால் அடிகளார் பல மணிக்கணக்காகப் பேச நேரினும் சிறிதளவு நீரும் உட்கொள்ளார். இச்சலியா நிலை வேறு எவரிடத்துங் காண்பது அரிது.

முடிவுரையில் அடிகளார் தம் வழிபடு கடவுளாகிய முருகப்பெருமான்மீது துதி செய்யுள் கூறி முடிப்பர். அச்செய்யுளைக் கூறியதோடு அமையாது கருத்தினையும் எடுத்துக்காட்டி உள்ளத்தில் பதிய வைப்பர். அடிகளார் அன்பர்களுடன் உரையாடுங் காலத்தும் பல அரிய கருத்துக்கள் வெளிவந்து அனைவருக்கும் பெரும்பயன் அளிக்கும்.

பல அன்பர்கள் அடிகளாரை நெருங்கி, “அடிகளாருக்கு என்னை நினைவில் இருக்கிறதோ” என்று வினவுவர். அதற்கு அடிகளார், “தங்களை இன்னாருடன் இன்ன இடத்தில், இந்தக் காலத்தில் சந்தித்ததுண்டு. அதுகாலை இன்னின்னவற்றைப் பற்றி உரையாடிக்கொண்டிருந்தோமே” என இருபது முப்பது ஆண்டுகட்கு முன்னர் நடந்த நிகழ்ச்சிகளைச் சிறிதும் மறவாது வெளியிடுவர். இது போன்ற நினைவு வன்மை எவருக்கும் பொருந்தியிருப்பது அரியதொன்றாகும்.

மடாதிபதிகள் பலர் தங்கள் மடாலயத்திலேயே இருந்து பணியாற்றி வருகின்றனர். அடிகளாரோ அவ்வாறின்றி, சைவ சமய ஆசாரியர்களைப் போன்று சிவபெருமான் எழுந்தருளியுள்ள தலங்கள் பலவற்றிற்கும் சென்று வணங்கி, சைவ சமய உண்மைகளை ஆங்காங்குள்ளவர்கட்கு எடுத்துரைத்துத் தம் பணியைச் செவ்விய முறையில் ஆற்றிவந்தனர்.

வைணவர், கிருஸ்தவர், மகம்மதியர் ஆகியோரும் அடிகளாரைக் குருவாகக்கொண்டு வழிபாடு புரிந்து வருவது அனைவரும் அறிந்ததொன்றாகும். அதனால் அடிகளாரின் சமரச நோக்கம் செவ்விதின் புலனாம்.

மாணவர்கட்குப் பாடம் போதிக்குங்கால் ஒரு செய்யுளை ஒருமுறை கூறி, விட்டுவிடும் வழக்கம் அடிகளார்பால் என்றும் இருந்ததில்லை. பிண்டம், பொழிப்பு, பதவுரை, மேற்கோள் முதலியவற்றையும் அவற்றின்கண்ணுள்ள நுண்பொருள், மாண்பொருள் முதலியவற்றையும் கேட்போர் மனதிற் படியுமாறு தெளிவாகக் கூறி முடிக்கும் ஆற்றல் அடிகளாருக்கே அமைந்துள்ள அருஞ்செயல்களில் ஒன்றாகும்.

அடிகளார்பால் ஒரு செய்யுளை ஒருமுறை கேட்பின், அச்செய்யுளின் முழுக் கூற்றினையும் மாணவர்கள் எளிதில் அறிந்துகொள்ளும் வன்மை உடையவர்கள் ஆவார்கள். பாடம் நடந்துகொண்டிருக்கும் காலத்தில் எவரேனும் அடிகளாரைக் காணவரின், அவர்களும் தாம் கூறிய செய்யுளின் கருத்தை உணர்ந்து, மேல் நடைபெறுவனவற்றைப் பின்பற்றிக் கவனிக்கும் வண்ணம் நடந்த பகுதிகளை மீண்டும் விளக்கிக் கூறிவிட்டுப் பின்னர் பாடத்தைத் தொடர்ந்து நடத்துவர். அதனால் வந்து காணும் அன்பர்களும் உடனிருந்து கேட்டு மகிழ்வர். இது அன்றாடம் நிகழ்வதொன்றாகும்.

மடாலயத்தில் நடைபெறும் விசேடங்கட்கு வெளியூர்களிலிருந்து பல அன்பர்கள் வருவர். அவர்கள் ஒவ்வொருவரையும் அடிகளார், தனித்தனியாகக் கண்டு உரையாடுவர். உடல்நலம் பற்றி வினவுவர். அது கொண்டு ஒவ்வொருவரும், தங்கள்பால் அடிகளார் தனி அன்பு கொண்டுள்ளதாகக் கூறி மகிழ்வர். செல்வர் முதல் ஏழைகள் ஈறாக கற்றோர் முதல் கல்லாதவர்கள் ஈறாக அனைவரிடத்திலுமே அடிகளார் அளவுகடந்த அன்பு காட்டி வரவேற்குஞ் செயல் போற்றற்குரியதாகும்.

அடிகளாரின் சொற்பொழிவுகளைக் குறிப்பெடுக்க வேண்டுமெனச் சில அன்பர்கள் நோட்டுப்புத்தகமும் பென்சிலும் எடுத்துச் செல்வர். சொற்பொழிவைக் கேட்குங் காலத்து, அச்சுவையின் பத்தில் மூழ்கி, வந்த செயலை மறந்துவிடுவர். அதனாலேயே அடிகளாரின் சொற்பொழிவின் அருமை பத்திரிகைகளில்கூட

வெளிவந்திலது. அது நம் தமிழ்நாட்டிற்கு ஒரு பெருங் குறையாகும். இனி எண்ணி வருந்துவதில் பயன் யாது?

## 46. திருஅதிகை கும்பாபிடேகம்

அட்ட வீரட்டானங்களுள் ஒன்ருனதும், திரிபுராதிகளை சம்மாரஞ் செய்ததும், திலகவதி அம்மையார் தொண்டு செய்ததும் அவர்தம் தம்பியார் சமண சமயத்தில் இருப்பதை வெறுத்து, அவருக்கு நல்லுணர்ச்சி தரவேண்டுமென சிவபெருமானை வேண்டிக்கொண்டதும், அப்பெருமான் அம்மையாரது வேண்டுகோளுக்கிரங்கி, அவர் தம்பியாருக்குச் சூலை நோய் வரச் செய்ததும், அவர் தம்பியார் அதற்காற்ருது வருந்தியதும், சமணர்களின் சிகிச்சை பலன் பெருதொழிந்ததும், தமக்கைபால் சார்ந்து விண்ணப்பித்துக்கொண்டதும், அவர் அளித்த திருநீறு பெற்று சூலைநோய் நீங்கப்பெற்றதும், மருள் நீக்கியார் எனும் பெயரையுடைய அவர் சிவபெருமான்மீது தேவாரம் பாடி "திருநாவுக்கரசு" எனுந் திருப்பெயர் பெற்றதுமாகிய திருவதிகை க்ஷேத்திரத்திலுள்ள சிவாலயத்தை பண்ருட்டி, வணிக சிரேட்டராகிய ஆ. அ. குப்புசாமி செட்டியார் சுமார் 45 ஆயிர ரூபாயில் பாண்டியன் கட்டுவித்த கோபுரத்தைப் பிரித்து, செவ்விய முறையில் திருப்பணி செய்து முடித்தனர். அதற்குக் கும்பாபிடேகம் செய்விப்பின் தலைவருக்கு ஊறு நேருமெனச் சோதிடர்கள் கூறினர். அதுகேட்ட செட்டியார் வகையாருக்கு மனக்கலக்கம் நேர்ந்தது. கும்பாபிடேகம் நடத்த மனம் துணியாதவர்களாய்க் காலங்கடத்தி வந்தனர்.

அடிகளார் திருக்கோவலூரிலிருந்து திருப்பாதிரிப் புலியூர் செல்லும் வழியில் திருவதிகையில் தங்கியிருந் தனர். அதுகாலை, அன்பர் பலர் இந்நிலையை அடி களாரிடம் விண்ணப்பித்துக்கொண்டனர். அடிகளார் இராஜகோபால் செட்டியாரவர்களை அழைப்பித் தனர். " திருப்பணி செய்யப்பெற்ற ஆலயம், கும்பா பிடேகம் செய்யப்பெறுமல் இருப்பது நன்றன்று. அவர்கள் செய்விக்க ஐயுறுவதால், தாங்கள் முன் னின்று, அன்பர்களின் உதவிபெற்று செய்விப்பின் நலமாகவிருக்கும் " எனக் கூறினர். திருப்பணி செய்த செட்டியாரவர்களின் உதவியை எதிர்நோக்குவது நன்றன்று என நினைத்தனர். இராஜகோபால் செட்டியாரவர்களே முன்னின்றனர். கும்பிடேகம் செய்விப்பதென முடிவு செய்தனர். அன்பர் பலரின் உதவிபெற்றனர். அதற்கு அடிகளாரின் உதவியும் ஊக்கமளிப்பதாயிற்று.

விக்கிரம ஆண்டு, ஆவணித்திங்கள் ௧0-ஆம் திகதி, (23-6-1940) ஞாயிற்றுக்கிழமை திருவதிகை ஸ்ரீ (பெரியநாயகி) திரிபுரசுந்தரி அம்மை சமேத ஸ்ரீ வீரட் டானேசுரப் பெருமானுக்குக் கும்பாபிடேகம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. திருப்பெருந்துறை மடா லாயத் தலைவர் நமசிவாயத் தம்பிரான் சுவாமிகளும், திருவதிகை குமாரசுவாமி தம்பிரான் சுவாமிகளும், சென்னை, த. ப. இராமசாமி பிள்ளையவர்களும் உட னிருந்து கும்பாபிடேகத்தை மிகச் சிறப்பாக நடத்தி வைத்தனர்.

இராஜகோபால் செட்டியாரவர்களின் நந்த வனத்தில், கும்பாபிடேகத்தின் அங்கமாக அடி களாரின் தலைமையில் மூன்று தினங்கள் மகாநாடு

கூடி மிகச் சிறப்பாக நடைபெற்றது. பேரறிஞர்கள் பலர் அரிய சொற்பொழிவுகள் பல ஆற்றினர். அடிகளாரின் முன்னுரை முடிபுரைகள் அன்பர்கள் மனதிற்கு ஆனந்தமளித்தன.

கும்பாபிடேகத்தின் நினைவுக்குறிப்பாக, சோழவல்லி, ப. பாலசுந்தர நாயனூர் அவர்கள் "திருவதிகைத் தலமான்மியமும், தேவாரப் பதிகங்களும்" என ஒரு நூல் தொகுத்து வெளியிட்டனர். அதில் சேர்க்க வேண்டுமென விரும்பிய நாயனூர் அவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி, அடிகளார், "திலகவதி அம்மை துதி" எனச் சில செய்யுள்கள் பாடித் தந்துள்ளனர். நாயனூர் அவர்கள் அவற்றைத் தம் நூலில் சேர்த்து வெளியிட்டுள்ளனர்.

அடிகளார் சிற்சில சிறு நூல்கள் தோத்திரங்களாகச் செய்துள்ளனரெனத் தெரிகிறது. அவற்றுள் அச்சுவாகனமேறியதால் இந்தத் 'திலகவதி அம்மை துதி' ஒன்றுதான் காணக்கிடக்கிறது. மற்றைய நூல்கள் என்னவாயின என அறியக் கூடவில்லை.

## 47. திலகவதி அம்மை துதி

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

உலகமெலாந் திருநீற்றின் ஒளிவிளங்க
மணிவிளங்க உவகை யோடும்
பலகலைசொ லைந்தெழுத்து விளங்கவரன்
பெயர்விளங்கப் பான்மை யோடு
தலம்விளங்க மறைவிளங்க அப்பருக்குத்
திருநீறு சாற்றித் தந்த
திலகவதி அம்மையா ரடிக்கமலம்
இரண்டினையுஞ் சிரத்திற் சேர்ப்பாம்.

நீயிலையேல் சைவமெனுஞ் சமயமெங்கே
அப்பரெங்கே நேய மெங்கே
கோயிலையாம் அடைவதெங்கே குறிக்கோளுங்
கொள்வதெங்கே குருதா னெங்கே
காயிலைவேற் பரசினைத்தாங் கரனெங்கே
தேவாரங் கருத லெங்கே
மாயிறுஞா லம்போற்றுந் திலகவதீ
நின்னடியை வணங்கி வாழ்வாம். ௨

உடன்பிறந்தார் பாலன்பும் உனைப்போல
யார்க்குண்டென் றுலகம் ஓத
உடன்பிறந்த அப்பருக்காச் சுவர்க்கசுகந்
தனையிழந்தாய் உண்மை யீதே
உடலணியும் அணிநீக்கி எவ்வுயிர்க்கும்
அருள்கொண்டாய் உன்னுங் காலை
மடனொழித்த திலகவதீ நின்னடியைப்
பெரியோர்கள் வணங்கி வாழ்வார். ௩

அப்பருமே நினையடைந்து மாசொழிந்தார்
நோயொழிந்தார் அளவில் சீர்த்தி
செப்பருந்தே வாரஞ்சொல் திறம்பெற்றார்
சிவஞானத் திறம்பெற் றுய்ந்தார்
ஒப்பதிக மில்லாத இறைநாவுக்
கரசென்ன ஓதப் பெற்றார்
எப்பொழுதும் உனைநினைத்துத் திலகவதி
யம்மைநலம் எய்தி வாழ்வாம். ௪

அடியேனை யாண்டருளும் அப்பரையே
எளியேங்கட் களித்தாய் போற்றி
கொடியேனை வாழ்விக்குந் தமிழ்மறையை
யாமோதக் கொடுத்தாய் போற்றி
அடிமுடியு மில்லாத சிவநெறியை
யாம்பேண அளித்தாய் போற்றி
பொடியேறு திருமேனித் திலகவதி
யம்மையே போற்றி போற்றி. ௫

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

கதிதனை யடைய வனந்தனை அடைவர்
　　கடலொடு கலந்துமேம் பட்ட
நதிதனை யடைவர் மலையினை யடைவர்
　　நானிலம் வலம்வரு வார்கள்
விதியிது என்னப் பலபல செய்வர்
　　விளங்கநா னிவையெலாஞ் செய்யேன்
அதிகைவாழ் திலக வதிப்பெய ரம்மை
　　அடைவனே நீகதி யாக. ௬

நேரிசை வெண்பா

திலகவதித் தாயே திருவுளமி ரங்காய்
உலகிற் பிறவா வுயர்வை—அலகிலா
இன்பத்தை யானடைய இன்றே யருள்செய்வாய்
துன்ப மகலத் தொலைத்து. ௭

## 48. தீப தெரிசனம்

அடிகளாரின் உடல்நலம் சிறிது சிறிதாகக் குன்ற ஆரம்பித்தது. உடலின் தளர்ந்த நிலையை உன்னியும், திருவோத்தூர் சென்று திரும்பிவருமளவில் வயிற்றுப் போக்கு நேர்ந்த அனுபவங் கொண்டும், இனி நீண்ட தூரம் யாத்திரை செல்வதில்லையென முடிவுசெய்தனர். சிலபகல் புலிசையில் தங்கி இன்றியமையாத செயல்களைக் கவனித்துவிட்டுத் திரும்பிவந்து திருக்கோவலூரிலேயே பல பகல் கழிப்பாராயினர். அடிகளாரின் இறுதிக்காலம் திருக்கோவலூராகவே இருத்தல் வேண்டுமென்பதும், ஆதீன முதல் குருமூர்த்திகளான ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் சமாதி பெற்றுள்ள ஆலயத்திலேயே அடிகளாரின் சமாதியும் இருத்தல் வேண்டும் என்பதும் அன்பர் பலரின்

அவாவாகவிருந்தது. இறைவன் திருவருள் வேறு விதமாக உள்ளது என்பதை அன்பர்கள் எங்ஙனம் உணர்வர்.

1941-ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் கார்த்திகை தீப மகோற்சவம் ஆரம்பமாயிற்று. அங்குள்ள அன்பர்கள் பலர் கோவல் போந்து, தீபோற்சவத் திற்கு எழுந்தருள வேண்டுமென அடிகளாரை வேண்டிக் கொண்டனர். திருவருணை அண்மையி லிருப்பது கொண்டும் அப்பொருமானைத் தெரிசிக்க வேண்டுமென்னும் ஆர்வமிக் கெழுவது கொண்டும், திருவருணை செல்ல ஒருப்பட்டனர். ஒரு நன்னாளில் அடிகளார் திருக்கோவலூரினின்றும் புறப்பட்டுத் திருவருணையை அணுகினர்.

'சத்திவிலாச சபை'யை நிறுவியவரும், சிறந்த வியாபாரியும், அடிகளாரின் வருகையை ஆவலுடன் எதிர் நோக்கியிருந்தவருமான திருவாளர், ஜவுளி, ந. சி. முனிசாமி முதலியாரவர்கள், அன்பர் பலருடன் அடிகளாரை எதிர்கொண்டழைத்துத் தமது இல்லத் திலேயே கீழ்ப்புறமுள்ள கட்டிடத்தில் எழுந்தருளச் செய்தனர். அடிகளார் திருவருணையில் தங்கியிருந்த காலங்களில் காலை நேரங்களில் அன்பர்கள் பலர் வந்து குழுமி விடுவர். அவரவர்களிடமும் அளவளாவுவர். அரிய கருத்துக்கள் கொண்ட சில நீதிகளைக் கூறுவர். அதனைச் செவிமடுப்போர்கட்குக் காலஞ் செல்வதே தெரியாது.

மாலைக் காலங்களில் திருவருணை ஆலயத்தினுள் அமைந்திருக்கும் 'சத்திவிலாச சபை' கட்டிடத்தில் மகாநாடுகூடி நடைபெறும். பல பேரறிஞர்கள் சொற் பொழிவாற்றுவார்கள். அடிகளார் ஒவ்வொருநாளும்

தலைமைவகித்து முன்னுரை, பின்னுரைகளைக் கூறி ஆங்குக் குழுமியுள்ள அன்பர்கள் அனைவரையும் ஆனந்த சாகரத்தில் ஆழ்த்திவிடுவர். இம்முறை தீபோற்சவம் வரையில் சொற்பொழிவுகள் நடை பெற்றன.

வக்கீல், நாராயணசாமி முதலியார், B.A., B.L., ஆசிரியர் - பெருமாள் முதலியார், B. A., L. T. ஆகிய அன்பர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி அடிகளார், தீபோற்சவத்திற்குப்பின் திருவருணை, முனிசிபல் ஹைஸ்கூலுக்கு எழுந்தருளினார்கள். அங்கு அடிகளாரின் தலைமையில், ‘ தமிழ்ச் சங்கம் ’ ஒன்று நிறுவப்பெற்றது. பல அன்பர்கள் சொற்பொழிவாற்றினர். தமிழின் தொன்மையையும், அதன் இயற்கை வளப்பத்தையும், அதன்கண் தோன்றும் இலக்கண வமைதியும் இன்பமும் இத்தகையது என்பதையும் விளக்கிக் கூறினர். அடிகளார் அன்று ஆற்றிய சொற்பொழிவின் இனிமை இன்றும் அன்பர்களின் செவிகளில் ஒலித்துக் கொண்டு இருக்கின்றது.

## 49. திரிசிரபுரம் சைவ சித்தாந்த சமாஜம்

அடிகளார் திருவருணையினின்றும் மீண்டபின் திருக்கோவலூரில் தங்கியிருந்தனர். சென்னை, சைவ சித்தாந்த மகா சமாஜத்தார் அடிகளார்பால் வந்து தங்கள் சமாஜத்தின் முப்பத்தாறுவது ஆண்டு நிறை’ விழாவைத் திரிசிரபுரத்தில் நடத்த ஏற்பாடு செய்துள்ளதாகவும். அதற்கு அடிகளார் தலைமை தாங்கி சிறப்பித்தருளுதல்வேண்டுமெனவுங் கேட்டுக்கொண்டனர்.

நீண்டதூர யாத்திரையை நிறுத்திக்கொள்ள வேண்டுமென முடிவு செய்துள்ள அடிகளாருக்கு

இது ஒரு சோதனைபோல் தோன்றிற்று. தமிழையும் சைவ சமயத்தையும் வளர்க்க முன்வந்து, அதற்கென உடல், பொருள், ஆவி மூன்றையும் தத்தம் செய்வதென உறுதிக்கொண்டுள்ள அடிகளார், இது முருகப்பெருமான் திருவருள் போலும், என எண்ணி இசைந்தனர். அதற்குரிய முன்னேற்பாடுகள் அனைத்தும் சிறப்புற நடைபெற்றன.

அடிகளார் ஒரு நன்னாளில் திரிசிரபுரத்திற்குப் பிரயாணமாயினர். இடையிலுள்ள நகரங்களில் தங்கினர். ஆங்காங்குள்ள அன்பர்களால் உபசரிக்கப் பெற்றனர். புதுவை, கிரந்தே—சிவ. சச்சிதானந்தம் செட்டியார் அவர்களின் மருகரான அ. வேணு கோபால் செட்டியார் அவர்கள் பெண்ணாகடத்தில் அடிகளாரை இருக்கச்செய்து உபசரித்தனுப்பிய அன்புடைமை குறிப்பிடத்தக்க தொன்றாகும். இம் முறையில் அன்பர் பலரின் உபசரணையைப் பெற்ற அடிகளார் ஆங்காங்கு சொற்பொழிவாற்றி, அனைவரையும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்குவித்துக்கொண்டு, திரிசிரபுரம் சென்று அடைந்தனர்.

தற்போது ஆறும்முறை அடிகளாராக புலிசை-ஞானியார் மடாலயத்தில் ஆசாரிய பீடத்தெழுந் தருளியிருப்பவர்களும், அதுகாலை, திருச்சி, நாஷனல் காலேஜில் தமிழ்ப் பண்டிதராகத் தொண்டாற்றி வந்தவர்களுமாகிய, திரு. ப. கந்தசாமி ஐயரவர்கள் ; க. அரங்கசாமி முதலியார், மு. நடேச முதலியார், டி. எம். நாராயணசாமி முதலியார் ஆகிய பல அன்பர்களுடன் வந்து அடிகளாரை எதிர்கொண்டு வரவேற்று அழைத்துச்சென்றனர்.

1941-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம், 25-ஆம் திகதி முதல், சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் முப்பத்தாரும் ஆண்டு நிறைவிழா அடிகளாரின் தலைமையில் தொடங்கப்பெற்றது. அறிஞர்கள் பலர் சொற்பொழிவாற்றினர். அவரவர்களின் சொற்பொழிவைப் பின்பற்றி அடிகளார் கூறிய முடிப்புரை இன்றும் அன்பர்களின் காதுகளில் ஒலித்து மகிழ்ச்சி செய்துகொண்டிருக்கின்றன.

இம்முறையில் மூன்று தினங்கள் சமாஜக்கூட்டம் மிகச் சிறந்த முறையில் செவ்வனே நிறைவேறியது. தலைமைதாங்கி யருளிய அடிகளாரின் சொல் லினிமையை அன்பர்கள் மாந்தி மாந்தி ஆனந்தக் கடலில் மூழ்கியிருந்தனர்.

அடுத்தாற்போல் திரிசிரபுரம், சைவ சித்தாந்த சபை நடைபெற்றது. அதிலும் அடிகளார் தலைமை வகித்துச் சொற்பொழிவாற்றி அனைவரையும் மகிழ்வித்தனர். ஆண்டு விழாக்கள் முடிவுற்ற பின்னரும் அடிகளாரின் சொல்லமுதத்தைப் பருக அன்பர்கள் திரள் திரளாக அடிகளாரின் இருப்பிடத்திற்கு வந்துகொண்டிருந்தனர்.

## 50. திருமணம் நேர்தல்

1939-ஆம் ஆண்டு, அடிகளார் சென்னை சென்றிருந்தபோது வெப்பம் மிகுதியால் கட்டி தோன்றி இரண சிகிச்சை நடைபெற்று, தவ உடல் படுக்கையில் இருந்து வருந்திய காலத்தில், அடிகளாரின் அண்மையில் இருந்து அன்னைபோல் உபசரித்து வந்தவர்களும், அடிகளாரின் மாணவியர் கூட்டத்துள், தலைசிறந்து விளங்குபவர்களும், கந்தரனுபூதி எனும் நூலை அடி

களாரிடம் பாடங்கேட்ட வண்ணம் குறிப்புரை எழுதி அச்சிட்டு, பொன் விழாவில் அன்பர்கட்கு வழங்கிய வர்களும், இராவ்பகதூர், திரு. இராஜாபாதர் முதலி யாரவர்களின் செல்வப் புதல்வியாரும், டிப்டி இன்ஸ் பெக்டர் ஆப் லோகல் போர்டாக பணிபுரியும் திரு. கே. அரங்கசாமி முதலியாரவர்களின் வாழ்க்கைத் துணைவியாருமாகிய திருமதி க. ர. ஆதிலட்சுமி அம்மையாரவர்கள், தம் கணவனுரை முன்னிட்டுக் கொண்டு அடிகளாரை அண்மி, தம் செல்வக் குமாரி யாகிய திருமதி காமாட்சியம்மை B. A. அவர்கட்கு (1942, பிப்ரவரி - விஷு, தை) அடுத்த மாதம் திருச்சியிலேயே திருமணம் நடத்த ஏற்பாடுகள் செய்யப் பெற்றுவருகின்றனவென்றும் அடிகளார் அதுவரை இவ்விடமே எழுந்தருளியிருந்து மண மக்களை வாழ்த்தி யருளவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டனர்.

உண்மை யன்புடைய அம்மையாரவர்களின் வேண்டுகோளை அடிகளார் அன்புடன் ஏற்றுக்கொண் டனர். திருமணத்தில் வழங்குவதற்கென, "காமாட்சி யம்மையார் திருமணம்" என ஒரு கட்டுரை எழுதி அதனை அச்சிடவும் ஏற்பாடு செய்தனர். சில பகல் திரிசிரபுரத்திலேயே தங்கியிருந்தனர்.

## 51. திருவாவினன்குடி செலவு

முருகப்பெருமான் திருவருள் முன்னின்று உந்திய தால் அடிகளாருக்கு ஓர் எண்ணம் தோன்றியது. அது, "பழநியம்பதி சென்று, தைப்பூசத்தன்று முருகப்பெருமானைக் கண்குளிர தெரிசித்துவிட்டுத் திருமணத்திற்குத் திரும்பி வந்துவிடலாம்" என்பதே

யாகும். அக்கருத்தை அடிகளார் அன்பர்கட்குத் தெரிவித்தனர்.

அடிகளார், 'பழநி' சென்று, தைப்பூச விழாவிற்குப்பின் திருமணத்திற்கு வந்து சேருவர் என்றே அனைவருங் கருதினர். இறைவன் திருவுள்ளக்கிடக்கையை எவரே உணர்வர். அன்பர்களும் ஆவலுடன் பிரயாண ஆயத்தங்கள் பலவும் செய்து தந்தனர். அடிகளார் திரிசிரபுரத்தினின்றும் 19-1-1942 திங்கட்கிழமையன்று காலையில் புறப்பட்டனர். மணப்பாறை வேடச்சந்தூர் வழியாகச் சென்றனர். 23-1-1942 வெள்ளிக்கிழமையன்று பழநித் திருத்தலத்தையடைந்தனர். திரு. ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை உள்ளிட்ட அன்பர்கள் பலர் எதிர்கொண்டு, வந்து அடிகளாரை வரவேற்று அழைத்துச் சென்றனர். சிவகங்கை ஜமீன்தாரரவர்கள் விடுதியில் அடிகளாரை இருக்கச் செய்தனர். அடிகளார் எவ்விதக் குறைவுமின்றி மகிழ்ச்சியுடன் ஆங்கு எழுந்தருளியிருந்தனர்.

பழநி சைவ சித்தாந்த சபையின் முதல் ஆண்டு நிறைவு விழா அடிகளாரின் தலைமையில் கொண்டாட ஏற்பாடு செய்யப்பெற்றது. அடிகளாரும் அவர்களின் விருப்பத்திற்கிணங்க தலைமைதாங்கினர். சொற்பொழிவாற்றினர். அன்பர்கள் உள்ளங்குளிர்ந்தனர்.

ஆலயத்தில் நடைபெறும் திருவிழாவின் அங்கமாகத் திருவிழாச் சொற்பொழிவுகளை நடத்தினார்கள். ஒவ்வொரு நாளும் அளவிறந்த மக்கள் வந்து கேட்டு மகிழ்வெய்தினர்.

30-1-1942 வெள்ளிக்கிழமையன்று அடிகளார் தண்டபாணிப் பெருமானுக்கு அபிடேக ஆராதனை செய்வித்தனர். அன்பர்களுடன் மலைமீது ஏறினர்.

முருகப்பெருமானைக் கண்குளிரக் கண்டனர். ஆனந்த பாஷ்பம் அரும்ப வணங்கினர். அன்று மாலை, ஊர்க் கோயிலில் சொற்பொழிவு நடைபெற்றது. இரவு முருகப்பெருமான் வெள்ளி ரதத்தில் திருவுலாப் போந்ததையுங் கண்டு தெரிசித்து உள்ளமுவந்தனர்.

அடுத்த நாளாகிய 31-1-1942 சனிக்கிழமை மாலை ஸ்ரீசாது சுவாமிகளின் வேண்டுகோளின்படி அடிகளார், 'சிவராஜயோகம்' என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றினுர்கள். தென்முகக் கடவுள் முன்னிருந்த சனகாதி முனிவரர்கள் போன்று, அன்பர்கள் அனைவருமே தம்மை மறந்தவர்களாகி அடிகளாரின் சொற்பொழிவிலேயே ஈடுபட்டு ஆனந்த வாரியில் அமிழ்ந்திருந்தனர். இதுவே அடிகளார் புரிந்த இறுதிச் சொற்பொழிவாகும். இரவு சுமார் 9½ மணிக்குச் சொற்பொழிவு முற்றுப் பெற்றது.

பின்னர் அடிகளார் மலைமீது ஏறினர். முருகப் பெருமானின் அர்த்த ஜாம தெரிசனத்தையும் கண்டு வணங்கினர். திரும்பி வந்து தமது இருப்பிடமாகிய சிவகங்கை ஜமீன்தாரின் விடுதியை அடைய இரவு பன்னிரண்டு மணிக்குமேல் கடந்துவிட்டது. உடன் போந்த ஆலய பரிபாலன அதிகாரிகளுடன் சிறிது நேரம் அளவளாவிக் கொண்டிருந்து, அவர்கட்கு விடை கொடுத்து அனுப்பினர்.

அன்றிரவு அடிகளார் துயில் கொள்ளவே யில்லை. பிரயாணத்திற்கு ஆயத்தம் செய்யுமாறு பணியாளர்களுக்குக் கட்டளை யிட்டனர். அவரவர்களும் மூட்டை கட்டுவதில் முனைந்திருந்தனர். அடிகளார்

சிறிதும் ஓய்வு எடுத்துக் கொள்ளாமல் இன்றியமையாது எழுத வேண்டிய மடாலய கணக்குகளை எழுதி முடித்தனர்.

## 52. ஆண்டவன் வேட்கையும் அடியவர் ஏக்கமும்

உலகில் மக்கள் எண்ணுகிறபடி எதுவும் நடைபெறுதல் இல்லை என்பது கண்கூடு. கைகூடும் காலங்களில் தம் தம் ஆற்றலால் நேர்ந்தது என்று எண்ணுபவர்கள், தவறிய காலத்தில், 'கடவுள் திருவருட் செயல் போலும்' எனக் கூறுவதை நாம், பன்முறை கேள்வியுற்றுள்ளோம். இது கொண்டாவது அவர்கட்கு ஆஸ்திக புத்தி தோன்றுவது மகிழ்ச்சிக்குரியதேயாகும்.

அடிகளாரின் சொல்லமுதத்தை அருந்தி யின்புற, அன்பர்கள் கொண்டுள்ள ஆவலினும், ஆண்டவனுக்கு மிக்கு இருந்ததெனத் தெரிகிறது. முற்று முணர்ந்த முழுமுதற் கடவுளின் வேட்கையை மறுக்க எவர்தாம் வல்லவர். இந்நிலையில் அடிகளார் திரிசிரபுரம் போந்து திருமண விழாவினை நடத்தி வைப்பர் என அன்பர்கள் ஆர்வங் கொண்டிருந்தனர். பழத்திற்கு ஆசைபட்டு, பரமன் மீது வெறுப்புக் கொண்டு, தெண்டாயுதபாணியாக எழுந்தருளி யிருக்கும் பழநீயாண்டவன், நம் அடிகளாராகிய இம் கனியைத் தம்மிடமே வைத்து ஆட்கொள்ள திருவுள்ள மியைந்து விட்டனன் போலும்.

ஆண்டவனின் அருளடியார்களான சிவகணங்கள் பக்தர்களை அழைத்துச் செல்ல வருவது போன்று,

விடியற்காலை சற்றேறக்குறைய மூன்றுமணிக்கு தேவஸ்தான அதிகாரிகள் மேள வாத்தியங்களுடன் அடிகளாரை வழியனுப்ப வந்து சேர்ந்தனர்.

உடன் போந்திருந்த சென்னை-பாலசுப்பிரமணிய முதலியார், திருவெண்ணெய் நல்லூர் - சின்னசாமி ரெட்டியார், புலிசை - இராஜேசுவரனுர், உறையூர் - உலகநாத செட்டியார் ஆகிய அன்பர்கள் பால், "முருகன் திருவருள் முற்றுவிக்குமாயின் வியாழ னன்று திரிசிரபுரத்திற் காண்போம்" எனக் கூறி விடை பெற்றுக் கொண்டனர்.

"வேயுறு தோளி பங்கன்" என்ற தேவாரப் பதிகத்தையும், "நாளென் செய்யும்" என்ற கந்தரலங் காரப் பாடலையும் உரத்த குரலில் கூறினர். மலையை நோக்கிக் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருக வணக் கஞ் செய்தனர். பல்லக்கின்மீது ஆரோ கணித்தனர். மேள வாத்தியத்துடன் பல்லக்குப் புறப்பட்டது. வண்டியில் சமான்களுடன் பணியாளர்களும் பின் தொடர்ந்தனர். தேவஸ்தான அதிகாரி திரு. ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளையவர்களும் மற்றைய அன்பர் களும் சிறிது தூரம் சென்று வழிவிட்டுத் திரும்பினர். மேளவாத்தியக்காரர்கள் நகர எல்லையைக் கடந்து வழிவிட்டுத் திரும்பினர். அடிகளார் மலையை நோக்கிய வண்ணமாகவே பல்லக்கில் அமர்ந்திருந்தனர். பல்லக் கும் வண்டியும் முன்பின்னுகப் போய்க்கொண்டிருந் தன.

தை மாதம் விடியற்காலை ஆகையின் குளிர் மிகுதி யாகக் காணப்பெற்றது. குளிரின் வேகத்தை அடிக ளார் கூடிய வரையில் சமாளித்துக் கொண்டு சென்ற

னர். வள்ளல் ஆய் என்பவன் வாழ்ந்ததான "ஆய்குடி" என்னும் ஊர் வழியாகச் சென்றனர். 'சிந்தலவாடன்பட்டி' என்பது பழநீயம்பதிக்கு ஏழுகல் தூரத்தில் உள்ளது. அதன் அருகில் வந்துகொண்டிருக்கும் போது குளிர் அதிகமாக ஊறு செய்யத் தொடங்கியது. அடிகளாரால் தாங்க முடியவில்லை. பொழுது புலரத் தொடங்கியது கண்டனர். பல்லக்கை நிறுத்துமாறு பணித்தனர். பல்லக்கு சுமப்போர் பல்லக்கைத் தென்புறமாக இறக்கி வைத்தனர். அடிகளார் குளிரினால் துன்புறும் நிலையை உணர்ந்தனர் ஓவென்று கதறி விட்டனர். "ஏன் துக்கப்படுகிறீர்கள். எனக்கு இவ்விடமே இறுதி நேர வேண்டும் என்பது முருகப் பெருமான் திருவுள்ளமாயின் நீங்கள் யாது செய்தல் கூடும்" என அவர்கட்கு ஆறுதல் கூறிக்கொண்டிருந்தனர்.

## 53. பழநீ யாண்டவன் பதமலரடைதல்

சாமான்கள் ஏற்றிய வண்டியும் பணியாளர்களும் வந்து சேர்ந்தனர். திருக்கோவலூர் மடாலயத்தில் பூசை புரியும் சொக்கலிங்க ஐயரவர்கள் அடிகளாரைக் கண்டனர். நிலைமை யுணர்ந்தனர். வெந்நீர் தயார் செய்தனர். அடிகளார் காலைக் கடனை முடித்தனர். பல்லக்கின் மீது, "சண்முகா" எனக் கூறி அமர்ந்தனர். சிறிது வெந்நீர் உட்கொண்டனர். அடிகளாரின் உடல்நிலை மாறுபாடு அடையத் தொடங்கியது. பணியாளர்கள் பதறினர். கண்ணீர் வடித்தனர். அவர்கட்கு ஆறுதல் கூறினர். "உடல்நிலை குணமில்லையென அரங்கசாமி முதலியாருக்கு அறிவி

யுங்கள்" என்ற சொற்களே கேட்டன. அங்குச் சூழ்ந்துள்ளவர்கள் பன்முறை விளித்தனர். விடை வந்திலது. ஐயங் கொண்டனர். பழநீ செல்லும் ஒரு கார் மூலம் நடேசன் என்பவன் அனுப்பப் பெற்ருன்.

பழநீயினின்றும் பல அன்பர்கள் டாக்டரை அழைத்துக் கொண்டு விரைந்து வந்தனர். டாக்டர் அடிகளாரைப் பரிசோதித்துப் பார்த்தனர். அவர் கண் கலங்கிற்று. எவ்வாறுள்ளது? எவ்வாறுள்ளது? என ஒவ்வொருவரும் டாக்டரை நோக்கி ஆவலுடன் கேட்டனர். அதற்கு டாக்டரவர்கள் கூறிய மறு மொழி பின்வருவன வாகும்.

"Diabetic Coma - suddenly developed - no blood in his body at all - wonder how he was able to lecture for four hours daily for a whole week - so sorry - can't help - heart failure."

அதனைக்கேட்டதும் அனைவர் உள்ளமும் அனலி லிட்ட மெழுகாயது. அடிகளார் முருகப் பெருமான் திருவடியில் இரண்டறக் கலந்தனர் என்பதை உணர்ந் தனர். அழுது புரண்டனர். ஆவதென்ன! தைப் பூச நாளில் அடிகளாருக்குப் பரிபூரணநிலை வாய்த்தது எவருக்கும் கிடைக்கவொண்ணு பெரும் பாக்கிய மெனச் சிலர் எண்ணி எண்ணி வியந்தனர். அடிக ளாரைப் போன்ற தமிழ்த் தெய்வத்தை இனிக் காண முடியுமா எனப் பலரும் ஏங்குவாராயினர்.

அடிகளாரின் திருமேனி பல்லக்கின் மூலமே 'ஒட்டன் சத்திரம்' என்னுமிடத்திற்குக் கொண்டு வரப்பெற்றது. திருச்சி, புலிசை, சென்னை முதலிய

இடங்கட்குத் தந்திகள் பறந்தன. திருச்சியிலிருந்து திரு. க. அரங்கசாமி முதலியாரவர்களும், திரு. ப. கந்தசாமி ஐயரவர்களும் மோட்டார் மூலம் வந்து சேர்ந்தனர்.

திருமேனியை மோட்டாரில் எடுப்பித்துக் கொண்டு திருச்சி சென்றனர். திருச்சியில் சில நிமிடங்கள் மோட்டார் நின்றது. பல அன்பர்கள் வந்து தெரிசித்தனர். பின்னர் மோட்டார் அவ்விடமிருந்து புறப்பட்டது. அன்று (1 - 2 - 42 ஞாயிற்றுக் கிழமை) இரவு சுமார் பதினொரு மணிக்குத் திருப் பாதிரிப்புலியூர் மடாலயத்திற்கு வந்து சேர்ந்தது.

மடாலயத்தின் முன்னர் ஏராளமான அன்பர் களின் தொகுதி நிரம்பியிருந்தது. அவரவர் கண்களி லும் நீர்த்துளிகள் காணப்பெற்றன. அடிகளாரின் திருமேனி கொலுவிருத்தப் பெற்றது. தந்திகளும் அச்சிட்ட தாள்களும் ஆங்காங்கு பறந்தன. பல இடங்கட்கு ஆட்களுஞ் சென்றனர்.

## 54. புதிய பட்டமும், பொன்மேனி யடக்கமும்

1942 - ஆம் ஆண்டு, பிப்பிரவரி மாதம், 2 - ஆம் திகதி காலை, கதிரவன் ஒளி மேகங்களால் சூழப் பெற்று, மங்கலாகத் தோன்றியது. மக்கள் கண்ணீர் விடுவது போன்று மரங்களினின்றும் பனித்துளிகள் வீழ்ந்து கொண்டிருந்தன. இரயில் வண்டியும், பஸ் வண்டிகளும் மக்களை ஏற்றிவந்து இறக்கிவிட்டு, அவர் களின் துக்கத்தைக் காண சகியாதவைகள் போல் வேறு இடங்கட்குச் சென்று கொண்டிருந்தன.

மக்கள் மனத்தில் மகிழ்ச்சிக்குறி எங்கணும் காணப் பெறவில்லை. இயற்கைத் தெய்வமே துக்கத்தில் மூழ்கி யிருப்பது போல் காணப்பெற்றது.

திருப்பாதிரிப்புலியூர், பாடலேசுவரர் சந்நிதி வீதியில் செல்லமுடியா வண்ணம் மக்கள் கூட்டம் நிரம்பியிருந்தது. மக்கள் மடாலயத்திற்குள் செல் வதும் வெளி வருவதுமாக இருந்தனர். உள் சென்றோர் அடிகளாரின் திருஉருவத்தைத் தெரிசித்து வருந்தினர். மற்றவர்கள் காண இடந்தர வேண்டு மெனும் நோக்கத்தோடு வெளி வருவோர் கண்களி னின்று நீர் தாரை தாரையாக வடிந்து கொண் டிருந்தது. ஒவ்வொரு வீட்டின் முன் புறங்களிலும் மக்கள் அமர்ந்திருந்து அடிகளாரின் அளவிடற்கரிய புலமையையும், நிலையாமையையும் பற்றித் தங்கள் தங்கள் மனம் போனவாறு பேசிக்கொண்டிருந்தனர்.

அடிகளாரிடம் ஆப்த நண்பர் ஆகவும், அணுக் கத்துத் தொண்டராகவும் இருந்து அன்பு பூண்டொ ழுகியவரும், அடிகளாரின் மாமாவுமாகிய "பழநீ ஐயர்" அவர்களின் புதல்வராகிய திருச்சி, நாஷனல் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் "திரு. கந்தசாமி ஐயர்" அவர்களே அடுத்த பட்டத்திற்கு உரிமையுடையவர் என அன்பர்கள் பலரும் கூடித்தேர்ந்தெடுத்தனர். 1929 - ஆம் ஆண்டில் அடிகளாரின் முதுகில் கட்டி கண்டு துன்புற்ற காலையில் தம் திருக்கரத்தினு லேயே எழுதி வைத்திருந்த உயிலும் அதற்குத் துணை புரிவதாயிற்று.

மடாலய சம்பிரதாயப்படி, அடிகளாரின் திரு மேனியை ஓர் உயர்ந்த பீடத்தில் எழுந்தருளுவித்

தனர். திரு. கந்தசாமி ஐயரவர்களை அடிகளாரின் திருவடியின் கீழ் இருக்கச் செய்தனர். காஷாய மளித்தனர். அடிகளாரின் திருவடி தீர்த்தம் திரு கந்தசாமி ஐயரவர்கள் முடிமீது படும்படி அபிஷேகம் செய்விக்கப்பெற்றது. உயிலில் கண்டபடி "சிவ சண்முக சத்திய ஞான சிவாசாரிய சுவாமிகள்" என்னும் வைதிகப் பெயரும் புதிய அடிகளாருக்குச் சூட்டப்பெற்றது.

வடமட்டம் சிவிகையில், அடிகளாரின் திரு மேனியை எழுந்தருளச் செய்வித்து, பகல் பதினொரு மணிக்கு எடுத்துக்கொண்டு சென்றனர். சில பேரறி ஞர்களும்,செல்வர்களும்,மாணவர்களும் தங்கள் தங்கள் அன்பிற்கு அறிகுறியாக சிறிது தூரம் சிவிகையைத் தாங்கிச் சென்றனர். வண்டிப்பாளையத்திலுள்ள சமாதி தோட்டத்தில் சிவிகையை இறக்கி வைத்தனர். அறிஞர்கள் பலர் சொற்பொழிவாற்றினர்.

வண்டிப்பாளையம் தோட்டத்திலுள்ள ஆலயத் தில்; மூலஸ்தானத்தில் இரண்டாம் முறை அடிகளா ரும், நந்திகேசுவரர் உள்ள இடத்தில் மூன்றும் முறை அடிகளாரும், விநாயகர் ஆலயம் இருக்கவேண்டிய தென் மேற்கு மூலையில் நான்காம்முறை அடிகளாரும், முறையே சமாதி செய்யப் பெற்றுள்ளனர்.

முருகப்பெருமான் மீது நீங்காத பக்தியுடைய நம் ஐந்தாம் முறை அடிகளாரின் திரு மேனி, முருகப் பெருமான் ஆலயம் அமைக்க வேண்டிய வடமேற்கு மூலையில் அடக்கம் செய்யப்பெற்றது. புதிதாகப் பட்டமேற்ற ஆறும் முறை அடிகளாரே தமது திருக்

கரத்தால் வைதிக கிரியைகள் அனைத்தும் செய்து முடித்தனர். மாலை சுமார் நான்கு மணிக்கு சமாதி கிரியைகள் முற்றுப்பெற்றன.

## 55. சிவலிங்கப் பிரதிட்டை

1942 - ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம், பதினேழாம் திகதி, அடிகளாரின் சமாதிக்கு பூசை புரிவிக்கும் நோக்கத்துடன் பல அன்பர்கள் புலிசை மடாலயத்திற்கு வந்து குழுமினர். காலையில் அந்தணர்கட்கு அரிசி வழங்கப்பெற்றது. பின் வண்டிப்பாளையத்திலுள்ள சமாதிதோட்டத்திற்கு அனைவரும் சென்றனர். அடிகளாரின் சமாதியின் மீது சிவலிங்கப் பிரதிட்டை செய்யப்பெற்றது. அபிடேக ஆராதனைகள் நடைபெற்றன. அன்பர்கள் அனைவரும் கண்ணும் கண்ணீருமாயிருந்து துதி பாடல்கள் பல கூறினர். பகல் சுமார் ஒரு மணிக்கு வைதிக கிரியைகள் முற்றுப் பெற்றன.

மாலை 4 மணிக்கு மடாலயத்தின், புதிய ஞானியாரடிகளின் தலைமையில் அனுதாபக் கூட்டம் கூடி நடைபெற்றது. அன்பர்கள் பலர் மனமுருகக் கண்ணுங் கண்ணீருமா யிருந்து சொற்பொழிவாற்றினர். அனுதாபக் கடிதங்களும் தந்திகளும் படிக்கப் பெற்றன. பல அறிஞர்கள் இயற்றிய இரங்கற் பாக்கள் படிக்கப் பெற்றன.

செந்தமிழ்ச் சூரியன் போலிருந்தனர். அன்பர்களின் அஞ்ஞான விருளை நீக்கினர். ஞானவொளி நல்கினர். அத்தகைய அடிகளாரின் மறைவு கேட்டுத்

தமிழுலகமே துக்கசாகரத்தில் மூழ்கியது. அடிகளாரின் வாக்கு வன்மையையும் அனைவரிடமும் காட்டிய பேரன்பையும் எவர்தாம் வியந்து ஓதாதொழிவர்.

முருகப் பெருமான் திருவவதாரமென்று கூறப் பெறும் திருஞான சம்பந்த சுவாமிகள் திருவவதாரஞ் செய்த திரு நக்ஷத்திரமாகிய வைகாசித் திங்கள், மூல நாளே அடிகளாரின் தோற்றமாகும். முருகப் பெருமானுக்கு உகந்த நாளாகிய தைப்பூசத்தன்று பழநீ மலையருகில், அப்பெருமானைத் தெரிசனம் செய்தபின் பரிபூரண முற்றுள்ளனர். சமாதி ஆலயத்தில், முருகப் பெருமான் எழுந்தருளி யிருக்க வேண்டிய ஸ்தானத்திலேயே அடிகளாரின் திருமேனியும் அடக்கம் செய்யப் பெற்றுள்ளது. இவை அனைத்தும் எவருக்கும் கிடைத்தற்கரியதொரு பெரும் பேறாகும் எனப் பல அன்பர்கள் கூறிய மொழிகள் எவரும் மறுக்கக்கூடாத உண்மைகளாம்.

அடிகளாரின் தூல உடல் மறைந்தது. ஆனால் புகழுடல் தமிழுலகமும், சைவ உலகமும் உள்ளவரையில் மறையாது. அது கோடி சூரியப் பிரகாசத்துடன் மிளிர்ந்து, அன்பர்கட்கு ஊக்கமளித்துக்கொண்டிருக்கும் எனப் பலர் கூட்டத்தில் கூறினர்.

அவர்களின் பேரெண்ணப்படியே அடிகளார் தோன்றாத் துணையாகவிருந்து, அவர்கள் பால் அன்புடைய மாணவர்கட்கும் மற்றவர்கட்கும் அறிவு புகட்டி, அனைவரையும் நன்னெறியில் உய்ப்பிப்பாராக. முருகப்பெருமான் திருவருளும் அதற்குத் துணை புரிவதாக.

## 56. அடிகளார் நினைவுக் குறிப்புக்கள்

(கோவை கிழார்)

[பின் வருபவை அடிகளாரைப்பற்றிய அன்பர்கள் கருத்து]

1. நினைவு:—அடிகளாரது தோற்றம் மிகவும் கம்பீரமானது. அதனைக் கண்டு ஆனந்தித்தவர்கள் அவர்களது பதத்திற்கு ஏற்ற ஒரு தோற்றம் என்று எண்ணுவார்கள். ஒருமுறை பார்த்த பின்பு அத்தோற்றத்தை எக்காலமும் மறக்க மாட்டார்கள். அதுபோலவே அடிகளாரும் ஏனையோரை ஒருமுறை பார்த்த பின்பு எக்காலமும் மறக்கவே மாட்டார்கள். அவ்விதமான அபார சக்தி வேறெவரிடத்தும் பார்த்தல் அரிது. முதல்முறை அடிகளாரை அடியேன் கண்டது கோவைக் கடுத்த திருப்பேரூர் மாசிமகத் திருவிழாவின் போது. அப்போதுதான் அடிகளும் என்னை அறிந்தது. பிறகு பல ஆண்டுகளுக்குப் பின்பு திருவதிகையில் சமாஜம் கூடினபோது அடிகள் அந்த ஆண்டு சமாஜப் பிரசுரத்தை வெளியிட விரிவுரை நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள். அக் கூட்டத்திற்கு அடியேன் அருகிற் செல்லவே அடிகள் கண்டவுடன் என்னை விளித்து அழைத்தார்கள். பல ஆண்டுகளுக்குப் பின் உருவம் சிறிது மாறி இருக்கவும் அடையாளம் கண்டு பிடித்தது சிறிது வியப்பாகவே இருந்தது. கூட்டத்திற்குப் பின் பேசியபோது பழைய நினைவு நன்றாக இருந்ததைக் கண்டு பெரும் வியப்புற்றேன். அடிகளாரது நினைவின் பெருமையை எவரும் அளக்க முடியாது.

2. அன்பும் உபசரணையும்:—மக்கள் யார் வந்தாலும் அன்புகாட்டி இன் சொல் கூறி உபசரணையும்

செய்வார்கள். செல்வர், பாமரர், முதியவர், இளைஞர், பெண்பாலர், ஆண்பாலர், யார்வரினும் நெஞ்சு ஆர்ந்த இன் சொல்லால் ஏற்பார்கள். ஆகவே, ஒருமுறை கண்டோர்கள் மறுமுறையும் கண்டு அடிகளுடைய ஆசிபெற வேண்டுமென்றே எண்ணுவார்கள். வந்தவர்களை வெறும் வாய்ப் பேச்சால் உபசரிப்பதே அன்று. அன்னமும் இட்டு மகிழ்விப்பார்கள். தாமே இருந்து ஊட்டுவதை வேறு எந்த ஆதீனத்தில் காண முடியும்? ஒருமுறை நானும் எனது நண்பரொருவரும் திருப்பாதிரிப் புலியூர் சென்றிருந்தோம். முன் தகவல் கொடுக்கவில்லை. அடிகள் தாம் நடத்தும் பாடசாலையில் மாணவர்களைப் பரீக்ஷை செய்து கொண்டிருந்தார்கள். நாங்கள் அவ்வூர் சத்திரத்தில் போய்த் தங்கினோம். எப்படியோ, அதனைக் கேள்வியுற்ற அடிகள் எங்களுக்கு ஆள் அனுப்பித் தங்கள் ஆதீனத்துக்கழைத்துத் தாமே இருந்து விருந்து அளித்தார்கள் மற்றொரு முறை திருவண்ணாமலையில் எங்களுக்குத் தாமே விருந்தளித்த ஒரு அன்புத் தோற்றத்தை என்ன என்று கூறலாம். அதனை எக்காலமும் மறக்க முடியாது.

3. பேச்சின் திறமை:—அடிகளைப்போல பேசும் திறமை வாய்ந்தவர்கள் தமிழ்நாட்டில் வேறொருவர் உண்டோ என்பது ஐயம். பல மணிக்கணக்காகப் பல நாள்களும் பேசக்கூடிய வன்மை எவர்க்கு உளது! பல்லாயிரக் கணக்கான மக்களும் வாய் திறந்த வண்ணமாக உட்கார்ந்து கேட்கும்படியாகப் பெருஞ் சொற்பொழிவுகள் நிகழ்த்துவார்கள். கற்றோரும் கல்லாதாரும் பெரும் பயனை அடைந்தே செல்வார்கள்.

அவர் பேச்சில் வெறும் பேச்சுகள் இல்லாமல் பொருள் வாய்ந்த பேச்சுகளாகவே காண்போம். கோவையில் "வள்ளித் திருமணம்" என்ற பொருள் பற்றி மூன்று மணி நேரம் மூன்று நாள்கள் பேசினார்கள். ஆயினும், கூறியது கூறல் என்பது சிறிதேனும் இருக்கவில்லை. அப்படியே "சீதாகல்யாணம்" என்ற பொருளை விளக்கினார்கள். ஈசுவர தத்துவங்களை விளக்குவதில் அவரைப்போல் யாரும் இலர். பேரூரில் நடராஜ தத்துவத்தை மிகவும் தெளிவாக விளக்கினார்கள். அறிவுக்கு அளவில்லை. ஆற்றலுக்கும் குறைவில்லை. தளர்ந்த வயதிலும் இப்பண்புகளை நன்றாகக் கொண்டிருந்தார்கள்.

4. அதிசய உரைகள்:—சில சமயங்களில் குறைவு என்று நமக்குத் தோன்றும் செயல்களையும் குணமாகத் திருப்பிப் பாராட்டுவதில் அடிகளைப்போல் எவரும் இலர். ஒருமுறை கோவையில் தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு நிறைவு விழாவில் தலைமை வகித்தார்கள். சங்கத்து அறிக்கைத் தாளில் கையிருப்பு ஐந்தணா நான்கு பை என்றிருந்தது. தமது தலைமை உரையில் அக்குறைவை ஒரு குணமாகப் பாராட்டினார்கள். அதிக பணம் ஒரு சங்கத்திற்கு இருந்தால் அச்சங்கத்தினர் தாம் செய்யும் வேலையில் சுறுசுறுப்பு காட்டமாட்டார்கள். எப்பொழுது குறைவாக உள்ளதோ அப்பொழுது தங்கள் ஊக்கத்தையே முதன்மையாகக் காட்டுவார்கள். இச் சங்கத்தார் பணம் சேகரிப்பதற்கு மாறாகச் செய்கையில் ஊக்கத்தைக் காட்டியுள்ளார்கள் என்பது இச் சிறிய கை

இருப்புத் தொகையால் தெளிவாகிறது என்று குறையைக் குணமாகப் போற்றினார்கள்.

5. பேச்சில் சிலேடை:— பேசும்போது அருமையான பொருள்களை விளக்குங் காலத்தில் பல உரைகளை எடுத்துக் கூறுவதுண்டு. துதிசொல்லும் காலத்திலும் கூட சொல்லும் தொனியாலேயே இருபொருள் விளக்கிக் காட்டுவார்கள்.

"இல்லறத்தான் அல்லேன் இயற்கைத் துறவியல்லேன்
நல்லறத்து ஞானியல்லேன் நாயினேன்-சொல்லறத்தின்
ஒன்றேனும் இல்லேன் உயர்ந்ததிருப் போரூரா
என்றேநான் ஈடேறு வேன்"

என்ற சிதம்பர முனிவர் பாடலை அடிக்கடி துதியாகக் கூறுவார்கள். அதனைக் கூறும்போது இறுதிச்சொற்களாகிய "திருப்போரூரா என்றே நான் ஈடேறுவேன்" என்பவற்றைத் தொனியாலே வினாவாகவும் விடையாகவும் கூறுவார்கள். இவ்விதமே பல பாடல்களையும் கூறுவதுண்டு. ஒருமுறை காஞ்சியில் திருவிழாவின் போது நடந்த சொற்பொழிவுகளில் அடிகள் தலைமையில் நான், "எப்போதும் இனியான்" என்ற பொருள் பற்றிப் பேசினேன். அப்போது 'பொழுது' 'இனிமை' என்ற இரண்டு பண்புகளின் பல பாகுபாடுகளையும் எடுத்துக் கூறி ஈசன் காட்டிய இனிய அருட் செயல்களை எடுத்துக் காட்டுகளாகக் கூறி முடித்தேன். அடிகள் பின் உரையில் நான் கூறாத இரண்டு உரைகளை எடுத்துக் கூறினார்கள். ஒன்று வினா, "இனியான்?" என்றால் 'இனிக்க மாட்டானோ" என்ற பொருளிலும் இரண்டு எதிர்மறை, "இனியான்" என்றால் "இனிக்க மாட்டான்" என்ற பொருளிலும் வரக்கூடும் என்று

உரைத்தார்கள். அவர்களது அருமையான நுண்ணறிவு எதுகாறும் நுழைகின்றதென்று இதனால் அறியலாம்.

6. தமிழன்பு:— அடிகள் தமிழ் மொழியிலும் தமிழரிடத்தும் அளப்பதற்கரிய அன்பு வாய்ந்தவர்கள். தமிழ் மொழியைப் பரப்ப வேண்டுமென்று மாணவர்களைத் திரட்டி ஒரு பெரிய பாடசாலை வைத்து நடத்துகின்றார்கள். பொதுப் படிப்பும் தமிழ்ப் படிப்பும் சிறப்பாகச் சமயப் படிப்பும் அங்கு உண்டு. அடிகளே நேரில் பாடம் கற்பிப்பதும், பரீட்சை செய்வதும் உண்டு. பல ஏழைப் பிள்ளைகளுக்குத் தமிழ்ப் படிப்பு தந்து, வித்துவான் முதலிய பரீட்சைகளுக்கு அனுப்பி தேறச்செய்து, வேலையும் தந்திருக்கிறார்கள். தமிழ்நாட்டில் இவ்விதம் தமிழ் பரப்பினவர்கள் யார் இருக்கிறார்கள்? மேலும் தமிழில் அழகாகப் பிரசங்கங்களைச் செய்வதற்காகப் பல மாணவர்களுக்குப் பயிற்சி தந்திருக்கிறார்கள். சபைக்குத் தகுந்தபடி பேசும் வல்லமை பெறுதல் அரிது. அது பயிற்சியினால்தான் ஆகக்கூடியது. அறிவு படைத்திருந்தும் பேசும் திறமை இல்லாதவர் எத்தனைபேர் உண்டு. ஆகவே, பேசுவதற்கும் பயிற்சி வேண்டும். அவ்விதம் பயிற்சி பெற்றவர்களில் ஒருவர் ம. ரா. குமாரசுவாமி பிள்ளை என்றால் அடிகளாருடைய பயிற்சித்திறம் எத்துணைச் சிறப்பு வாய்ந்தது.

7. ஒத்துழைப்பு:—எந்தச் சமயத்திலும் எப்பேச்சிலும் ஒருவருக்கு மனத்தாங்கல் வராதபடி அழகாகப் பேசுவார்கள். தமிழே அன்றி வடமொழியிலும் தேர்ந்தவர்கள். ஒரு பொருளைப்பற்றிப் பேசுங்கால் இரு மொழிகளிலும் எடுத்துக் காட்டுகளைக் கொண்டு

விளக்குவார்கள். ஆங்கிலத்திலும் அடிக்கடி சொற்களை எடுத்து விளக்குவதுண்டு. எல்லாச் சமயங்களினுடைய கொள்கைகளையும் அறிவார்கள். ஒரு கொள்கையைத் தாக்கிப் பேசும் காலத்திலும், இனிய சொற்களாலே பேசுவதால் எவருக்கும் மனத்தாங்கல் ஏற்படாது. என்றாலும், தாம் எடுத்துச் சொல்லும் கொள்கையை உறுதியுடன்தான் தாங்கிப் பேசுவார்கள். சைவக் கொள்கைகளை எவ்வளவு அழுத்தமாகப் பேசுவார்களோ அதைப்போலவே வைணவம் கிறித்தவம் முதலியவைகளையும் சொல்லி விளக்குவார்கள்.

8. உலக அறிவு:—ஆதீனகர்த்தர்கள் உலக அறிவில் தாழ்ந்திருப்பது சகஜம்; ஆனால் அடிகளோ உலக ஞானம் மிகவும் படைத்தவர்கள். அதனை அவர்கள் பேச்சிலிருந்தே அறியலாம். நாட்டில் ஏற்பட்டுவரும் அரசியல், பொருளியல், சமய இயல், இயக்கங்கள் எல்லாவற்றையும் நன்கு அறிவார்கள். அரசியல் துறையில் ஈடுபட்ட பல பெரியார்கள் அடிகளிடம் வந்து யோசனை கேட்பதுண்டு. பல வழக்குகளையும் விசாரித்துத் தீர்த்து விடுவார்கள். பொது மக்களுக்கு அடிகளால் இந்தத் துறையில் ஏற்பட்ட பலன் மிகவும் அதிகம். ஆகவே, அடிகளிடம் எல்லா மக்களுக்கும் அபரிமிதமான நம்பிக்கை உண்டு. ஆதீன கர்த்தர்களில் உலக வழக்கில் மிகுந்த தேர்ச்சியும், பெரும் பயன் அளிப்பும் கொண்டவர்கள் யார் உளர்?

இத்தகைய அரும் பெரும் பண்புகளை வாய்ந்த அடிகள் நம்மைவிட்டு நீங்கினார்கள் என்றாலும் அத்தகைய பண்புகளைப் பெற்றவர்கள் ஆக இருந்ததினால்

அவர்களுடைய அன்பும் அருளும் எப்போதும் நீங்காமல் நம்மைக் காத்துக் கொண்டே இருக்கும்.

## 57. ஞானியார் அடிகளின் பிரிவு

(பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்)

உயர்திரு ஞானியாரடிகளை யான் பல ஆண்டுகளாக அறிவேன். அவர்களுடைய தமிழ் மொழிப் பயிற்சியும், வடமொழி அறிவும், சைவ சித்தாந்த நூல் உணர்ச்சியும் தமிழுலகத்திற்குப் பல்லாண்டுகளாகப் பயன்பட்டு வந்தன. சொற்பொழிவாற்றும் திறமையும் மாணவர்களுக்குத் தெளிவுபெறப் பாடஞ் சொல்லும் வன்மையும் நன்கு வாய்க்கப் பெற்றவர்கள். அரிய பொருள் எனினும் பேசுவோரது சோர்விலுல் சிறப்புறுவதில்லை யென்பதும் பேசுவோரது சொல்வன்மையால் எளிய பொருளும் மக்களால் பெரிதும் மதிக்கப்படும் என்பதும் நம் அனுபவத்திற் கண்டனவாம். சிறிய பொருளையும் மிக விரிவாக எழுதுதற்கும் பேசுதற்கும் ஆங்கில மொழி தகுதியுடையதென்று பலர் கூறக் கேட்டிருக்கின்றேன்.

திரு ஞானியாரடிகளுடைய சொற்பொழிவைக் கேட்டபின் அத்தகுதி, மொழிக்கு உரியதன்று என்பதும் பேசுவோரைப் பற்றியதென்பதும் அறிந்து கொள்ளலானேன். அடிகள் ஒரு பொருளைப் பற்றி விரிவுரை நிகழ்த்துங்கால் அது மிகக் குறுகிய கால எல்லையில் முடிக்கத் தக்கதாயினும், அதனைத் தன் மதிவன்மையால் பலவாறு வகுத்து வகுத்துக் கேட்பவர் மனம் சலியாவண்ணம் மிக நீண்டநேரம் விளக்கிப் பேசுவார்கள். இவ்வியல்பு அடிகளுக்கே சிறந்த

தொன்றாக அமைந்திருந்தது. வரலாற்றுப் பகுதிகளை எடுத்து விளக்குங்கால் அவற்றில் அமைந்துள்ள அற நிலை, நீதி, உலகியல் முதலியவற்றை மிகத் தெளிவாக எடுத்துக் கூறுவார்கள். எத்திறத்து மக்களையும் தம் உரை வன்மையால் பிணித்துத் தம் வயப் படுத்தும் ஆற்றல் அடிகளிடத்து மிக்கிருந்தது. அரிய சொற்பொழிவாயினும் கால நீட்டிப்பில் கேட்பவர் சோர்வடைதல் இயல்பு. இவ்வியல்பு அடிகளுடைய சொற்பொழிவைக் கேட்பவர்கள்பால் காண்டல் அரிதாகும். சமய நிலையில் அடிகள் வீர சைவராயினும் சித்தாந்த சைவம் முதலியவற்றில் கேட்பவர் மனம் பதியும் வண்ணம் பேசுதலில் மிகவும் சதுரப்பாடுடையவர்கள்.

கடவுட் பக்தியும் சிறப்பாக முருகப் பெருமானிடத்துப் பேரன்பும் உடையவர்கள், கல்வியறிவுடையோரை நன்கு மதித்து அளவளாவும் இனிய குணம் உடையவர்கள், தமிழ் மொழியில் பேரார்வத்தையும் சைவ சமயப் பற்றையும் தமிழ் மக்களுக்கு விளைத்துவந்த இவர்கள் அரிய சொற்பொழிவுகள், இத் தமிழ் நாட்டில் நிகழாத இடம் இல்லை யென்றே சொல்லலாம். மடாதிபதிகள் செய்யவேண்டிய அரிய செயல்களெல்லாம் திரு. ஞானியாரிடத்து நன்கு காணப்பட்டன. இக்காலத்துள்ள மற்றைய மடாதிபதிகள் இவர்கள் முறையைப் பின்பற்றுவார்களாயின், தமிழ் உலகத்திற்கே சிறந்த பயன் விளையும். இவர்கள் ஒழுகிய நெறி ஏனையோருக்குச் சிறந்த வழிகாட்டியாக உள்ளதென்று கூறலாம்.

இவர்களிடத்துக் கல்வி பயின்ற மாணவர் பலரும், சொற்பொழிவுகேட்ட அன்பர்கள் பலரும், இவர்கள்

பாற் கொண்டுள்ள பேரன்பு அளவிடுந் தரத்ததன்று. அதற்குக் காரணம் இவர்களுடைய அருட்குண நிலையே யாகும். இவர்கள் இழப்பு ஈடுசெய்ய முடியாத தொன்றென்றே கூறலாம். இத்தகைய பெரியார் ஒருவரை இனிக் காண்டல் என்ஞான்று கூடுங் கொல்! திருவருள் துணை செய்தல் வேண்டும்.

முருகப் பெருமானிடத்து இவர்களுக்குள்ள பேரன்பே பழநிப் பதியில் அப்பெருமான் தரிசனப் பேறு இவர்கட்கு இறுதிக் காட்சியாக நிகழ்தற்குக் காரணமாயிற்று. இவர்கள் நல்லுயிர் திருவருளிற் கலந்து இன்புறுமாயினும், திருமேனியின் மறைவு தமிழ்ச் சைவ மக்களுக்கு ஆற்றொணாத் துன்பந் தருவ தொன்றாகும். என்னே! நிலையாமையின் இயல்பு இருந்தவாறு!

திரு. ஞானியாரடிகளைப் போன்ற பெரியோர் களுக்கு வினையளவு நின்று அதன் ஒழிவில் அழியும் நிலையற்ற வுடலாக இல்லாமல் என்றும் நின்று நில வும் ஒரு நல்லுடலாக வாய்ப்பதற்குத் திருவருள் எப் பொழுது துணை செய்யுமோ? இவ் வேண்டுகோள் அவர்கள் வீட்டு நிலைக்குத் தடையாவ தொன்றெனி னும் தமிழ்மக்கள் பல்லாயிரவர்க்கு விளையும் நலத்தை நினையுங்கால் இது நம்மனோரால் மேற்கொள்ளத் தக்க தென்றே எண்ணுகின்றேன். இவர்கள் நினைவுக் குறி யாக ஒரு தமிழ்க் கலைமாடம் சென்னையம் பதியில் நிறுவப்படுமாயின் தமிழர் நன்றியறிவு சிறந்ததொன் றாகத் திகழ்வதாகும்.

## 58. ஞானியார் பெருமை

(பண்டிதரத்னம்-குகஸ்ரீ-புழலை-திருநாவுக்கரசு முதலியார்)

சைவ மெய்ச் சமயத்திற்கும், செந்தமிழ் மொழிக்கும் இலக்கியமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் ஞானியார் சுவாமிகள் சிவலிங்க ஐக்கியமான செய்தி தமிழகத்தவரைத் திடுக்கிடச் செய்துவிட்டது. சுவாமிகள் நிறைந்த பெரும் புலமையும், சிறந்த பேரறிவும் படைத்தவர்கள். தமிழ்மொழியில் தமக்கு ஒப்புவமையில்லா நிலை பெற்றிருந்த அடிகள் அங்ஙனமே ஆரியம் ஆங்கிலம் போன்ற பிறமொழிகளிலும் புலமை பெற்றிருந்தார்கள். சுவாமிகளுடைய பேச்சுக்குத் தமிழ் நாட்டில் தனி மதிப்பு. படித்தவர்கள் முதல்படியாத பாமரர்கள் வரை எல்லோரும் கேட்டு இன்புற்று மகிழும் வண்ணம் பேசுவதில் சுவாமிகள் இணையற்றவர்கள். இங்ஙனம் சிறந்த சுவாமிகள் எளிமையாக அனைவரையும் ஏற்றுக் கொள்ளும் பெருமையுமுடையவர்களாக விருந்தார்கள். எங்குச்சென்றாலும், எங்கிருந்தாலும் எளியேனிடத்துள்ள அன்பின் மிகுதியைக் காட்டும் திருநீற்றுப் பிரசாதத்தைத் தங்கள் ஆசிமொழிகளுடன் அவ்வப் பொழுது அனுப்பி வைத்து என்னை வாழ்வித்த தொன்றே, சுவாமிகள் எல்லோரையும் அணைத்து ஆதரித்து மகிழும் பெரும் பேற்றை இயல்பாகவே பெற்றவர்கள் என்பதை நிரூபிக்க வல்லது. சுவாமிகள் பிரிவினால் தமிழகம் சிறந்த புலவர் பெருமானார் ஒருவரை இழந்தது. ஞானியார் மடாலயமும் சிறந்த தலைவரை இழந்தது. நாம் அனைவரும் தாயனைய தந்தையுமாய பேராசிரியரை இழந்தோம் என்று சொன்னால் பிழையாகாது.

அடிகள் என்றும் பிறவாத இறவாத நன்னிலை யெய்தி மாண்புறத் திரு முருகப் பெருமான் திருவடிப்போது களை வணங்குவோமாக. வாழ்த்துவோமாக. சுபம்.

## 59. நான் கண்ட ஞானியார் சுவாமிகள்

(கே. இராமநாதன் செட்டியார், பி. ஏ., பி. எல்)

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள் உடல் நீத்தார்கள் என்று கேட்டதும் மனதில் ஆட்டம் சிறிது ஏற்பட்டது. ஏன்? நான் அவர்களைத் தேடி ஆராய்ந்து கண்டு கொண்டேன். பல வருஷங்களுக்கு முன்னர் அவர்கள் நல்ல சொற்பொழிவாளர் என்று கேள்விப்பட்டேன். சென்னையில் ஏதோவொரு கோயிலில் "விநாயகர்" என்பதைப் பற்றிப் பேசினார்கள். போய்க்கேட்டேன்; சுமார் இரண்டு மூன்று மணிநேரம் பேசியிருப்பார்கள். விஷயங்களைக் கோவை செய்து ஒன்றன்பின் ஒன்றாகத் தெளிவாகச் சொன்னார்கள். பின்னர் அவர்கள் சொற்பொழிவுகளுக்குச் சௌகரியப்பட்ட போது போய்க்கொண்டிருந்தேன். அவர்களுடன் பேசியதில்லை; விபூதி வாங்கியதில்லை. இவ்வாறு சில வருஷங்கள் சென்றன.

என் மனதில் ஓர் எண்ணம் தோன்றியது: "சைவராய்ப் பிறந்தோம்; சைவப் பெரியார் ஒருவரையாவது தெரிந்து கொள்ளவேண்டாமா? வணங்கத் தகுந்தவராயும் சைவ நூல்களைச் சொல்லித் தரத் தெரிந்தவராயும், நமக்கு எளிதில் கிடைக்கக் கூடியவராயும் யாரிருக்கிறார்கள்?" அப்போது ஞானியார் ஞாபகம் வந்தது. மேலும் தோன்றியது! "இன்னும் ஒரு வருஷம் பார்ப்போம். இவர்கள்

நமக்கு வந்தரவா வென்று பார்ப்போம்; வேறு நமக்குக் கிடைக்கக் கூடியவர் யாரென்று பார்ப்போம். பின்னர் முடிவு செய்வோம்." இந்த எண்ணத்தில் ஒரு வருஷம் சென்றது. ஞானியார் சுவாமிகளுக்குத் தெரிந்தவர்கள் யாரகப்பட்டாலும் பல கேள்விகள் போட்டு, நமக்கேற்றவர் ஞானியாரே என்று முடிவு கட்டினேன் முடிவுகட்டியும் அவர்களைக் காண எனக்குச் சாவகாசமில்லை; சந்தர்ப்பமுமில்லை.

மகம்மது மலைக்குப் போகவில்லையானால் மலை மகம்மதுவினிடம் வந்துதானே தீரவேண்டும். அவர்கள் மயிலாப்பூர் வந்து தங்கினார்கள். எனக் கருகாமையில் தங்கியிருப்பதையும் தெரிந்து கொண்டேன். அப்பொழுதும் இன்று நாளை யென்று காலங்கழிந்தது.

அப்பொழுது அவர்களுக்கு இராஜப் பிளவை வந்தது. எனக்கு மனவருத்தம் வந்தது. சில பெண்களுக்கு வரன் தேடி முடிந்ததும், அவன் சாவதைப் பார்க்கலாம். அக்கதிக்கு வந்துவிட்டது என் நிலை, "உடல் விடப்போகுந் தருவாயிலிருப்பவருடன் பழகி வருந்துவதேன்?"

"ஆனால் அவர் தேடிக் கண்ட பொருளாயிற்றே. இவர்போல் பிறரொருவர் நமக்குக் கிடைப்பாரோ? இப்பொழுது பார்த்து வைத்தால் யானும் சுவாமிகளைப் பார்த்தேன் என்று சொல்லிக் கொள்ளலாமே. நமக்குக் கொடுத்துவைத்த காலம் பழகுவோமே" என்று நினைத்துப்போய் நமஸ்காரஞ் செய்தேன். இரண்டு நாளுக் கொருதரமேனும் போனேன், சில மணி நேரமேனும் இருந்தேன் பேசினேன்; சமயங் கிடைத்தால் சிறு பணி செய்வேன். என் அதிர்ஷ்

டத்தாலும் பல அன்பர்கள் அதிர்ஷ்டத்தாலும் சுவாமிகள் உடல் நலமடைந்தனர். அவர்கள் தலைமையில் பேசும் பாக்கியமும் கிடைத்தது.

அவர்களுக்கு இவ்வளவு பெருமை ஏன்? அவர்கள் நன்கு படித்தவர்கள். ஆங்கிலம் தெரியும். வடமொழி நன்கு தெரியும். தமிழில் அவர்கள் படிப்பு மிகப் பரந்தது, ஆழமானது. இத்துடன் உலகியலறிவும் உண்டு. கற்றோர்க்கும் கல்லாதாருக்கும் பயன்படும் படிப் பேசவல்லவர்கள். இனிமையாகப் பேசுவார்கள். அவர்கள் அன்பு நிறைந்தவர்கள். எல்லொருக்கும் புன் சிரிப்பு ; சில நல்ல வார்த்தை ; மடாதிபதி யென்ற நினைப்பு அவர்கள் வார்த்தைகளையோ, செய்கைகளையோ கட்டவில்லை. விருந்தினரை நின்று விசாரிப்பார்கள். உளறுபவர்க்கும் கோபமின்றி அறிவு புகட்டுவர். எல்லாரும் அவர்களைப் பார்க்கமுடியும். எப்பொழுதும் பார்க்கலாம்.

அவர்கள் செய்த தொண்டுகள் பல ; தங்கள் மடத்தை நல்ல நிலைமைக்குக் கொண்டுவந்தார்கள் ; அதற்குப் பெரும்புகழ் தந்தார்கள். பலருக்குத் தமிழறிவு புகட்டினர். கிறிஸ்தவர்களும் அவரிடம் படித்திருக்கிறார்கள். பலருக்குச் சமய அறிவு புகட்டினர். அநேகர் மனதில் அன்பென்னும் விதையை நட்டார்கள் ; பற்பலர் வாழ்க்கையைத் திருத்தி யமைத்தனர். அவர்களிடம் உபதேசம் பெற்றோர் கணக்கற்றவர். அவர்கள் சொற்பொழிவு கேட்டோர் பல்லாயிரவர்.

ஊர்தோறும் சென்று சமய உண்மைகளைப் பரப்பியவர் சமய குரவர் மூவர். அவர்களுக்குப் பின்னர் அத்தொண்டு செய்தோர் ஒருவரையும்

எனக்குத் தெரியவில்லை. அத்தொண்டை இக்காலத்தில் செய்தது ஞானியார் சுவாமிகள்.

இனி அவர்கள் புனித உடலையும் புன் சிரிப்பையும் எங்ஙனம் காண்போம்? வாயார வாழ்த்தும் வாழ்த்துரைகளையும் வழங்கும் சொற்பொழிவுகளையும் எங்ஙனம் கேட்போம்?

அவர்களுக்கு ஞாபகார்த்தமாக ஏதேனும் செய்ய வேண்டுவது மிக அவசியம். இந்தியா ஏழைத் தேசமென்பது எனக்கு மிக நன்கு தெரியும். ஆயினும் ஐயாயிரம் பேரேனும் அவர்கள் நிதிக்குக் குறைந்தது ஒரு ரூபாய் கொடுக்கவில்லையானால், நாம் அனுசரிக்கும் சைவத்தில் சக்தியில்லையென்றுதான் அர்த்தம். சுவாமிகள் சைவ உண்மைகள் என்னும் வித்துக்களைப் பாழுங் கற்களிலா வீசி எறிந்தார்? பதிலைத் தெரிந்து கொள்ள மிக ஆவலுடையேன்.

## 60. தோற்ற முண்டேல் மரண முண்டு

[வித்வான் மு. இரத்தின தேசிகர், தமிழாசிரியர் போர்டு உயர்தரப்பள்ளி, குடவாயில்]

ஞானம் - மெய்ஞ் ஞானம் - மறைந்தது - இல்லை. துவராடை தாங்கிய மேனி - அங்க இலிங்கம் - தாழ்வடங்களின் தனியிடம் - திருநீற்றின் பொலிவு - தமிழ் மணங் கமழும் புன்முறுவல் - இதோ தோற்றுகின்றது. இல்லை உருவெளித் தோற்றம். இனி எங்குக் காண்பது. கையற வெய்தும் கழிமட நெஞ்சே! ஒளி ஒளியுடன் கலந்தது; அவலமொழிதி.

சுவாமிகளை மறைவு, தம்முன்னைக்கு நீங்கா இடுக்கண் தந்துவிட்டது. சுவாமிகள் ஒரு தமிழ்க் கடல்; அவர்களின் சொற்பெருக்குக் கடல்மடை திறந்த தொத்து மிடுக்கொடு பரந்து சென்று கேட்போரின் செவிவழி நுழைந்து மனப் புலத்தைப் பண்படுத்தும். உடல் தளரினும் உரை தளராது ஐந்துமணி நேரம் ஒரே இடத்தமர்ந்து, இடைவிடாது - கேட்போர் மனந் தளராது சொற்பெருக்காற்ற வல்லார் இனி யாருளர் ?

யான் கண்ட உண்மை :—கடந்த வெகுதானிய ஆண்டு சித்திரைத் திங்கள் உகூ - ஆம் நாள் (11-5-38) திருவாரூர் தம்பிரான் தோழர் தமிழ்ச் சங்கத்தின் நான்காமாண்டு விழாவைச் சுவாமிகள் தலைமைதாங்கி நடத்தினார்கள். அவர்கள் முன்னிலையில் யான் பேசும் பேறு பெற்றேன். "சுந்தரர் தந்த மறுபெயர்கள் என்பதுபற்றிப் பேசினேன். பல நாட்களாகச் சுந்தரர் தேவாரத்தில் எனக்கோர் ஐயம் இருந்து வந்தது. ஏற்ற சமயமென எண்ணிச் சுவாமிகளிடத்தில் அவ்வையத்தைத் தெரிவித்துக் கொண்டேன். அது, "அல்லியந் தாமரைத்தார் ஆரூரன்" என்று சுந்தரர் தன்னைச் சொல்லிக் கொள்வது எக் காரணம் பற்றி என்பதே. இவ்வையத்தை யான் தேவாரத்தைப் பயின்ற காலையில் நீக்கிக் கொள்ள வில்லை. பின்பு யான் கேட்ட புலவர் பலரும் விடை யிறுத்திலர். சுவாமிகள் முடிவுரையில் யாதொரு வருத்தமு மின்றித் தயக்கமு மின்றித் தன்மன அறையிலிருந்து நூல்களைப் புரட்டிப் பார்த்துச் சட்டெனப் பின்வருமாறு கூறினார்கள்.

சுந்தரர் தாமரை மலர் மாலையைத் தமக்குரிய தாகக் கூறிக்கொண்டது, தாம் அந்தணர் என்ற மரபு பற்றி. நால்வகை வருணத்தார்க்கும் ஒவ்வொரு அடை யாளப்பூ உண்டு. அந்தணர்க்குத் தாமரை உரியது. "முல்லையந்தார் வணிகனிவன்" என்பது திருவிளை யாடல்.

இதனைக்கேட்ட என் மனம் பூரித்தது. விம்மித மடைந்தேன். நல்லார் இணக்கத்தின் உயர்வை என் வாழ்க்கையில் அன்றுதான் உணர்ந்தேன். சுவாமிகளின் உயர்விற்கும் கல்வி யாற்றலுக்கும் இதைத்தவிர வேறென்ன சான்று வேண்டும்?

அடுத்த பல தினங்களில் நாகையின் அண்மையி லுள்ள மஞ்சக் கொல்லை என்ற தலத்தில் சுவாமி களின் சொற்பெருக்கு நிகழ்ந்தது. அப்போது வந்து கேட்டாரனைவரும் விழித்தகண் இமையாது சுவாமி களின் மலர் முகத்தையே கண்டு களித்திருப்பர். சொற்பெருக்கில் நகைச் சுவையும் சமத்துவச் சுவையுமே ததும்பும். சுவாமிகளின் வடமொழிப் புலமை வேதாகமங்களினின்றும் கூறிய மேற்கோள் களாலும் விளக்கவுரையாலும் விளங்கிற்று. தென் மொழிப் புலமைக்கு அளவு கூற வல்லுநர் யார்?

"வடமொழி தென்மொழி யெனவே
வந்த இருவிழியவற்றுள்
கெடுவழக்குத் தொடர்பவரே
கிழக்கொடுமேற் குணராரே"

என்ற நல்லுரையைச் சுவாமிகள் சொற்பெருக்கு எனக்கு நினைவூட்டிற்று. சொற்பெருக்கை இன்னும் பலமுறை கேட்டானந்திக்க எண்ணி யிருந்தேன். சுவாமிகள் தைப்பூச நாளில் இராமலிங்க வள்ளலை

நமக்கு நினைவுறுத்தி இறையொளியில் கலந்தார்கள் இனி என் செய்வது?

## 61. நம் கடமை

சோழ நாட்டுத் தலங்களிற் சிறந்ததாகிய திரு நாகேச்சுவரத்தில் வாழ்ந்த வீரசைவ மரபினரான அண்ணாமலை ஐயர், பார்வதி அம்மையார் ஆகிய இருவரும் புரிந்த தவத்தின் பயனாக சிமுக ஆண்டு வைகாசித் திங்கள் ச - ஆம் திகதி (17 - 5 - 1873) வியாழக்கிழமையன்று நம் அடிகளார் இப்பூவுலகில் திரு அவதாரம் செய்தருளினார்கள். பழநீ எனும் பெயர் பெற்றார்கள்.

புலிசை வந்து, தம் பதினேழாம் (20-11-1889) வயதில் ஞானியார் மடாலயத்தின் தலைவராகப் பட்டம் சூட்டப் பெற்றார்கள். அன்றுமுதல் நம் அடிகளாருக்குச் "சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்" என்னும் பெயர் வழங்குவதாயிற்று. ஐம்பத்திரண்டு ஆண்டுகள் ஆசாரிய பீடத்தில் எழுந்தருளியிருந்தனர். தமது அறுபத்தொன்பதாம் வயதில் (31-1-1942) இறைவன் திருவடி நீழலிற் கலந்து, இறவாத இன்பம் எய்தினார்கள் என்பது நாம் இதுகாறும் அறிந்த உண்மையாகும்.

புலிசை ஞானியார் மடாலயத்தின் தலைமையை ஏற்றபின் தமிழுலகிற்கு அடிகளார் புரிந்த தொண்டுகள் பற்பலவாகும். அவை எழுத்தினும் சொல்லினும் அடங்குவனவல்ல. சைவ சமயப் பயிரை வளர்க்கவும், செந்தமிழ்த் தாயை சிம்மாதனத்தில் இருத்தவும் அடிகளார் அரும்பாடு பட்டுள்ளனர்.

சென்னையில், "சைவசித்தாந்த மகா சமாஜம்" தோன்றிச் சைவ சமயத்தைப் பரப்புவதற்கும், மதுரையில், 'தமிழ்ச் சங்கம்' தோன்றித் தமிழ்ப்பணி யாற்றுவதற்கும், காரணமாக இருந்தவர்கள் நம் அடிகளார் எனக் கூறுவோமாயின் அவை மிகையாகா. திருப்பனந்தாள் மடாதிபதிகளாக எழுந்தருளியிருந்த சுவாமிநாத தம்பிரான் சுவாமிகட்குத் தமிழ்மொழியில் அளவுகடந்த ஆர்வம் உறச் செய்தவர்கள், நம் அடிகளாரே யாவார்கள். அடிகளாரின் உண்மை உழைப் பின் பயனே, தமிழ் நாட்டில் பற்பல கல்லூரிகள் தோன்றற்கு இடம் ஆயது என்பதும் மறுக்கக் கூடாத உண்மைகளாம்.

தமிழ் நாட்டிற்கு அடிகளார் ஆற்றிய பணி, அவர் அளவோடு நின்றுவிடாது, மேலும் மேலும் ஓங்குமாறு வளர்க்க வேண்டுவது நம்மவர்களின் இன்றியமையாக் கடமையாகும். சைவத்தை வளர்க்க சைவப் பெருமக்களும், தமிழ் மொழியை வளர்க்க தமிழ்ப் பெருமக்களும் இயன்ற அளவு துணைபுரிதல் வேண்டும்.

தற்போது, புலிசை ஞானியார் மடாலயத்தில் ஆறும்முறை குருமூர்த்திகளாக எழுந்தருளியிருப்பவர் கள், சிவசண்முக சத்தியஞான சிவாசாரிய சுவாமிகள் அவர்கள் ஆவார்கள். அவர்கள் அளவுக்கேற்ற ஆங் கிலம், வடமொழி ஆகியவற்றில் பயிற்சியும், நிரம் பிய தமிழறிவும் படைத்தவர்கள். ஐந்தாம்முறை அடி களார் ஆற்றிய பணியைப் பின்பற்றி மேலும் மேலும் நடத்த ஆர்வங்கொண்டுள்ளனர். அதற்குத் துணை புரிய வேண்டியதும் நம்மவர் கடமையாகும்.

பிற நாடுகளில் அறிஞர்கள் போற்றப்படுகின்றனர். நினைவுக்குறிப்புக்கள் நாட்டப் பெறுகின்றன. அதனைப் பின்பற்றி நம் நாட்டவரும் புரிந்துவரும் செயல் மகிழ்ச்சிக்குரியதாகும். நம் அடிகளார் புரிந்த அருஞ் செயல்களுக்கு நம்மவர் புரிந்த கைம்மாறு யாது என்பதை இன்னும் நிர்ணயிக்கக் கூடவில்லை. இனியேனும் முன்வந்து அடிகளாரின் அருஞ்செயல்களை மறவா வண்ணம் நினைவுக் குறிப்பு நாட்டவேண்டும் எனவும், கல்விக் கழகங்கள் நிறுவவேண்டும் எனவும் தமிழ் நாட்டவருக்கு நினைவூட்டுகின்றனன். நன்றி மறவா அன்பர்கள் என்பதைக்காட்ட அறிஞர்கள் முன் வருவார்களா ?

ஆறும்முறை அடிகளார், ஐந்தாம்முறை அடிகளாரைப் பின்பற்றிச் செயலாற்றுவார்களாக. மடாலயத்திற்குப் புகழ் மென்மேலும் ஓங்கும் வண்ணம் முயற்சிப்பார்களாக. அடிகளார் பெற்ற உயர்வை வளர்த்துப் பாதுகாப்பார்களாக. முருகப் பெருமான் திருவருள் முன்னின்று அடிகளாருக்குப் பேருக்கம் அளிப்பதாக. அப்பெருமான் திருவருளால் பிணியற்ற உடலும், வலிமையும் உறுவார்களாக. நீங்காத தெய்வ சிந்தனையுடையவர்களாய் நீடூழி வாழ்வார்களாக.

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

சுபம். சுபம். சுபம்.

# அனுபந்தம்

## இரங்கற் பாக்கள்

### 1

[ராவ்சாஹிப் - எஸ். வையாபுரிப் பிள்ளை
தமிழாராய்ச்சித் துறைத் தலைவர், பல்கலைக் கழகம், சென்னை]

நேரிசை வெண்பா

அன்பொழுகு கண்ணும் அருளொழுகு நன்னெஞ்சும்
இன்பொழுக விள்ளும் இதமொழியும்—என்றும்
இனியுண்டோ உண்டோ எமதுசிவ ஞானத்
தனியரசு வீழ்ந்ததன்பின் தான். க

எண்ணுதற்கொன் றுண்டோ இயம்புவீர் ஏய்ந்தசிவ
சண்முக ஞானத் தயாநிதியைப்—பண்பிற்(கு)
அரியானை அன்ப ரகத்தானை எங்கள்
பெரியானை யாம்பிரிந்த பின். உ

சைவத் தனிச்சுடரைச் சார்வற்ற மக்கள்தமக்(கு)
உய்வைத் தருஞான ஒண்ணிதியைத்—தெய்வச்
சிவசண் முகஞான தேசிகனை என்றும்
பவங்கழல நெஞ்சே பணி.

### 2

[ராவ்பகதூர் - சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார்]

நேரிசை வெண்பா

சாந்தனையும் தொண்டியற்றும் சார்புடையார் யாரவரே
ஆந்தனையும் வீணறியா தாரெவரே—மாந்தரிடம்
ஈறில்லா அன்புகுப்பான் இங்கிதமே கொள்கையராய்
ஆறில்லார்க் காறளித்தார் ஆர்.

திருத்தொண்டில் சீராம் சிவத்தொண்டைக் கொண்டார்
அருத்தமுடன் இன்பம் அகன்றார்—இருதிறத்துப்
பாவலார்க்கும் பேரின்பே பாலிட்டார் அன்றோ
சீலர்க்குச் சீலர் சிவற்கு. ௨

செந்தமிழ்நா டீன்ற திருவாளர் நூல்கட்கள்
அந்தமுடன் எங்கோடு அபகரித்தார்—பந்தமற
நேற்றுச் சிவகதிக்கே நேர்ந்திட்டார் என்செய்கோம்
எற்றுத் துயரம் எமக்கு. ௩

அன்னார் திருக்கோவல் ஆர்ந்த நாவுக் கரசரே
முன்னார் திருமடத்து முன்னோர்தம்—மன்னோரும்
பாமரரும் கற்றோரும் பாவிக்கும் ஞானிகளே
தேமலர்ந்த வாக்காளர் தேர். ௪

[ந. மு. வேங்கடசாமி நாவலர்]

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

அப்பருவர்க் கடலேறி யருட்கடலிற் குளித்ததிருப் புலிசை யாகும் [ய்
செப்பருநற் பதியதனின் மெய்ஞ்ஞானக் குரவனெனத் திகழ்ந்த மேலோ
திப்பியநீ றணியுருவும் அருளொழுகு மிணைவிழியும் தீஞ்சொல் வாயும்
இப்புவியோர் நினைந்துநினைந் திடர்க்கடலிற் குளித்திடநீ யெங்குற் றாயே.

எழுமுகிலு மொன்றாகி யமிழ்தமழை பொழிவதென வெவரும் போற்றும்
பழுதறுநின் சொன்மழையால் உளங்குளிர்ந்தே யுயிர்குழைந்த படியே
[மெல்லாம்
அழுதழுதுண் ணீராறுமா றகன்றிடல்நின் னருணீர்மைக் கமைவ தாமோ
தொழுதகுநின் றிருவடித்தொண் டினியாங்கள் பெறுவதெவன் சொல்
[கிற் பாயே. ௨

ஆறுமுகப் பண்ணவனை முறைமையினால் நாடோறு மருச்சித் தேத்தி
ஈறிலவ னருட்கடலிற் றிளைத்தனின் றிணையிலா அன்புக் கேற்ப
வீறுபுகழ்ப் பூசநாள் அவனடியை மேவினனென் றாலும் யாங்கள் [யே.
தேறும்வகை யறியாது திகைக்கின்றேம் திகைப்பொழிய வருள்செய்வா

## 4

[R. வெங்கடாசலம் பிள்ளை]

கொச்சகக் கலிப்பா

மண்முகமாம் பாதிரியூர் மலிதவத்தின் வாழ்வுசிவ
சண்முகமெய்ஞ் ஞானசிவாச் சாரியராம் எமதடிகள்
விண்முகத்தை வாழ்விக்க வினையுழலித் தமிழகத்தை
எண்முகத்தும் துயர்க்கடல்சூழ்ந் தெழுந்துவிழுந் தியங்கத்தோ. ௧

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

என்றினிக் காண்பேம் அந்தோ எங்கள்நற் றூயன் றன்னை !
என்றினிக் காண்பேம் ஐயோ எழில்வளர் திருமு கத்தை !
என்றினிக் காண்பேம் அன்றோ இயலருள் ஒழுகும் கண்ணை !
என்றினிக் காண்பேம் மன்றோ இளநகை யொளிர்செவ் வாயை ! ௨

எங்கினிக் கேட்பேம் அந்தோ இணையிலாச் சொற்பெ ருக்கை !
எங்கினிக் கேட்பேம் ஐயோ இருங்கலைத் தெளிவு தன்னை !
எங்கினி யுறுவேம் அந்தோ இவ்வுல கமிழ்தா மஃதை
எங்கினிப் பெறுவேம் அந்தோ இப்பிறப் பறும ருந்தை ! ௩

அன்னதோர் திருமு கத்தை ஆர்வுறக் காண்ப மாயின்
சொன்னலம் கனிந்த தேனும் சொற்பொழி வுறுவ மாயின்
இன்னவிவ் வுலக மொன்றோ இந்திரன் வாழ்வும் வேண்டேம்
என்னினித் தொழுவோம் அன்றோன் இணையடி மலர்க ளம்மா ! ௪

## 5

[சித்தாந்த ஆசிரியர் ந. சிவகுருநாத பிள்ளை, தூத்துக்குடி]

கொச்சகக் கலிப்பா

திருமணக்கும் முகமலரும் சிவமணக்கும் இன்சொல்லும்
உருமணக்கும் திருநீறும் ஒளிமணக்கும் கண்டிகையும்
அருள்மணக்கும் திருநோக்கும் அடியனேன் காண்பதென்றோ
தெருள்மணக்கும் குருமணியே சிவவொளியாய்ப் போந்தனையே. க

முப்பொருளின் உண்மைகளும் முத்திநிலைப் பெரும் பேறும்
செப்பரிய சாதனத்தின் சிறப்புகளும் சீர்சான்ற
ஒப்பரிய தொண்டினிலை ஓதரிய பத்திநிலை
எப்பெரிய பொருள்களையும் எளிதிலெவர் இயம்புவரே ? உ

வேதமுடன் ஆகமங்கள் வியாகரணம் தருக்கமொடு
ஓதரிய ஆரியத்தின் உயர்கலைகள் உரைப்பவரார் ?
நாதனடி நண்ணுவிக்கும் நற்றமிழின் திருமறைகள்
போதமொடு சித்தாந்தப் புண்ணியநூல் புகல்பவரார் ? ங

சொல்லாற்றல் பொருளாற்றல் துலங்கிடநீ சொன்மாரி
எல்லாரும் கேட்டுவப்ப இம்பருல களித்தனையே
சொல்வாக்கு மனங்கழிந்த தூயசிவ மாயினையே
பல்லாற்றான் உயிர்க்குறுதி பயப்பவரார் குருமணியே ? ச

அறவுருவாம் குருமணியே அன்புடையார் தமைமறந்து
மறமுடையாய் போன்மறைய மாட்டாயே வன்னெஞ்ச
மறலியுனை வவ்வுதற்கு மாட்டானே எமையகன்ற
திறமருளாய் சிவமாகும் சண்முகமெய்ச் சிற்குருவே. ரு

# 6

## ["பாலகவி" - வயிநாகரம்-வே. இராமநாதன் செட்டியார்]

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

ஓதரிய பெரும்புகழா லுயர்ஞானி யாரடிகே ளுணர்வை மாற்றுந்
தீதிரிய வருணெறியிற் சேருநிலை யெடுத்துரைக்குஞ் சீர்சால் செம்மால்
பாதிரியின் புலியூரிற் பகர்கோவ லாதினைப் பதியா மன்னி
நீதிபுரிந் திருந்தனையா னீணிலத்தி லெமையகன்றாய் நீதியாமோ. க

வருவாரை முகமலர்ந்து வரவேற்று வயிற்றுணவு மகிழ்ந்து முன்னே
தருவாய்பின் பவர்தகுதி தனையாய்ந்து சிந்தைகொளுந் தன்மை வாய்ந்து
பெருவாரி நலங்களெலா மெளிதாக வினிதளிப்பாய் பெரிய ஞான [யோ.
உருவாய தமிழ்க்கடலே யொளித்தனையே யாஞ்செய்பிழை யுரைத்தி டா

ஆறுமுகத் தண்ணலா ரடிபரவி யெந்நாளு மன்பு சார்ந்த
வாறுமுகத் தண்ணலா யமர்ந்திருந்தா யெமைமறந்திவ் வவனி மீது [மைத்
மாறுமுகத் தோடெங்கே மறைந்துவிட்டாய் உனைப்பிரிந்து வருந்து வே
தேறுமுகஞ் செய்வதற்குத் தெளிவாய வழியொன்று செப்பு வாயோ. ௩

பூவுலகிற் பலபாற்சொற் பொழிவாற்றி நலங்கொடுத்தோம் பொன்செய்
தேவுலகு முதலாய வுலகிலுளார் சிவநெறியே சேர்ந்து வென்றிச் [யின்பத்
சேவுயருந் திண்கொடியான் திருவடியே போற்றுநெறி செப்புவோமென்
றேவரையு மண்மேலே யிரங்கவிட்டுப் பிரிந்தனையோ வினையி லாதோய்.

சீமுகநல் வைகாசி நான்குடொன்னாள் மூலத்துச் சிறக்கத் தோன்றித்
தாமுயரும் விரோதிகார்த் திகையேழிற் சித்திரையிற் சார்ந்த பொன்னாள்
மீமுதிரு ஞானியா ராயகுரு விசுதையில் மேய பூசத்
தாமொளியிற் கதிர்சேர்பன் னொன்பானிவ் வவனிவிடுத் தகன்ற நாளே.

7

[ஆ. சுந்தரராஜ உடையார், தலைமைத் தமிழ் வித்துவான்
போர்டு உயர்நிலைப் பள்ளிக்கூடம், திருமுதுகுன்றம்]

நேரிசை வெண்பா

சிவமே தமிழாகும் செந்தமிழே இன்பச்
சிவமாகு முண்மை தெளியப்—புலியுளோர்
சிந்தைமலர் வைத்தோன் திருப்பா திரிப்புலியூர்
எந்தைசிவ சண்முகனு மே. க

கலி விருத்தம்

சிவமே யெனுமாறு செந்தமிழ்நா டெய்திப்
பவமாம் பிணியேகப் பலவிரி வுரைசெய்த
சிவசண் முகஞானச் செல்வமே பிரிந்தனை
தவமே யினியுமைத் தாமெவண் காண்பமே. உ

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சிவமே பரனு மென்ற சித்தாந்த வுண்மை தன்னை
அவமே திரியு மாக்க ளறியுமா றினிது காட்டி
சிவமே யெவரு மேவ சிந்தைமகிழ்ந் தருள்செய் திட்டாய்
சிவசண் முகனே யாங்கு சென்றிட்டீர் வருந்தி னேமே. ௩

8

[திரு. வீ. திருஞான சம்பந்த முதலியார்,
மெய்கண்டார் கழகம், காஞ்சிபுரம்]

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சீர்பூத்த திருக்கோவ லூரா தீனம்
சிறக்கவைந்தாம் பட்டத்திற் றிகழ்ந்து சைவம்
பேர்பூத்த செந்தமிழோ டோங்க நாளும்
பேசுவிரி வுரைவிரித்த பெற்றி யோனே

பார்பூத்த சைவசிகா மணியென் வாழ்வே
பாருலகி லினியாரைப் பார்க்க கிற்பேன்
தேர்பூத்த செடுவீதிப் புலிசை மேவும்
சீர்ஞானி யாரென்னுந் தெய்வத் தேனே. ௬

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

உனைப்போலத் தமிழ்ச்சைவ மினிதோங்க
வுழைப்பவர்க ளுலகத் தில்லை
உனைப்போல வுயிர்க்குறுதி பயக்குஞ்சொற்
பொழிவாற்ற லொருவ ரில்லை
உனைப்போல அவைத்தலைமைக் குரியரென
விவ்வுலகி லொருவ ரில்லை
உனைப்போல அடியேனுக் கருள்புரிந்த
ஞானகுரு வுலகத் தில்லை. ௨

எந்நாளி லினிக்காண்பேன் இன்னருள்கூர்
திருமுகத்தை யேழை யேனே
எந்நாளி லினிக்காண்பேன் வந்தெப்போ
தெனக்கேட்கும் வாயை யானே
எந்நாளி லினிக்காண்பேன் அருட்டிருநீ
றளிக்குமலர்க் கரத்தை யானே
எந்நாளி லினிக்காண்பேன் மலர்ப்பதத்தை
நாயடியேன் எந்தாய் எந்தாய். ௩

காஞ்சிபுரம் தனக்கினிய சிவதலத்தில்
முதன்மையெனக் கருத்திற் கொண்டாய்
காஞ்சிபுரத் தேகம்பன் காமாட்சி
யம்மைபதம் கலந்தின் புற்றாய்
காஞ்சிபுரத் தனக்குமிக மகிழ்ச்சிதரும்
மெய்கண்டார் கழகம் காணக்
காஞ்சிபுரத் தெந்நாளி லெழுந்தருளு
வாய்பகர்வாய் கருணை வாழ்வே. ௪

## 9

### [பண்டித ரத்னம்-குகஸ்ரீ-புழலை-திருநாவுக்கரசு முதலியார்]

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

கற்றிருப்பா திரிப்புலியூர் ஞானியார்
    மடாலயத்து நலங்கி ளர்மெய்
பெற்றசிவ சண்முகமெய்ஞ் ஞானசிவா
    சாரியராய்ப் பிறங்கும் வாய்மை
உற்றதொரு பேர்க்குரிய கருணையுரு
    வாய்வந்த உழுவ லன்பால்
முற்றுமடி யார்க்குவந்த விசுவாசந்
    தனையூட்டும் முனிவ னெங்கோன். க

மன்னுபுகழ் சிவசமய நெறிபிறழா
    திருக்கவெமை மாண்புற் றென்றும்
பன்னுமுயர் நியாயவழி காட்டியருள்
    புரிந்தாட்கொள் பண்பி னோடு
கொன்னவிலும் புலிசைநகர் மடாதிபதிக்
    குரியதொரு கோலம் பூண்டு
முன்னின்றிங் காதரவு செய்துவந்த
    ஞானியெனு முனிவ னெங்கோன். உ

இனியதமிழ் மணங்கமழும் சொற்சுவையும்
    பொருட்சுவையு மிறும்பூ தெய்த
கனியவருஞ் சருக்கரைநற் பந்தலிலே
    தேன்மாரி பொழிந்த தொக்க
நனிபெருகத் தன்னைத்தான் மறந்துபர
    வசமடைய நல்கும் வான்றோய்
முனிபுங்க வருமேலாய் வியந்துரைசெய்
    நயமொழியார் முனிவ னெங்கோன். ௩

நாடுபுகழ் படைத்தொரு துறவறம்பூண்
டணிபெறச்செய் நன்மைத் தாய
பீடுபெறு முலகியலுக் கொத்தபடி
யுலவிவரும் பெருமி தங்கொள்
ஈடுபடும் பலதுறையு நன்குணர்ந்த
வதிவிரத எழின்மிக் கார்ந்த
மூடுபனி போற்கவர்ந்திங் கெமைப்புரக்கும்
ஞானியெனும் முனிவ னெங்கோன்.

என்பாலன் பாலிருந்த பரிவதனை
யெணுந்தோறும் இதயத் துற்ற
துன்பானின் பிரிவதனை யுளத்தடக்கி
யெப்படிநான் துணிவே னந்தோ
வன்பாலு மறக்கவொணு அளிகுழைத்திங்
கூட்டிவந்த மகிழ்மீக் கூர
முன்பானிற் றுயரியநின் றிருவுருவ
வாஞ்சையமர் முனிவ னெங்கோன்.

தாவரிய கொடுவெந்நோய் தனைத்தந்து
தடுத்தாளத் தகைமை சான்ற
நாவரசர் புறச்சமயப் பற்றகலக்
கரையேற நாடுந் தெய்வ
மேவரிய பரமுத்திக் கரையேற
விட்டனரோ மேன்மைத் தாய
மூவரொடு மணிமொழியின் மகத்துவஞ்சொற்
புலிசைநகர் முனிவ னெங்கோன்.

எத்திசையும் புகழ்பரவ மெய்ஞ்ஞான
பண்டார ஏந்த லாகும்
நத்துமவர்க் கொத்தபடி யுபசாரஞ்
செய்யும்புலிசை ஞானி யார்தம்

உத்தமநன் மடாலயத்திற் குரியவதி
பதியாக உரிமை பூண்டும்
முத்தமிழ்க்குத் தலைசிறந்து நிற்கவல்ல
பேர்பெரிய முனிவ னெங்கோன். எ

கற்பனைக்கிங் கடங்காத இயல்புடைய
அண்ணலெனும் கவின்சேர் வாச
சொற்பரம சிற்பனனென் றுலகமகிழ்ந்
துரைசெயுநற் றுணையா யென்றும்
பொற்பகலா வாய்மைநெறி யற்புதமெய்ஞ்
ஞானியெனும் பெருமை சான்ற
முற்பவத்தின் தவப்பயனே யோருருவாய்
வாய்த்ததொரு முனிவ னெங்கோன். அ

எத்தனைநாள் கேட்கினுமே நவநவமாய்த்
தோற்றுமல்லா விருத யத்து
வித்தகமெய்ஞ் ஞானமது பதியமன
மகிழ்வடையும் வெறுப்ப தில்லை
சத்தியமார் மெய்ஞ்ஞான தானவள்ளல்
புலிசைமடத் தலைவ ராகும்
முத்திசிவ சண்முகமெய்ஞ் ஞானசிவா
சாரியராம் முனிவ னெங்கோன். கூ

திருவேர கம்பழனி தைப்பூச
வலங்கார தூப தீபம்
பெருமிதங்கொள் காட்சிகண்ட பயனிதெனச்
சிவனடியைப் பெற்ற தன்மை
அருமைதவழ் மடாலயச்சாம் பிரதாயப்
படிலிங்க ஐக்கிய முற்ற
முருகனருள் நிரம்பியபே ரன்பிற்கு
வந்ததொரு முனிவ னெங்கோன். க0

கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார்
சொற்கூற்றம் கழறு மந்த
வல்லார்சொன் மறுக்கநின துபந்யாசந்
தனைக்கேட்க வழிப்போக் கர்கள்
செல்லாது நின்றுசெவி மடுப்பரெனில்
மற்றவர்க்குச் செப்பு வானேன்
முல்லைபெற்று நனிசிறக்க அகமகிழ்வோ
டிவணிருந்த முனிவ னெங்கோன். கக

இழுதனலிற் றேயுமா றினிதுமனங்
கசிந்துருக இயம்பு மாற்றால்
பொழுதுபோக் குதலறியா தகம்புறமு
மொத்தபடிப் புக்கி ருக்கச்
செழுமைதரு மினியகுரா லோசைவயம்
பட்டிருக்கச் செயுதி ஞர்வம்
முழுதுமுணர்ந் தவரவர்க்குத் தக்கபடிப்
போதிக்கும் முனிவ னெங்கோன். கஉ

## 10

[தமிழ்ப் பண்டிதர், திரு. வடிவேல் முதலியார்,
தலைவர், கோவல் தமிழ்ச் சங்கம் திருக்கோவலூர்]

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

செந்தமிழின் தாயகமே சிவசமயந்
தனைவளர்த்த செல்வப் பேறே
முந்தியண்ணு மலையையர் பார்வதியம்
மையரீன்ற ஆணி முத்தே
புந்திமகிழ் வுறப்புலிசை கோவனகர்
தனிலுறைந்த புனித வாழ்வே
சிந்தைதளர்ந் தடியேங்கள் அாற்றுமொழி
கேட்டிலையோ செல்வ ரேறே. க

தமிழ்நாடெங் கணுஞ்சென்றே சைவமொடு
தமிழ்ப்பயிருந் தழைக்க வேண்டி
அமிழ்தினினு மினிமையுள சொன்மாரி
பொழிந்திடுநின் னருமை கண்டே
உமைகணவன் கயிலையுள கணங்களுக்கும்
நின்பெருமை உணர்த்த வெண்ணி
இமைப்பொழுதில் உனைக்கவர்ந்தே யமர்கலங்க
மகிழ்வெய்தி யிருக்கின் றாரே. உ

அருணகிரி சிராமலையும் பழநிவெற்பு
மடுத்தேகி யறைந்த வுன்றன்
பெருமைதிகழ் சொல்லமுதை யிப்பிறப்பி
லினிப்பருகப் பெறுகு வேமோ
அருமைபெறு சித்தாந்தத் துட்பொருளை
யெவர்பாற்சென் றணுகிக் கேட்போம்
இருமையினும் பெறற்கரிய தேசிகனே
யெங்கொளித்தாய் இயம்பு வாயே. ௩

இலக்கணங்கற் றோர்பலரும் இலக்கியங்கேட்
டோர்பலரும் இளஞ்சி றாரும்
கலக்கமறச் சாத்திரங்கள் பயின்றோரும்
கவிஞர்களுங் கலைவல் லோரும்
துலக்கமுறுந் தாளணுகி யுபதேச
மதுபெற்ற தொண்டர் தாமும்
அலக்கணுற வாற்றுகின்ற துன்செவிக்குக்
கேட்கிலையோ அந்தோ அந்தோ. ௪

தமிழுலகில் ஞாயிறெனத் தான்விளங்கி
மனவிருளைத் தகர்த்தெ றிந்தாய்
அமுதொழுகு கொண்டலென வவைநிரம்பச்
சொன்மாரி யதுபெய் திட்டாய்

எமையாளும் முருகனென உபதேச
மதுபுரிந்தே யெம்மைக் காத்தாய்
தமையொருவ ரொவ்வாத சற்குருவே
நீசெல்லல் தகுதி யாமோ. ௫

செவ்வேளின் துதிகாணோம் சிட்டருக்கு
மதிபுகட்டும் செவ்வாய் காணோம்
திவ்வியநின் முகங்காணோம் திருநீறு
நல்குகின்ற திருக்கை காணோம்
எவ்வெவரும் பணிகின்ற கழல்காணோம்
வாக்கினது இனிமை காணோம்
எவ்வாறு நினைப்பிரிந்தே இருந்திடுவோம்
ஆற்றகிலோம் என்செய் வோமே. ௬

மெய்யன்பர் களையென்ன விளிக்குமுரை
கேட்கவினி விழைகு வேமோ
செய்வினைக்கண் சண்முகா வெனுமொழியை
இனியும்யாஞ் செவிகேட் பேமோ
பெய்யுமுகி லேயென்னுஞ் சொன்மாரி
தனைமகிழ்ந்து பேசு வேமோ
ஐயநின தருஞ்செயலி லெதைக்கண்டு
இனி மகிழ்வோம் அறைகு வாயே. ௭

சண்முகன்றன் றிருவுருவே இவ்வுருவாய்
எமையாளச் சார்ந்த தென்றே
எண்ணியெண்ணி யுளமகிழ்ந்தே இயம்பவொணா
உவகையினால் இறுமாப் புற்றேம்
புண்ணியா பழநிசென்று முருகன்றன்
திருவுருவிற் புகுந்து நின்ற
வண்ணமுணர் கில்லாமல் வருந்துகின்றோம்
எமையாள வருகு வாயோ. ௮

சீமுகவை காசியதி மூலமதிற்
செனித்திட்டாய் சேர்வி ரோதி
வாமகார்த் திகைநாளில் மடாலயத்தின்
தலைமைதனை மகிழ்ந்தே யேற்றாய்
தூமொழியால் தமிழ்நாட்டை மகிழ்வித்தாய்
ஆயவிசு ஸதாப்பு சத்தில்
சேமமிகும் இறைவனடி சேர்ந்திட்டாய்
எமர்வாழச் சிந்திப் பாயே. க

## 11

[ஆ. பா. அரங்கைய பத்தர்,
ஞானியார் மாணவர், திருப்பாதிரிப்புலியூர்]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

உலகமெலாம் உணர்வரிய ஒருவன் தானே
உயிர்செய்யும் தவங்கருதி உணர்விப் பானும்
பலகலையும் படைத்தருளிப் பாரில் வந்து
பலபடியாம் பக்குவத்தைப் பகிர்ந்து நாடி
அலகிலபல் வடிவுபெயர் அடைவே கொண்டான்
அவற்றிலொன்றே புலிசைவரும் அரிய ஞானி
இலகொளிசேர் இவன்செய்பெருந் தொழிலை இங்கு
இசைக்களவி தன்றன்றே என்னென் போமே.

எந்நூலை எப்பொழுது எவர்கேட் டாலும்
இசைந்தபடி மொழிந்திடுவான் பேச நின்றால்
பைந்நாகத் தலைக்கணிந்தான் தோற்றம் போல்வான்
பகர்ந்திடுநற் சகலகலை புராணம் வேதம்

இந்நானி லத்துமறைச் சொற்க ளெல்லாம்
எனைசொலெனைச் சொல்லென்றே எதிரே நிற்கும்
செந்நாக்குப் புலவர்களும் தீயோர் நல்லோர்
சேர்ந்துபயன் பெற்றுயர்வர் சிறக்கக் கேட்டே. ௨

தவஞ்செய்தோர் பக்குவத்தைத் தனியே காண்பான்
தன்னருளைக் கொடுத்துய்யுந் தகுதி செய்வான்
பவந்தொலைக்க வேண்டுவதோர் பாகஞ் செய்வான்
பார்த்திடுவான் தீண்டிடுவான் பவள வாயால்
சிவந்தருமோர் மொழிமொழிவான் செம்பைப் பொன்னாச்
செய்பவர்போல் சீவனையும் சிவனாச் செய்வான்
உவந்தமுகத் தோடிருப்பான் ஒருவன் காட்சிக்
குலகெளியன் ஐயமெலாம் ஒழிப்பான் ஆமே. ௩

கேட்டலெனும் அடிஞானந் தோன்றச் சொல்லும்
கேடிலரும் பெருமூர்த்தி நிளர்நல் ஆசான்
நாட்டிலுயிர் தனக்குள்ளே சிவத்தைக் காட்டி
நலம்பெறவே உயிர்காட்டி உலகைக் காட்டி
சேட்டிதனாந் தன்னிலைமைத் தெளியக் காட்டி
சீர்பெறவே எங்குந்தான் ஆவான் காட்டி
வாட்டமிலா நிலைகாட்டி வாழ்வு காட்டி
வடிவமெலாம் நிருவிகற்பாக் காட்டு வானே. ௪

நாலாஞ்சத் தினிபாதம் நம்மில் நாடில்
நான்சொல்லும் பொருளதனைச் சிந்தி என்பான்
மேலாகும் நிட்டையிலே விருப்புச் செய்வான்
மிகுந்திடும் பற்றெல்லாம் மேவாச் செய்வான்
சேலாருந் திருப்புலிசைச் செல்மின் விசுவின்
தைப்பூசத் திலிங்கவடி வானான் காண்பீர்
மாலாரும் மகிதலத்தீர் சீவன் முத்தி
வழங்கிடுவன் வம்மினீர் வணங்கு வீரே. ௫

## 12

[வித்துவான் S. துரைசாமி ஐயர்,
ஆசிரியர், சிவஞானபாலயசுவாமிகள் தமிழ்க்கல்லூரி, மைலம்]

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

அந்தோநம் ஞானவிறை தமிழரசி
சொல்மணிநஞ் சைவ வேந்து
அந்தோதம் பெயர்க்கேற்ப அரன்மகனின்
பூசவிழா கண்ட அன்றே
அந்தோநந் தலைமகன்(று) அரன்வடிவிற்
கலந்ததனை அறிய லுற்றே
அந்தோயாம் செயலழிந்து மனமழிந்து
துயர்க்கடலுள் அமிழ்கின் றேமால். க

பல்லுயிரும் நின்மொழிகேட் டன்புகொடு
பரஞானம் படர்தல் கண்டு
அல்லலொடு தன்னரசு அழிவெய்தும்
எனக்கலங்கி அற்றம் பார்த்து
கொல்லுயரும் கூர்வடிவேற் கூற்றுவன்றன
குறைமுடிப்பான் குறுகி வந்து
ஒல்லுயரும் புகழுடனே உடலிருக்க
உயிர்பிரித்து உண்டான் போலும். உ

இரும்பன்ன மனத்தாரும் இருமூன்று
மதத்தாரும் எழிலார் நின்சொல்
கரும்பன்ன அமுதன்ன இனிதருந்தி
இன்புறுதல் கண்ணிற் கண்டோ
அரும்பன்ன மேனியர மகளிரொடு
உம்பர்குழாம் அணுகிவந்து
இரும்பன்ன காபரணன் எனவாழ்த்தி
விசும்பிற்கொண் டேகி னரோ. ௩

துடுக்கான இடக்கர்பலர் சொல்லாடல்
புரியவரின் சோர்வொன் றின்றி
வெடுக்கான பதிலின்றி மென்சொலினால்
அவர்நாண மெய்ம்மை செப்பி
கடுக்கான துறைகண்டன் கழல்பாய்
வீற்றிருக்கும் கருணை வாழ்வே
கெடுக்கவரு துயரகற்ற இனுஞ்சின்னாள்
நின்மொழியைக் கேட்டி லேமால். ௪

வாட்டமுற்றுத் தனைநோக்கும் வான்பயிரைப்
பேணாது வாரி சென்று
கூட்டமுற்றுப் பெயும்புயலின் மாறுகொடு
நின்வரவு குளிர்ந்து நோக்கும்
நாட்டார்கள் நாடார்கள் தலைமயங்க
நற்சைவப் பயிரை யூன்றித்
தேட்டமுற வளர்த்திடுநின் தேன்மொழியாம்
பெருமழையைச் செப்பற் பாற்றோ. ௫

அந்நாளில் ஆயர்மனை பலர்தந்தம்
மீதுமிகு அன்பு கொண்டோன்
பண்ணுகந் தனிற்றுயிலும் பரந்தாம
னெனக்கூறும் பண்பு போல
இந்நாளில் இவ்வுலகில் எம்மெம்மீ
தன்புமிகும் எழிலோன் என்று
சொன்னாலும் பலர்பேசச் சொல்லாடும்
நின்செயலைச் சொல்லப் போமோ. ௬

முதுக்குறைவிற் குமரகுரு பரனென்கோ
சிவஞான முனிவ னென்கோ
மதித்திடுகற் பனைக்கடலாஞ் சிவப்பிரகா
சப்புலவர் மணிதா னென்கோ

புதுப்புலவர் தருக்ககற்றுங் கச்சியப்ப
முனிவனெனும் பூமா னென்கோ
விதுக்குறைசேர் முடியோன்றன் றொண்டர்கதை
சொல்சேக்கி ழாரென் கோமால். எ

கல்வியினு லுயர்கந்த சாமிதனைப்
பீடமதிற் கருணை யோடு
செல்வியருள் பெருகவென வைத்துலகில்
புகழ்திறவிச் சென்று யேனும்
மல்குசிவ ஞானமுதற் சித்தாந்த
சாத்திரத்தின் மாண்மை யெல்லாம்
பல்குமிருள் அகன்றோட இனிதுரைசின்றுள்
செப்பினுளம் பதைக்கி லேமால். அ

நச்சினவர்க் கினியவனே நல்லவனே
அடியார்க்கு நாவின் வேந்தே
மெச்சஇளம் பூரணனே மேன்மைமணி
வாசகனே மேலோர் விட்ட
இச்சைதவிர் குணக்குன்றே எந்நாளும்
குறையாது வந்தால் நின்றன்
விச்சைமுதற் புகழனைத்தும் மேதினியில்
வாழ்கவென வேண்டு வோமால். கூ

## 13

[க. வெள்ளைவாரணன்
ஆசிரியர், தமிழ்க் கல்லூரி, கரந்தை]

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

காரிருளில் வழிநடப்போர் களிக்கத் தோன்றிக்
கதிர்நிலவைப் பொழியுமொரு குளிர்வெண் டிஙகள்
மாரிநாள் நள்ளிரவில் வழிப்போ வார்தாம்
வருந்திடவே மலைமறையுஞ் செய்தியேபோல்

பார்பரவ முருகனருட் பரிசு போற்றிப்
பைந்தமிழைப் பரப்பிநலம் பாலித் திட்ட
ஆர்வமிகு ஞானியா ரடிக ளென்னும்
தமிழ்த்திங்கள் பொதினிமலை மறைந்த தந்தோ ! ௧

உலகமெலா மிருணீங்கப் பொருள்கள் தோன்ற
ஒளியுதவு கதிரேபோ லுயிர்க ளுள்ளத்
திலகுமல மறநீக்கி யுறுதி காட்டி
யின்றமிழா லுணர்வூட்டும் எங்கள் தோன்றல்
பலகலையுங் கற்றுணர்ந்தவ் வாறியி னிற்கும்
பண்புடைய தமிழறிவர் பாரோர் போற்றக்
குலவியமெய்ஞ் ஞானியா ரடிக ளென்னுங்
குணக்குன்றம் நமைப்பிரிதல் கொடுமைத் தந்தோ ! ௨

மாறுபடுஞ் சமயமெலாம் நுனித்தா ராய்ந்து
மக்களைநல் வழிப்படுத்தும் மாண்பார் செம்மல்
தேறுநிலை யறியாதா ரிலரின் றென்ன
வூர்தோறுஞ் செந்தமிழே செழிக்கச் செய்தோய்
ஆறுலவு செய்யசடை யைய னென்ன
அவனருளும் செவ்வேள்த னருளை போற்றும்
பேறெனவே மதித்தொழுகு பெரியோய் எம்மைப்
பிரிந்துறைதல் நின்னருளின் பெற்றியாமோ ! ௩

அருள்பழுத்த திருமுகத்தெம் மடிக ளேநும்
அன்பருளத் திடர்தீர்க்கும் ஆர்வ நோக்கும்
மருள்வழித்தாம் நெஞ்சினரும் மயக்கந் தீர
வாய்மைநெறி காட்டியவர் வணங்கு மாற்றால்
தெருள்பழுத்த விரிவுரையுஞ் சேர்வார் தங்கள்
நலம்வேண்டித் திருவருளை யிறைஞ்சிச் செப்பும்
பொருள்பழுத்த வாழ்த்துரையும் இனியார் கண்யாம்
போய்பெறுவ தறிகிலோம் புகல்வீர் கொல்லோ ! ௪

வள்ளுவர்சொல் பொதுமறையைப் போன்று பல்லோர்
வளமுறநற் றமிழ்மழையைப் பொழியுங் கொண்டல்
எள்ளலிலா நின்னுரையி னேற்றங் காண்போர்
இதுமுருக னருளெனவே நினைப்ப ரன்றிக்
கொள்ளுவரோ வேறாக யாமென் செய்வோம்
கோவல்நக ராதீனக் குரிசில் எங்கள்
வள்ளல்முரு கிறைபொதினி வருதிற் கண்டு
வழிமறித்துக் கொண்டாரே தமிழர் வாழ்வே. ௫

## 14

[வித்துவான் - முருக. இலக்குவனார்]

அறுசீர் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

பெருக்கோவிட் டலையிரங்கும் பாதிரிநீள்
புலியூரிற் பிறங்கி நின்ற
திருக்கோவ லாதீனத் திருமடத்தின்
தலைவனெனத் திகழ்ந்த ஞானி
வரிக்கோல வண்டரற்றும் கடம்பனார்
மலரடிக்கே மலர்ந்த மாண்பன்
இருக்கோவிட் டறிவரிய இறையவனார்
நெறிவளரப் புரந்தான் எந்தை. ௧

அள்ளிலைய வேல்முருகன் புகழ்மணக்கும்
வாய்மலரான் அருள்சேர் கண்ணான்
வெள்ளிமிளிர் தொடித்தலைய விழுத்தண்டின்
கைம்மலரான் வேதம் வல்லான்
தெள்ளியனாம் எங்கள்பிரான் திருநாவுக்
கரசரெனும் சிவவே டத்தான்
கள்ளவிழ்பூங் கொன்றையணி சிவனார்தங்
கழலிணையே கருதும் சீரான். ௨

பழநிவளர் குமரவேள் தனைக்காணப்
பரிவினொடும் பறந்து சென்றான்
செழியனைபங் தமிழிலவன் புகழ்விரித்துச்
சிந்தைநிறைந் தெழுந்த அன்பாம்
முழுவெள்ளக் கடலாடி முன்னோனை
முருகோனை முறைவ லம்வந்
தழுதழுது கம்பித்துப் பிரியாது
பிரிந்துவழிக் கொண்டான் ஐயன். ௩

காளத்தி மலைபிரிந்த கண்ணப்பன்
எனக்கசிந்து கண்ணீர் வார
நீளத்தே வரும்வழியில் மலைநோக்கிக்
கைகுவித்து நிறைந்தான் மாந்தா
நாளொத்த தைப்பூசம் அவன்றனக்கு
நன்னாளாய் ஞாலத் தோர்க்கு
வாளொத்து நெஞ்சம்போழ்ந் துயிரெல்லாம்
சுடுநாளாய் மாறிற் றன்றே. ௪

எங்களுக்கோர் அடிகளுளார் என்னகுறை
இனிநமக்கென் றிறுமாப் புற்றே
மங்கலமார் சிவவேடங் காண்டோறும்
மனமுருகித் தழைத்த மாந்தர்
எங்கினிப்போய்க் கண்டிடுவேம் என்றினியாங்
காண்பேமென் றேங்கி எங்கிப்
பொங்குதுயர்க் கடல்வீழ்ந்து புன்கணீ
ருகுத்திங்கே புலம்பு கின்றார். ௫

வெண்ணீறு திலகமொடு மிளிர்கின்ற
திருநுதலு மேவும் ஊசல்
தெண்ணீர்ப்பொன் மணிமகர குண்டலங்கள்
தழைசெவியும் செம்பொன் மேனி

தண்ணூலிற் றொடுத்தசைய மணியிலங்கத்
தடமார்பும் நோக்கிக் கண்டோர்
கண்ணீரில் நனைந்திட்டார் அவ்வுருவைக்
காண்கின்றார் கலங்குகின்றார். ௬

கடல்போலப் பெருமக்கள் கூடியபே
ரவையோரும் காணுங் காலை
உடலுயிரா தியவெல்லாம் மறந்துண்மை
உணர்வூறி வழியுங் காலத்
தடல்விடையா னுருவெதிர்ந்த உயிர்த்தொகைபோ
லாமென்னின் அடிய ரெங்கள்
கொடிமொழியாள் அவனுடைய சொல்வன்மை
தனைவிரித்தல் நோன்மைத் தாமே. ௭

அறிவின்றி உணர்வின்றி ஆக்கைக்கே
இரைபோக்கி ஆராத் தீய
வெறிகொண்டு திரிகின்ற வெற்றரெல்லாம்
குரவரெனப் பீட மேவி
நெறிகொன்றார் மொழிகொன்றார் எனுமுண்மை
தனையுணர்ந்த நிமல னெந்தை
நெறிநின்று சமயமொடு தமிழ்தழைக்கு
மாமுகிலாய் நிலவ லுற்றான். ௮

அருள்ததும்பு திருவிழியும் தமிழ்ததும்பு
மலர்வாயும் அயில்வே லங்கை
முருகுநிறைந் தொழிவின்றிப் புறம்பொழியும்
திருமணமும் முழுவெண் ணீறும்
குருமணியும் மவிர்தெய்வக் குருமணியாய்
விளங்கியஅக் கோலம் போற்றி
ஒருபொழுது மறவாது சிந்திக்கு
மதுவல்லாற் செயல்மற் றுண்டோ. ௯

வாழிசிவ சண்முகமெய்ஞ் ஞானசிவா
சாரியன்சே வடிகள் மல்கி
வாழியவ னருள்கொண்டு வளர்கோவ
லாதீனம் வளமிக் கோங்கி
வாழியவ னடியார்கள் வாழிதமிழ்ச்
சைவநெறி வாழி வாழி
வாழிமணி மயிலூரும் வேலவன்ற
னருள்மலிக ஞால மெல்லாம். ௧0

## 15

[வித்வான் A. R. முத்தையன், ஆசிரியர்,
C. D. நாயகம் பள்ளிக்கூடம், தியாகராய நகர்]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

அந்தோநம் அருட்கடலே அடியார்தந்
தவப்பயனே அகன்று நின்றாய்
அந்தோசெந் தமிழ்த்தாயின் அருங்குமா
அன்புநெறிப் பெருங் குரவ
அந்தோஎஞ் சண்முகனே அருங்குருவே
தேசிகனே அவனி மீதில்
அந்தோநின் றனைப்பிரிந்தோம் ஆற்றகிலோம்
இத்துயரம் அடிகள் ஐய. ௧

நந்தமிழர் நலம்விழைந்த நஞ்செல்வன்
தனைப்பிரிந்தோம் நாளும் போற்றி
செந்தமிழ்க்கே யுயிர்வாழ்ந்த எம்புலவன்
புரவலனை இழந்து நின்றோம்

எந்தமுயிர் *கோவிந்தன் தேசிகனும்
எமைத்துறந்தார் இவரோ டின்றி
அந்தமில்சீர் அடிகளரும் அகலலுறின்
இனித்துயரம் ஆற்றேம் ஐய.

உளமுருக்கி உடலறுக்கும் ஒப்பில்திரு
வாசகத்தை உன்னுந் தோறும்
உளமுருக உடல்பொடிப்ப உகவிழிகள்
நீரொழுக உரைக்கு மாற்றல்
உளமினிக்க வுணினிக்க உயர்செவிகள்
தாமினிக்க உண்டோர் மீண்டும்
உளமுவப்பக் காண்பதெவண் கேட்பதெவண்
மற்றதனை யுரையாய் ஐய.

பண்புற்ற உளத்தினருங் காணாத
பலபொருள்கள் பகர்ந்து நின்றாய்
எண்ணுற்றுக் கொடுவந்த இந்திமொழி
மறுத்துரைத்தாய் இரும்பு விக்கோர்
கண்ணுற்ற தமிழ்மொழியைக் கற்பித்தாய்
கல்லூரி தனையுங் கண்டாய்
எண்ணுற்ற குரவருள்நின் னெறிநின்று
புகழடைந்தார் எவரே ஐய.

அறியாத சிறுவனிவன் அடிகள்தாம்
ஆண்டருளல் வேண்டு மென்றே
நெறியாதும் பிழையாத பெரும்புலவன்
எந்தலைவன் நேர்ந்து நிற்க

*கோவிந்தன் - அண்ணாமலைப் பல்கலைக் கழக வரலாற்று விரிவுரையாளர், தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர் ச. க. கோவிந்தசாமி, M. A., தேசிகன் - திருவையாற்று அரசர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் வித்துவான் தி. கு. சோமசுந்தர தேசிகர்.

குறியாகக் கொண்டருளிக் குறுநகையும்
புரிந்தருளிக் கொடுத்த நீற்றை
அறியாதேன் அணிந்ததுவும் அடிகளுரை
புகன்றனவும் அகலா ஐய. ௫

ஆண்டுவிழா வெள்ளிவிழா அனைத்தலைமை
ஏற்றருளி அடிகள் கூறும்
காண்டகுசீர் நுண்பொருள்சேர் விரிவுரையும்
தமிழ்நாட்டுக் கழகந் தோறும்
ஆண்டுகளில் தலைமையுரை யாற்றுவதும்
அடியேங்கள் இனிக்கே ளாதே
மாண்டகுநீ மறைந்ததுவும் மறலியுயிர்
கவர்ந்ததுவும் வழக்கோ ஐய. ௬

மார்க்கண்ட னுயிர்கவர்ந்து மறலியுயி
ரிழந்ததுவும் மறந்தான் கொல்லோ
ஆர்க்கின்ற கடலுலகின் அருந்தமிழின்
பெருமணிகள் ஆய்ந்து கொள்ளப்
பார்க்கின்ற அவனதுயிர் குடித்திடுவன்
எமதிறைவன் பகைவெல் வேலான்
சூர்தடிந்த குமரனெனச் சொல்லிடுவீர்
முருகனென மறலிக் கைய. ௭

தமிழ்த்தாய்தன் தவப்புதல்வன் தனிக்குமரன்
தலைமகளைப் பிரிந்து நிற்க
தமிழ்நெறியாம் அன்புநெறி தம்மருமைக்
குரவனின்றித் தனித்து மாழ்க
தமிழடியார் தம்குருவைத் தருஞானப்
பெருந்திருவைக் காணு தேங்க
தமிழர்கள்தம் அறிவுதரும் பேரொளியை
இழந்துழந்தார் தகவோ ஐய. ௮

## 16

### [தாராபுரம் - நா. ஆறுமுகம் பிள்ளை]

நேரிசை யாசிரியப்பா

கங்கையு மதியும் பொங்கரா வணியுங்
கொன்றைமா லிகையுந் துன்றுசெஞ் சடையும்
நெற்றியிற் கண்ணும் செற்றமா வேங்கையின்
அதளுரி ஆடையும் அங்கையிற் றுடியும்
ஏந்துவாள் மழுவும் வாய்ந்தமான் மறியும்
கண்டக் கறையும் கரந்தன் பூறும்
மெய்யடி யவர்கட் குய்வகை யுணர்த்தித்
துன்பம் போக்கி யின்பவீ டேற்றத்
திருவுளங் கொண்டிங் குருவள வொருகை
யானையைக் கொண்டே யானையைப் பிடிக்கும்
பான்மையின் மக்கட் படிவந் தாங்கி
அன்னந் தாவும் அணியார் பொழிலிற்
பொன்னுந் தாது புன்னை சொரியும்
பொலந்திகழ் பாதிரிப் புலியூர்க் கண்ணே
சிவம்பொலி கோலச் சிவசண் முகமெய்ஞ்
ஞான சிவமெனும் நாமம் பூண்டு
வந்தருள் நாயக மாதவத் தலைவ,
அந்தணர் சடங்கவி யார்திரு மகளின்
திருமண மங்காட் சிதைத்தது மன்றி
மானக்கஞ் சாறர் மகள்மண நாளில்
நானக் குழலை நல்கென அரிந்து
பெற்றது மாங்குளார் பேசுவர் உலைவாய்
மூடலாம் ஊர்வாய் மூடலு மாமோ ?
ஓதுமிவ் விழிப்புரை காதிடைப் புகத்தலை
குனிந்திட நேரு மனந்தடு மாறும்
இவையெலா நினைந்தோ, நவையில் சிராப்பள்ளி
தாயாய் வந்து தலையளி செய்த

தலமா கையினுற் றந்தையாய்ச் செலன்
முன்னை வழக்கொடு முரணல் கருதியோ
விரவுபல் கலையுங் குரவநின் பாற்கேட்
டோதி யோதி யுணர்ந்தநன் மங்கை
மன்றலுக் கேகிலை ? மன்றே பழிநிக்
குன்றிடை விளங்குங் குமரற் கண்டபின்
ஞானந் துறந்து கோலத் துறவின்
சொற்பொருள் காட்டிச் சிற்பர வெள்ளி
வெற்பிடைச் சென்றனை, வித்தக, இதனுல்
உற்ற பெருங்குறை சொற்றிட லெளிதோ ?
சைவம் வளர்க்குந் தவத்தின ரெங்கே ?
நீற்றொளி பரப்பும் பேற்றினர் எங்கே ?
வடமொழிக் கடலுந் தமிழ்மொழிக் கடலும்
நிலைகண் டுணர்ந்து விலைவரம் பறியா
அறிவொளி வீசிச் செறிதரு மணிக்குவை
யெடுத்து நிரல்படத் தொடுத்து மகிழ்வின்
எல்லா ருக்கும் இசைபெற வளிக்க
வல்லா ராய வள்ளல்கள் எங்கே ?
எங்கு மிலரே யென்செய் வோமால் ?
இதுவோ நின்னருள் ? இதுவோ நின்குணம் ?
ஒருவனின் றனையிழந் துலகம்
எல்லாம் இழந்த புல்லிதா யிற்றே.

## 17

[வித்துவான் - ச. இராமநாதம் பிள்ளை,
தலைமைத் தமிழாசிரியர், உயர்நிலைப்பள்ளி, கல்லக்குறிச்சி]

நேரிசை யாசிரியப்பா

உலகெலாம் இன்றமிழ் இரவி ஒளிர
அலகிலாக் காரிருள் அறவே அகல

செல்வ ரறிஞர் சிறுவர் பலர்க்கும்
கல்விக் கழகம் கவினுற நிறுவி
இன்மொழி யாகும் இயற்றமிழ் பயிற்றி
நன்மாணவரை நலமுறப் பெற்றாய்
பல்லார் தெளியப் பாடம் பகர்தலால்
நல்லா சிரியர்க் குரித்தெனு நவிலும்
எண்வகை யுறுப்பும் எழிலுறப் பெற்று
மண்ணவர் மகிழ விண்ணவர் புகழ
கேட்டார்ப் பிணிக்கக் கேளார் விரும்ப
வேட்பச் சொல்லி விழுப்பயன் பெற்ற
பழநீ என்னும் பழம்பெயர் பூண்டோய் !
பழநிப் பதியான் பழம்பெயர் பலவுள்
சண்முகன் பெயரைச் சால்பொடு பெற்ற
கண்மணி யாமுனைக் காணுறும் போதே
அருங்கலை யாய்ந்து அரும்பொரு ளுரைக்கும்
பெரும்பணி பூண்ட பெற்றியு முணர்குவர்
தேனினு மினிய செந்தமிழ் வழங்கலால்
ஞானியார் எனவே ஞாலம் புகழும்
நன்மணி யிழந்த நாகம் போல
துன்புறு வோர்தம் துயரம் பாராய்
செந்தமிழ் அமுதம் சிந்தையின் மாந்திய
பைந்தமிழ்ப் பாவலர் பல்பய னற்றனர்
தனக்கென வாழாப் பிறர்க்கென வாழ்ந்த
நினக்கென வியற்றும் நீளற முண்டோ ?
நின்னை வணங்குத லன்றி நின்பாற்
பின்னைப் புரியும் பெருஞ்செய லுளவோ ?
வாழ்த்துத லென்பது வாய்மை யாமோ ?
தாழ்த்துவன் சென்னி தாமரைத் தாட்கே
வாய்மொழி சிறந்த வள்ளால் ! நின்னடி
தூய்நல மிருந்த துறவோய் ! நின்னடி

வாழ்க ! நின் னன்பர் வானவர் விழைய
வாழ்க ! ஆழி வாழ்க ! நல்லறம்
வாழ்க ! நின்சொல் வளம்பெற
வாழ்க ! நின்சீர் வாழ்க ! வாழ்கவே ! !

## 18

[சைவப் புலவர், வழக்கறிஞர் - நா. ஏகாம்பரம்,
வட்டுக்கோட்டை யாழ்ப்பாணம்]

நேரிசை யாசிரியப்பா.

உலகெலா முதவிய மலமிலா வொருவன்
அருள்தர விருக்கும் மலைபுரை கோயிலும்
தவத்தின ருறையுந் தகைவுறு மடங்களும்
செந்நெலே கன்னலாய்க் கன்னலே கமுகாய்
வளஞ்செறிந் தியலும் வயல்சால் மருதமாய்
விளங்கு கோவலூ ராதீனத் தலைவ !
கைலாய பரம்பரைக் கற்பகக் களிறே !
உத்தமர்க் கெல்லா மொருபெரு மணியே !
ஞானியார் பெரும ! சண்முக குருவே !
அடிகளைக் காணு மவாவுட னிருந்தேன்
எண்ணிய வெண்ணம் முடிக்குமு னெந்தாய் !
எங்க ளொளித்தாய் ! எந்தாய் ! எந்தாய் !
அறுதிய பற்றிய ஆணவ மென்னும்
கள்ளிருள் தன்னில் நாம்நின் றலையவும்
எள்ளள வேனு மிரங்கா தெமக்கே
ஒல்லையி லோடி யொளித்தாய் அந்தோ !
முழுமதி யன்ன ஒளிபெறு முகமும்
விளங்குமுத் தன்ன உளங்கவர் முறுவலும்
திருவருட் பொலிவும் திருநீற்றுக் கோலமும்
மாலை மார்பும் மணித்தாழ் வடமும்

காண்ப தெப்போ ! கவின்பெறு விளக்கே !
திரிபுர மெரித்த விரிசடைக் கடவுள்
குறுமுனிக் கருளிய கோதில் செந்தமிழ்
எம்மவர்க் கினிப்ப வூட்டுவ தினியார் !
பன்னிரு திருமுறைப் பாக்களிற் புதைந்த
நுண்பொரு ளெடுத்து நுவலுவ தினியார் !
ஈரேழ் சாத்திரச் செம்பொரு ளெடுத்து
விரும்பிய வண்ணம் விளம்புவ தினியார் !
காணினுங் கேட்கினுங் கருதினு மினிக்குஞ்
சேக்கிழார் செய்த தீந்தமிழ்க் காதையை
எங்களுக் கன்புட னியம்புவ தினியார் !
ஆலவாய்ச் சொக்கர் ஆடிய ஆடல்கள்
செவ்வனே யெடுத்துச் செப்புவ தினியார் !
கதிரைப் பதியுறைக் கந்தவேள் மாக்கதை
நலம்பெற வெடுத்து நல்குவ தினியார் !
இப்பெரும் பணிக ளிவ்விடத் திருக்க
இவற்றினை விடுத்தே கினை யெந்தாய் !
சைவமுந் தமிழுந் தழைத்தினி தோங்கப்
பாரத நாடு பண்ணிய தவத்தால்
வந்தவ தரித்த வள்ளால்
சென்றெய் தினையோ சிவலோக கம்மே.

## 19

## ஞானியார் சுவாமிகள் சரிதசாரம்

[திரு. வி. உலகநாத முதலியார்]

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

பொன்னிவள நாட்டுதிரு நாகேச் சரத்தில்
புகழ்வீர சைவஅண்ணா மலையா ருக்கும்
மன்னியசீர் பார்வதிக்கும் மகனாய்த் தோன்றி
மாபழநி யாண்டியெனப் பேரும் பெற்றே

உன்னியபா திரிப்புலியூர் மடத்து நான்காம்
உயர்பட்ட மேற்றகுரு வடைந்து மேலாம்
பன்னரிய கலைகளெலாங் கற்றுத் தேர்ந்து
பகரீரெட் டாண்டைந்தாம் பட்டம் மேவி. க

மேவிசிவ சண்முகமெய்ஞ் ஞானி யாராய்
மிளிருலகில் சைவமுதல் சமய மாய்ந்து
தாவில்பெருங் கருணையினால் தரணி யுய்யத்
தண்ணளியால் சொன்மாரி பொழியுந் தொண்டில்
நாவரசாய்க் கருதுகுரு நாத ஞான
ஞானியார் தைப்பூச நன்னாள் தன்னில்
பாவலர்கள் போற்றுதிருப் பழநி சூடூர்
பணிந்தவன்றன் பதநிழலில் படிந்திட் டாரே. உ

## 20

## அறிஞர்களின் இரக்க உரைகளும், அவையினர்களின் தீர்மானங்களும்

### 1

*ராஜா ஸர். அண்ணாமலைச் செட்டியார்,*
*செட்டிநாட்டு ராஜா அவர்கள்*

சுவாமிகளாரவர்கள் ஒரு தபஸ்வி, சைவம் செழித் தோங்க அரும்பாடு பட்டவர்கள், வாக்கு வன்மை வாய்ந்த வர்கள். தமிழுக்குப் பெருந்தொண்டாற்றியுள்ளார்கள். தமிழ் நாட்டில் பல பாகங்களுக்குச் சென்று மக்களுக்கு நன்னெறியைப் போதித்து வந்தார்கள்.

### 2

*திவான்பகதூர் - கீ. தெய்வசிகாமணி முதலியாரவர்கள்*

சுவாமிகளின் மறைவு தமிழ் நாட்டுக்கு ஒரு பெரும் நஷ்டம் என்பது மறக்க முடியாதது. இதனை வேறு

எவரும் ஈடு செய்யவும் இயலாது. தமிழ்நாடு பொலிவிழந்து நிற்கிறது. சைவ உலகம் தவிக்கின்றது. நல்வாழ்வு பெற்ற பெரியார் அமைதியடைந்திருப்பார் என்பதில் ஐயமில்லை.

3

மகாமகோபாத்யாய
டாக்டர் உ. வே. சுவாமிநாத ஐயரவர்கள் மகனார்

சமாதி நிலையை அடைந்த பெரியவர்களுடைய பிரிவைப் பற்றி என் தகப்பனாரவர்கள் வருத்தமுற்றும் அந்த ஸ்தானத்துக்குத் தக்க கருவியாக அங்குத்தி அமைந்திருப்பதில் மிக்க மகிழ்ச்சியுற்றும் இருப்பதோடு இவற்றைக் குறித்து நேரில் தெரிவிக்கக் கூடாமையால் என்னைக் கொண்டு எழுதச் சொன்னார்கள்.

4

ராவ்சாஹிப் - எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள்

தமிழ் நாட்டின் ஞானதீபம் இப்பொழுது மறைந்துவிட்டது. அது சுடர்விட்டு ஒளிர்ந்த காலத்தில் தமிழ் மக்களுடைய அகத்திருளை நீக்கி, அவர்களை அறிவானந்தத்திலே திளைக்கும்படி செய்து வந்தது. அந்தத் தீபம் இன்று அவிந்ததும் தமிழ் மக்களாகிய நாம் அனைவரும் துன்பவிருளில் வருந்தி மறுகுகின்றோம். ஆனால் சுவாமிகளின் திருமேனிப் பொலிவும், அவர்களுடைய அறிவுச் சுடரும், திருமுக மண்டலமும், உள்ளத்தைக் கொள்ளும் அன்புரையும், சமயவுணர்ச்சியை மக்கட்கு நல்கும் அருளுரையும் நமது நெஞ்சினின்றும் ஒருபொழுதும் நீங்க மாட்டா. நம்மைச் சிவகதிக்கும் உய்விக்கும் தெய்வவொளியாகச் சுவாமிகள் எப்பொழுதும் நிலை நின்று ஒளிர்வார்கள்.

## 5

*வித்துவான் - தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரவர்கள்*

தமிழ் தமிழ் என்று பெருமுழக்கம் எங்கும் கேட்கும் இந்த நாளில் தமிழ்க்கென உழைத்துத் தம்முயிரையும் தந்த ஞானியார் நினைவைத் தமிழுலகம் எவ்வாறு நிலை நிறுத்தப்போகிறது எனப் பிறர் பார்த்திருப்பது இயல்பே. அவர்களும் கண்டு வியக்கும் நிலையில் தமிழன் நடந்து கொள்ள வேண்டும்.

## 6

*பண்டித - ந. மு. வேங்கடசாமி நாவலரவர்கள்*

திருவருட் கலப்புற்ற ஞானியாரடிகளின் பெருமையையும், அவர்கள் மன்பதை உய்தி பெறுமாறு ஆற்றிய அரும் பணிகளையும் சில வரிகளில் அன்று, சில ஏடுகளில் எழுதி விடுதல் அமையா. அங்ஙனமே அவர்கள் பிரிவால் தமிழ் நாடும். சைவ வுலகும், எய்திய இழப்பின் அளவினையும் எழுதுதல் சாலாது. செல்கதிக்குச் செந்நெறி காட்டி வந்த பெரியாரைப் பிரிந்தோம்; அதனை எங்ஙனம் ஆற்றுகிற்போம். இதனை உன்னுந்தோறும்,

> "ஓய்வி லாதன உவமனி லிறந்தன ஒண்மலர்த் தாள்தந்து
> நாயி லாகிய குலத்தினுங் கடைப்படு மென்னைநன் னெறிகாட்டித்
> தாயி லாகிய இன்னருள் புரிந்தஎன் தலைவனை நனிகாணேன்
> தீயில் வீழ்கிலேன் திண்வரை உருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே"

என்னும் திருவாசகம் உள்ளத்தைக் கவர்கின்றது.

உயிர்களெல்லாம் உணர்வு பாழாகிப் பொருள் வழங்கு செவித்துளை தூர்ந்தறிவிழந்து தடுமாறு காலையாகிய இஞ்ஞான்று நம் சமயத்திற்கு ஆற்றுந் தொண்டுகளைச் சிந்தித்துத் தெளிவு படுத்துதல் வாயிலாக ஞானியாரடிகள் நினைவை நிலை பெறுத்துதல் வேண்டும்.

7

கி. ஆ. பெ. விசுவநாதனுரவர்கள்

தமிழ் நாட்டிலிருந்து வந்த இந்திய நாட்டு நிலையம், அறநெறியை எடுத்துரைக்கும் தனிப் பேராற்றல், ஒழுக்கத்தின் திருவுரு, தவநெறிச் சிவச் செல்வம், வாய்மையின் தலைமை, அன்பு ததும்பும் திருமுகம், திருமுருகனின் செல்வக் குழந்தை நம்மை விட்டுப் பிரிந்தது இந் நாட்டிற்கு ஏற்பட்ட பெருங் குறையே யாகும்.

8

சா. கணேசனுரவர்கள், கம்பன் கழகம், காரைக்குடி

தமிழுக்காகவும் சைவத்திற்காகவும் திக் விஜயம் செய்து ஜெய வீர கோஷம் முழங்கிய ஞான கேசரியான ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளை எந்த ஒரு தமிழனும் சைவனும் மறக்க முடியாது. தமிழையும் சைவத்தையும் தமதிரு கண்ணெனப் போற்றி வந்த புலவர்மணி. அவர்கள் பேசத் தொடங்கி விட்டால் உயர்ந்த கருத்துக்கள் : நல்ல அமைப்போடு வெகு கம்பீரமான பாஷையில் துள்ளி வந்து அலை அலையாய் மோதும்.

9

சு. அண்ணாமலைப் பிள்ளையவர்கள்,
வட்டுக்கோட்டை, யாழ்ப்பாணம்

அந்தோ ! இனி எப்போது அடிகள் திருமுகப் பொலிவையும், அருள் சுரக்கும் வதனத்தையும் காணப் போகின்றோம். அடியேன் அடிகளைச் சந்திக்க நேர்ந்தபோது ஒரு அன்பர் அப்பர் தேவாரத்தில் " புழுவுக்கும் குணம் நான்கெனக்கு மஃதே " என்ற பாசுரத்தின் அர்த்தம் வினவினின்றபொழுது, அடிகள் கொடுத்த விடை " யான் இந்தத்

துறையில் ஆராய்ச்சி செய்யவில்லை" என்றது இன்னும் என் மனத்தில் விளங்கி நிற்கின்றது. ஆய்ந்து, அவிந்து அடங்கிய பெரியார் என்று என் மனம் நிச்சயம் செய்தது.

## 10

சி. பன்னிருகைப் பெருமாள் முதலியாரவர்கள்,
திருவனந்தபுரம்

அடிகளார் கோட்டாற்றுக்கு வந்திருந்தபொழுது ஆங்கிலப் படிப்பினால் மனந்தடுமாறி இருந்த எனக்குத் தக்க காலத்தில் நல்லறிவு புகட்டித் திருத்தினார்கள். அதற்காக அடிகளுக்கு நான் என்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

## 11

மு. அருணாசலம் பிள்ளையவர்கள், பல்கலைக் கழகம், சென்னை

சமயாசாரியர்கள் புறமதம் புகுந்தவர்களைச் சைவத்துக்குக் கொண்டுவந்தமை போலவே, நமது சுவாமிகளும் எண்ணிறந்த நாத்திகர்களையும் சைவராக்கி, திருநீறணியச் செய்து, அக்கமணி யணிவித்து, திருமுறை ஓதச் செய்தார்கள். இனிச் சைவத்துக்கு இத்தொண்டு, செய்வோர் யாவர்? சுவாமிகளைப் போன்ற அறிவு, அறிந்தவற்றிலே தெளிவு, வாக்கு வன்மை, தோற்றப் பொலிவு, சிந்தையிடையறா அன்பு, பொறை, உயிர்கள்மாட்டுப் பெருங்கருணை இவ்வரிய இயல்புகள் யாரிடத்தே யுள்ளன?

## 12

முத்து - மாணிக்க வாசகனாரவர்கள்,
ஐயா நாயகரவர்கள், ஆரணி

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் மீளாவழியை அறிந்து சென்று சிவமாகியதால் அதற்குச் சிறிதும் அறிஞர் வருந்தார்.

வருந்தாராயினும் உலகியலை யொட்டிச் சைவமும் தமிழும் தமிழரும் கொள்கொம்பில்லாக் கொடிபோல அலமரச் சென்ற பன்மொழிப் புலமையும் கடல்மடை திறந்தாலொத்த பொருண்மொழிப் பொழிவும், அருளுருவும், அன்பகமும், பிறநலம் பலவும் இயல்பாகத் திருவருட் குறிப்பாகப் பெற்றிருந்த எங்களாண்டவனார் மறைந்து விட்டது பற்றி எம்மால் வருந்தாதிருக்க முடிந்திலது.

## 13

இ. சிவகுருநாதனாரவர்கள், பரங்கிப்பேட்டை

சைவத்தின் தலைமணியை இழந்தோம். தமிழ்த் தாயின் கண்மணி மறைந்தது. தமிழர் தம் தவவேந்தர் ஒளிந்தார். தமிழ் நூல்கள் தம் காதலரை இழந்து கதறுகின்றன. அருள் நூல்கள் தம் அன்பரை இழந்து அலமருகின்றன. ஆராய்ச்சி உலகம் அறிஞரை இழந்தது. ஏழையேம் வழிகாட்டிய வான்மணியை இழந்தனம்.

## 14

வி. சிவக்கொழுந்து அவர்கள், உசிலம்பட்டி

சுவாமிகளது பிரிவால் சைவ உலகம் ஒரு சமயாசாரியரை இழந்து தவிக்கின்றது. தமிழுலகம் அருந் தமிழ்க் களஞ்சியத்தைத் தோற்று அலமருகின்றனது. தம்மைப் பின் பற்றிய உண்மைத் தொண்டர்களுக்கும் மாணவர்களுக்கும் கண்கண்ட தெய்வமாக விளங்கி, ஞான அமுதத்தை வழங்கும் ஞானியாராக விளங்கினார்கள் அவர்கள்.

## 15

அ. சுவாமிநாத முதலியார், திருவண்ணாமலை

சுவாமிகள் பாடஞ் சொல்லுந் தன்மையில் மாணாக்கர்களிடத்துப் பொருள் அபேக்ஷையின்றிப் பாடஞ் சொல்லுதல் உத்தம சிவதருமம் என்றே கருதி, வந்த மாணாக்கர்கட்கு உரிய காலந்தோறும் அவர்கள் சௌகரியத்தை அனுசரித்தும் சலியாமலும் மிகுந்த பற்றுடன் முக மலர்ச்சியோடிருந்து தமிழில் ஆரம்பக் கல்வி முதல் இலக்கணம், நீதிநூல், இதிகாசம், புராணம், சித்தாந்த சாத்திரம் வரை பாடம் சொல்லி வந்தார்கள்.

## 16

வை. குஞ்சிதபாதம் அவர்கள், சென்னை

அடிகளுடைய அன்பு கனிந்த 'வருக' என்றழைக்கும் இன்மொழியும், புன்முருவலும், விருந்தோம்பி அருள்புரிதலும் ஆகிய அரும் பண்புகள் யார் உளத்தையும் உருக்கும் தன்மை வாய்ந்தன.

## 17

அ. பாலாம்பாள் அம்மையார், பொன்மலை, திருச்சி

அந்தோ ! ஞானத்தின் திருவுருவை, நான் மறையின் தனித் துணையை, மண்ணில்வளர் மதிக்கொழுந்தை, தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியை, புண்ணியத்தின் புண்ணியத்தை, இனி என்று காண்போம் ! " புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் " என்று கூறி, நண்ணரிய சிவானந்த ஞான வடிவேயாகி அண்ணலார் சேவடிக்கீழ் எய்தினரோ !

## 18

சைவ சித்தாந்த சபை, ஆத்துக்குடி.

சைவத்துக்கும் தமிழுக்கும் சுமார் அரை நூற்றுண்டாக அரும்பெருந் தொண்டாற்றி வந்த திருப்பாதிரிப் புலியூர் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் திடீரென உலகை நீத்ததையறிந்து சபையார் ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறார்கள்.

## 19

சைவ சித்தாந்த சபை, திரிசிராப்பள்ளி

திருக்கோவலூர் ஆதீனம் திருப்பாதிரிப் புலியூர் ஸ்ரீ ஞானியார் மடாலயத்து அதிபரும், சைவ சாத்திர வல்லுநரும், தமிழிலும் வடமொழியிலும் பெரும்புலமை உடையவரும், சைவமும் தமிழும் தழைத்தோங்கச் செய்தலே சைவ மடங்களின் முதன்மையான கடமை என்பதைச் செயலிலும் காட்டி வந்தவரும், சமயம் மொழி முதலியவை சம்பந்தமான எந்தப் பொருளையும் மிக மிகத் தெளிவாகவும் எத்துணை மணிநேரம் பேசினும் கேட்போர் சலிப்புறாது விரும்பிக் கேட்கும் வண்ணமும் பேசும் பேராற்றல் படைத்தவரும், தமக்குரிய பூசை முதலிய சைவ ஒழுக்கங்களிற் சிறிதும் வழுவாதவரும், நமது சபையின் ஆண்டுவிழா பொன்விழா ஆகிய இவற்றைத் தலைமை தாங்கி மிகச் சிறப்பாக நடாத்தியருளியவரும், நமது சபையின் ஆக்கத்தில் மிக்க கருத்துடையவருமாகிய ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் இறைவன் நீழலடைந்தமை குறித்து இச்சபையார் பெரிதும் இரங்குகின்றனர். எனினும் அருள்கனிந்த நமதடிகள் இறைவனோடு இரண்டறக் கலந்த பேரின்பப் பெருவாழ்வு

பெற்றிருப்பர் என்பது கொண்டு ஒருவாறு மனஅமைதி உறுகின்றனர்.

## 20

சைவ சித்தாந்த சங்கம், பூவாளூர்

தைப்பூச நன்னாளில் ஒரு திருமுருகன் திருவடியடைந்த புலிசை உயர்திரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளின் ஒப்புயர்வற்ற உபதேச மொழிகளை யுன்னி யுன்னிப் பெரிதும் வருந்தி, அடிகளார் அடிகளை மிகமிக வழுத்துகின்றோம்.

## 21

சைவ சித்தாந்த சபை, பழநி

நம் தமிழகத்திலே செந்தமிழ் வளர்ச்சியும், சைவ சமய வளர்ச்சியுங் கருதிக் கடந்த 53 ஆண்டுகளாகப் பெரும் பணியாற்றியவரும், சமய தீபகராக விளங்கிய வருமான திரு அடிகளார் மூத்தித் தலமென " காசியின் மீறிய பழநியங்கிரி " யென்று அருணகிரிநாத சுவாமிகள் பாராட்டிய இத்தலத்திலே, ஞான தண்டாயுதபாணி சுவாமியின் திருவடியிலே கலந்து இன்புற்றமையைப் பாராட்டியும், துதித்தும் போற்றியும் வழிபாடுசெய்தும் கொண்டாடுகிறது.

## 22

கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

திருக்கோவலூர் ஆதீனத்துத் திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடத்தின் தலைவராயமர்ந்து ஐம்பத்திரண் டாண்டு சமயப்பணி புரிந்த அருட்செல்வரும், இள மாண வர் முதல் முதியோர்வரை தம்மை யடைந்தோர் யாவருக்

கும் தமிழறிவுறுத்திய தவச் செல்வரும், தமிழும் சமயமும் வளர்ந்தோங்குதற் பொருட்டுக் கல்லூரி நிறுவியும், பல நற்கழகங்களைத் தோற்றுவித்தும், யாவரும் உண்மைப் பொருளை எளிதிலுணர்ந்து, நன்னெறியி லொழுகுதற் கேற்ற இனிய அருள்மொழிகளைத் தமிழ்நாடு எங்கணும் பரப்பியும் ஓய்வின்றித் தொண்டாற்றிய பேரருளாளரும், நம் கரந்தை தமிழ்ச் சங்கத்தின் ஏழு, எட்டாம் ஆண்டு விழாவிலும், வெள்ளி விழாவிலும் தலைமை தாங்கி நல்லுரை கூறிப் போற்றிய தமிழ்ப் பெருந்தகையும் ஆகிய உயர்திரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளெனப் பெயரிய அருண்மிகு ஞானியாரடிகளார் அவர்கள் 1 - 2 - 42 ஞாயிறன்று பழநியிலிருந்து எழுந்தருளி வரும்பொழுது திடீரென இறைவன் திருவடி நீழலிற் கலந்து நம்மைப் பிரிந்த செய்தி கேட்டுக் கரந்தைத் தமிழ்ச்சங்க சார்பில் 3 - 2 - 42 ல் கூடிய தமிழ் மக்களனைவரும் ஆற்றொணாத் துயருறுகின்றனர்.

## 23

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்
தமிழ் இலக்கிய மன்றம், சிதம்பரம்

திருக்கோவலூர் ஆதீனம் திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடத்துத் தலைவரும், சிவஞானச் செல்வரும், குலம்குடி கொள்கை என்பவற்றின் உயர்வு தாழ்வும், பால் வேற்றுமையும் பாராட்டாது, யாவர் மாட்டும் பேரருள்பூண்டு, தமிழ்க் கல்வியும், சமய நூலுணர்ச்சியும் வரையாது வழங்கி வந்த வள்ளலாரும், தமிழ் மொழியே யன்றி வடமொழி தெலுங்கு முதலிய பிற மொழிகளில் வல்லுநரும் ஆகிய மறைத்திருவாளர் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய அடிகளார் அவர்கள் அணிமைக்

காலத்தில் பிறவாப் பெருநெறி யெய்தினுர் என்ற செய்தி கேட்டு இம்மன்றத்தார் மிக்க வருத்த முறுகின்றனர்.

## 24

பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ச் சங்கம், சென்னை

மிகச் சிறந்த அறிஞரும், பெரிய சமயத் தலைவரும், பெருந் தமிழ் நாவலருமாக விளங்கிய உயர்திரு ஞானியார் அடிகள் திடீரென நம்மிடையிருந்து மறைந்தமை யால் தமிழ் நாட்டுக்கு உண்டான நஷ்டத்தைக் குறித்து இச் சங்கத்தினர் பெரிதும் வருந்துகின்றனர்.

## 25

சன்மார்க்க சபை, மேலைச்சிவபுரி

தமிழ் நாட்டின் தவப்பயனுய்த் தோன்றிச் செந்தமிழ் மொழிக்கும், சைவ சமயத்திற்கும் சிறந்த தொண்டாற் றிப் பெரும் புகழ்பெற்ற திருப்பாதிரிப் புலியூர் ஆதின முதல்வர் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய அடிகள் 1 - 2 - 42 அன்று பரிபூரண மெய்தியது குறித்துச் சன் மார்க்க சபையார் தங்கள் அனுதாபத்தை மேற்படி ஆதினத் தில் உள்ளவர்களுக்கும், தமிழ்நாட்டு மக்களுக்கும் தெரி வித்துக் கொள்ளுகின்றனர்.

## 26

நகராட்சிக் கழகம், விழுப்புரம்

(Municipal Council, Villupuram)

This Council places on record its deep sense of sorrow at the irreparable loss sustained by the